# சிற்பிக்குள் கண்டெடுத்த முத்துக்கள்

சிற்பகுரு டாக்டர் வை.கணபதி ஸ்தபதி அவர்களின் வரலாறு





இராஜலக்ஷ்மி இராமநாராயணன்

- இந்த நூலின் ஆசிரியர் திருமதி இராஜலஷ்மி இராமநாராயணன் அவர்கள் திரு.கணபதி ஸ்தபதி அவர்களுடன் கடந்த பத்து ஆண்டுகளாகத் தொடர்புடையவர். அவர் எழுதி வரும் புத்தகங்களைத் தட்டச்சு செய்வது, பிழை திருத்தம் செய்வது, அச்சகத்திற்கு அனுப்பி அவ்வப்போது சரி பார்ப்பது போன்ற அனைத்துப் பணிகளையும் அவரது அலுவலகத்தில் செய்து வருகிறார்.

- இவர் தமிழின் மீது பெரும் ஆர்வம் உடையவர். சிறுகதைகள் எழுதுவதில் ஈடுபாடு உடையவர். அமுத சுரபி, சாவி போன்ற பத்திரிகைகளில் இவரது படைப்புகள் வெளிவந்துள்ளன. திரு. கணபதி ஸ்தபதி அவர்களுடன் நீண்ட நாட்கள் பழகி வந்ததால், அவர் கடந்து வந்த பாதைகளைப் பற்றியும், அவர் தன் மரபின் மீதும் அவரது தந்தையார் மீதும் கொண்டுள்ள பக்தியைப் பற்றியும், அவர் சிற்பக்கலைக்கு ஆற்றிய பணிகள் பற்றியும் அனைவரும் அறிந்து கொள்ளும் வகையில் ஒரு நூலாக வெளியிடலாமே என்று திரு.கணபதி ஸ்தபதியிடம் கேட்டார்.

- இவரது தமிழ் ஆர்வத்தைக் கண்டறிந்த திரு. கணபதி ஸ்தபதி அவர்கள், இவரையே அந் நூலை எழுதும்படி பணித்தார். ''கரும்பு தின்பதற்கு எவரேனும் கூலி கேட்பாரோ?'' என்ற கூற்றிற்கிணங்க, பெரும் மகிழ்ச்சியுடன் அதற்கு சம்மதித்து, நூலை எழுதத் தொடங்கி, இதோ முழுமை பெற்ற நூலும் வெளிவந்து விட்டது. அனைவரும் படித்து இன்புறுக!

# சிற்பிக்குள் கண்டெடுத்த முத்துக்கள்

- சிற்பகுரு டாக்டர் வை.கணபதி ஸ்தபதி அவர்களின் வரலாறு

ஆசிரியர் : இராஜலக்ஷ்மி இராமநாராயணன்



"மெய்யொளி உயிரொலி
சிவனுடல் இயல்பே"
*"meyoli uyiroli sivanudal iyalbe"*

தெக்ஷிணா கலைநூற்பதிப்பகம்
46, முதல் அவின்யூ, வெட்டுவான்கேணி, ஈஞ்சம்பாக்கம்,
சென்னை - 600 041. போன் : 2449 1384, 2449 2651
மின்னஞ்சல் : vastuved@md3.vsnl.net.in

விலை : ரூ.200/-

கணினி தட்டச்சு :

திருமதி இராஜலக்ஷ்மி இராமநாராயணன்

படங்கள் உதவி :

திரு.சந்தான கிருஷ்ணன்

திரு.சுப்பையா

திரு.அழகுராஜா



6-5

# பொருளடக்கம்

6-5

# நூலாசிரியர் உரை

- இராஜலக்ஷ்மி இராமநாராயணன்

திரு. கணபதி ஸ்தபதி அவர்களின் வாழ்க்கை வரலாறு என்பது மாபெரும் கடல். அதில் மூழ்கி நல்முத்தெடுக்கக் காத்திருக்கும் அனைவருக்கும் எனது பணிவான வணக்கங்கள்.

அவர் ஒரு சிற்பக்கலைச் சித்தர். உலகமே அறியும் மாபெரும் சிற்பக்கலை வித்தகர். இந்தியாவிலும், உலகத்திலுள்ள பல நாடுகளிலும் அவர் கட்டிய கோவில்கள் கணக்கிலடங்கா. அவர் வடித்த கடவுட் படிமங்கள் ஏராளம். எப்படி ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்பு கட்டப்பட்ட தஞ்சை பிரகதீஸ்வரர் ஆலயம் இன்றும் சிற்பம் மற்றும் கட்டிடக்கலைக்கு ஓர் உதாரணமாகத் திகழ்கிறதோ அது போல அந்த பிரகதீஸ்வரர் ஆலயத்தை நிர்மாணித்த தலைமைச் சிற்பி குஞ்சரமல்லன் இராஜராஜப் பெருந்தச்சன் மரபு வழி வந்த கணபதி ஸ்தபதி அவர்களின் சிற்பங்களும் இன்னும் பல நூற்றாண்டுகளுக்கு உலகின் சிற்பக்கலை அதிசயமாகத் திகழும் என்பதில் ஐயமில்லை.

அவர் ஒரு கட்டிடக் கலை நிபுணர். நமது பாரம்பரியக் கலைகளைப் பறைசாற்றும் நயத்தோடு அவர் உருவாக்கிய அரங்குகளும், மாட மாளிகைகளும் புராண காலத்து மயன்தான் மறுபிறவி எடுத்து வந்து விட்டானோ என்று எண்ண வைக்கும்.

அவர் ஒரு வாஸ்து விற்பன்னர். பாரத நாட்டின் பண்டைய சாஸ்திரமான வாஸ்து சாஸ்திர முறைப்படி அவர் கட்டிய வீடுகள் அழகாக விளங்குவதோடு, அதில் வசிப்பவர்களை மகிழ்ச்சியோடும் நிம்மதியோடும் வைத்துக்கொண்டிருக்கின்றன.

அவர் ஒரு சம்ஸ்கிருத வித்தகர். தமிழ், ஆங்கிலம் ஆகிய இரு மொழிகளிலும் புலமை பெற்றிருப்பதைப் போன்று

சம்ஸ்கிருதத்திலும் பாண்டித்யம் பெற்றவர். வேதங்களையும், உபநிஷதங்களையும் புதிய கோணத்தில் ஆழ்ந்து உணர்ந்து உண்மையான கருத்துக்களை வெளிக் கொணர்ந்தவர்.

அவர் ஓர் அற்புதமான பேச்சாளி. பல்துறை வித்தகர்கள் அடங்கிய சபையோ அல்லது அவரது அலுவலகத்தில் பணிபுரியும் சிற்பக்கலை மற்றும் கட்டிடக்கலை நிபுணர்கள் அடங்கிய குழுவோ அல்லது இலட்சக் கணக்கான மக்கள் கண்டு களித்துக் கொண்டிருக்கிற தொலைக்காட்சியோ எதுவாக இருந்தாலும் அவரது புலமையிலும், அதை அழகுற அவர் விவரிக்கும் நயத்திலும் கட்டுண்டு கிடக்கும் என்பதே அவரது பேச்சாற்றலுக்குச் சான்றாகும்.

அவர் ஒரு விசுவகர்மகுலத்தில் உதித்த நல்முத்து. இராமன் தோன்றியதால் இரகு குலத்திற்கே பெருமை ஏற்பட்டது போல, இவர் தோன்றியதாலேயே விசுவகர்ம குலத்திற்குப் பெருமை எனலாம்.

மேற்சொன்ன எல்லாவற்றையும் விட முக்கியமானது அவர் ஒரு அன்பான மனிதர். மிகச்சிறந்த மனிதாபிமானி. இரக்க சிந்தனை மிக்கவர். எப்போதும் உண்மையே பேசுபவர். பொய் பேசுபவர்களை அவருக்கு அறவே பிடிக்காது.

இந்த எல்லா குணங்களும் ஒன்றாக ஒருவரிடமே அமைந்திருப்பது மிகவும் அரிது. அதனால்தான், அவர் உலகம் போற்றும் மனிதராக, மாமேதையாகத் திகழ்கிறார் என்பதில் ஐயமில்லை. ''மாபெரும் சபையினில் நீ நடந்தால் உனக்கு மாலைகள் விழ வேண்டும். ஒரு மாற்றுக்குறையாத மன்னன் இவன் என்று போற்றிப் புகழ வேண்டும்'' என்று கவிஞர் கண்ணதாசன் கூறியது போல இவரது வாழ்க்கை அமைந்துள்ளது.

அன்னாருடன் ஏறக்குறைய 10 ஆண்டுகளாக அருகில் இருந்து பார்த்து அவரது ஒவ்வொரு அசைவையும், ஒவ்வொரு செயலையும் ஊன்றிப் பார்த்தவள் என்ற முறையில் அவரது வாழ்க்கை வரலாற்றை எழுதினால் அதனைப் படிப்பவர்கள் அதிலிருந்து ஏராளமான படிப்பினைகளைத் தெரிந்து கொள்வார்களே என்ற எண்ணம் என்னுள் வெகு காலமாகவே உண்டு. அதற்கு அனுமதியை அவரிடமே கேட்டபோது மனமுவந்து அளித்தார்கள்.

பத்து ஆண்டுகள் பழகியதாலேயே வாழ்க்கை வரலாறு எழுதிட முடியுமா என்றால் நிச்சயம் முடியாது. அதற்கு அடிப்படையாக மனதில் அதற்குண்டான உத்வேகம் வேண்டும். ஒவ்வொரு சின்னச் சின்ன செயலையும் ஊன்றிப் பார்த்து, அனுபவித்து, இரசிக்க வேண்டும். மிகையாகச் சொன்னால், அதற்கென்று ஒரு வெறி உள்ளத்தில் முகிழ வேண்டும். மேற்சொன்ன எல்லாத் தகுதிகளும் எனக்கு இருப்பதாக நான் நினைத்துக் கொண்டு எழுதினேன். இத்தனை தகுதிகளும் இருப்பவர்களும், ஏன், அதற்கு மேலும் தகுதிகள் இருப்பவரும் கூட முயற்சி செய்யலாம். திருக்குறளுக்குப் பரிமேலழகர் எழுதிய உரையும் நன்றாக இருக்கும், ஜான் யு போப் எழுதிய உரையும் நன்றாக இருக்கும். காரணம் திருக்குறளே நல்லதொரு நூல் என்பதுதான். கற்கண்டு யார் சுவைத்தாலும் இனிப்பது போல, உண்மையான அன்புடன், ஆவலுடன் திரு. கணபதி ஸ்தபதியாரின் வாழ்க்கை வரலாற்றை யார் எழுதினாலும் சிறக்கும்.

இந்த வாழ்க்கை வரலாற்று நூலில் திரு. கணபதி ஸ்தபதியாரின் வாழ்க்கையில் நடந்த பல்வேறு நிகழ்ச்சிகளும், அவரது வாழ்க்கையில் சந்தித்த பல முக்கியமான நபர்களைப் பற்றியும் விளக்கப்பட்டிருக்கும்.

வாழ்க்கை வரலாறு என்றாலே சிறு குழந்தையாய் இருந்த பருவத்தில் இருந்துதான் ஆரம்பிக்க வேண்டுமா என்ன? ஒரு மாற்றமாக இருக்கட்டுமே என்றுதான் பாரதத்தின் முதல் குடிமகன் ஜனாதிபதி திரு. அப்துல் கலாம் அவர்களை திரு. ஸ்தபதி அவர்கள் சந்தித்த நிகழ்ச்சியை முதல் அத்தியாயமாக இடம் பெறச் செய்துள்ளேன். இரசிப்பீர்கள் என்று நம்புகிறேன்.

இந்நூலுக்குத் தேவையான தகவல்களில் பெரும் பகுதி திரு.கணபதி ஸ்தபதி மற்றும் அவரது துணைவியார் திருமதி தெக்ஷிணாவதி அம்மையார் ஆகியோர் அளித்ததாகும். அவர்கள் இருவருக்கும் எனது சிரம் தாழ்ந்த நன்றியை உரித்தாக்குகிறேன். இதைத் தவிர, திரு.ஸ்தபதியைப் பற்றி மேலும் பல சுவையான தகவல்கள் தந்து உதவிய அனைவருக்கும், மனமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன். பழைய படங்களைத் தேடி எடுத்துத் தந்தும், ஸ்தபதியே மறந்து போன சில விஷயங்களை அவருக்கு நினைவூட்டிக் கொடுத்தும் உதவிய திரு.சுப்பையா அவர்களுக்கும் மனமார்ந்த நன்றியைத் தெரிவிக்கிறேன். இவர் திரு. ஸ்தபதியுடன் நீண்ட நாள் கூடவே இருந்தவர். சில அரிய புகைப்படங்களைத் தந்து உதவிய திரு.சந்தான கிருஷ்ணன் அவர்களுக்கும் நன்றி உரித்தாகுக!

ஒரு மாமேதையின் வரலாற்றை எழுதுவது என்பது எனக்குக் கன்னி முயற்சி. எனவே, தவறுகள் எதுவும் இருப்பின் மன்னித்தருளும்படி கேட்டுக் கொண்டு என்னுரையை நிறைவு செய்கின்றேன்.

அன்னாரது வாழ்க்கைப் பயணம் (வரலாறு) தொடங்கட்டும்!

மேலும் தொடரட்டும்!

வணக்கம்!

நூலாசிரியர்

## டாக்டர்.வை.கணபதி ஸ்தபதியின் துணைவியார் திருமதி தெக்ஷிணாவதி அம்மையாரின் ஏற்புரை மற்றும் பாராட்டுரை

எனது கணவர் டாக்டர்.வை.கணபதி ஸ்தபதி அவர்கள் உலகப் புகழ் பெற்று நாடறிந்த கலைஞர் என்றாலும் அவருடைய 77 ஆண்டு வாழ்க்கையில் நடந்த முக்கியமான நிகழ்ச்சிகள், அவர் சந்தித்த பெரியோர்கள், அவருடைய தொழிலுக்கு உதவி செய்தவர்கள், அவரைப் பாராட்டியவர்கள், ஊக்கப் படுத்தியவர்கள், யார் யார் என்பது எல்லோருக்கும் தெரியாது. எனது கணவர் தன்னைப்பற்றி எவரிடமும் பெருமையோடு சொல்லிக் கொள்பவர்கள் அல்ல. பிறர் தயவை நாடி பணிகளைப் பெற்றவரும் இல்லை. இவரை நாடியே அனைத்துப் பணிகளும் வந்ததை நான் அறிந்தவள். இதைப் பார்த்து வியப்ப டைந்தவர்களும் உண்டுதான். எப்படி எனில், இவர் ஒரு கர்ம வீரர் எனசுருக்கிச் சொல்லிடில் மிகையல்ல; போதுமானதே. விரிவை உள்ளே காணலாம்.

''யாதும் ஊரே யாவரும் கேளிர்'' என்ற கொள்கையுடைய இவர் பிறருக்குச் செய்திட்ட நன்மைகள் எண்ணிலடங்கா. இவரால் உயர்ந்திட்ட, உயர்த்தப்பட்ட சிற்பிகள் பற்பலர். இதனால் வறுமை நீங்கி செல்வர்கள் ஆனவர் பலர் உண்டு. விசுவாச முடையவர்களும் பலர் உண்டு. இவரை அண்டியவர்களுக்குப் பணிகொடுத்து கை தூக்கி விட்டு அவர்தம் சந்தோஷத்தைப் பார்த்துத் தானும் சந்தோஷப்படுவார். மரபுச் சிற்பிகள் பெருக வேண்டும் என்ற ஆசையுடையவர். எந்தவொரு ஸ்தபதியையோ, சிற்பியையே கண்டு அச்சமோ பொறாமையோ

கொண்டவர் அல்லர். கெட்டிக்காரர்களை மிகுவாக நேசிப்பார். பெருமைப்படுவார். தனக்குத் தெரிந்த அனைத்தையும் அவர்களிடம் பகிர்ந்து கொள்வார். கொட்டிவிடுவார். மணிக்கணக்காகப் பேசி அறிவூட்டி, உணர்வைத்தூண்டி உற்சாக மூட்டுவார். தொழிலில் நேர்மையும் நாணயமும் அதிகமாகவே கொண்டவர். காசு பணத்தைப் பெரிதாக எண்ணி எஜமானருக்குத் துரோகம் செய்யாதவர். இவரது மறுபக்கத்தைச் சொல்ல வேண்டுமானால் இவரை துர்வாசர் என்று சொல்லத்தக்க கடும் கோபக்காரர். அடுத்த நிமிடம் மறந்து சகஜ நிலைக்கு வந்துவிடுவார். இந்தக் குணம் இவரது பரம்பரைச் சொத்து எனலாம். உண்மைவாதிகள் இப்படித்தான் இருப்பார்கள் எனத் தெரிகிறது.

ஒரு ஸ்தபதியைப் புரிந்து கொள்ள வேண்டுமானால் அவருடைய இன்பதுன்பங்களில் அவர்தம் சிந்தனைகள் மற்றும் செயல்பாடுகள் ஆகியவற்றை நேரிடைத் தொடர்பில்லாமல் அவரைப் புரிந்து கொள்ளல் இயலாது என்று என் கணவர் அடிக்கடி சொல்லுவார். இதனால் தான் ஒரு ஸ்தபதியை மையப் பொருளாக வைத்து ஒரு சினிமாப்படம் கூட எவராலும் எடுக்க முடியவில்லையோ என்று என்கணவர் போல நானும் நினைக்கிறேன். இதனை நன்கு புரிந்து கொண்டதால் தான் என் கணவரின் கதையைச் சுவை மிகுந்த வரலாறாக எழுதி விட்டார் ஸ்ரீமதி இராஜலெட்சுமி அவர்கள் எனச் சொல்லிடலாம்.

சுமார் பன்னிரெண்டு ஆண்டுகள் அவருடைய அசைவுகளை மற்றும் தொலைநோக்குத் திட்டங்களை உற்று நோக்கியவர். துணிந்து பல வினாக்களை அவரிடம் தொடுப்பதைக் கேட்டிருக்கிறேன். எனக்குத் தெரியாத அவரது சிறுவயதில்

நடந்த நிகழ்ச்சிகளைப் பற்றியும் எழுதியுள்ளார். இந் நிகழ்ச்சிகளை எவரும் கேட்டதும் இல்லை அறிந்ததும் இல்லை எனலாம். அவரது மனைவியாக வாய்க்கப் பெற்று, இன்று வரையிலான இடைப்பட்ட 53 ஆண்டுகள் நிறைவுற்ற காலக்கட்டத்தில் நிகழ்ந்த, அனைத்து முக்கியமான நிகழ்ச்சிகளைத் தொகுத்து, இந்த நூல் வாயிலாக எல்லோரையும் சென்றடையச் செய்திருக்கிறார். இத்தகைய நூலை, சாதாரண் வரலாற்று நூல் போல் அல்லாமல், பல்சுவை மிகுந்த வரலாற்று நூலாக, சுவை மிகு காவியமாக திருமதி. இராஜலெட்சுமி அவர்கள் எழுதியிருக்கிறார்கள். இந்த நூல் இனிய தமிழில் இருப்பதால், படிக்க இதனைக் கையில் எடுத்தோர் படித்து முடிக்காமல் கீழே வைத்திட முடியாது எனத் துணிந்து சொல்லுகிறேன். அவ்வளவு சுகமான எழுத்து. நான் அவரது வாழ்க்கைத் துணைவி என்ற முறையில் எல்லாவற்றையும் வரிவிடாமல் படித்துச் சுவைத்தேன். நானறிய அத்தனை செய்திகளும் உண்மை என்பதையும் சொல்லிட விரும்புகிறேன். பெருமைப் படுகிறேன்.

இத்தகைய வரலாறு இவருக்கு பின்வரும் சந்ததியினர்களும் சிற்பக் கலைத்துறையில் பணியாற்று பவர்களும், எதிர் காலத்தில் பணியாற்ற இருப்பவர்களும் படித்து பயன் அடைவார்கள் என்று நம்புகிறேன். இவரது நிமிர்ந்த நடை, நேர்கொண்ட பார்வை, துணிச்சல் எல்லோரையும் இணைத்துப் புதியதொரு குடும்பத்தைப் படைத்திட அவர் கொண்ட இலட்சியம் சுகந்தம் போல் பரவிட வேண்டுமென்று சொல்லிட, விரும்புகிறேன்.

தொய்வுற்றுக் கிடந்த இவரது வாஸ்து மரபைத் தூக்கி நிறுத்திட இவர் தந்தை நினைத்து வாழ்த்திய சொல்லை மந்திரமாக* ஏற்றுப் பணி செய்ததின் பயனை தன் வாழ்நாளிலே பார்த்து மகிழ்ந்ததோடு விட்டு விடாமல், மேன்மேலும் கலைத் துறைமீது இவர் கொண்டிருந்த அளவிட முடியா ஆசைகளை வைத்துக் கொண்டு ஆய்வுகளைச் செய்து, இந்த மரபின் முன்னோனான மயனுக்கு ஒரு நினைவுக் கூடத்தை நிறுவிட ஆசைகொண்டு, இதன் விளைவால் என் கணவர் மேற்கொண்ட முயற்சிகள் பலப்பல. அம்முயற்சி வெற்றி பெறும் நாள் அருகில்தான் உள்ளது. அம்முயற்சிகளைத் தொட்டுச் சொன்ன பாங்கினையும் பாராட்டுகிறேன். உண்மையிலேயே இக்கலை மரபுக்குக் கிடைத்த அதிர்ஷ்டம் எனது கணவர் என்றே நானும் எனது மாமனார் சிற்பக்கலைச் செல்வர் ம.வைத்தியனாத ஸ்தபதியுடன் சேர்ந்து சொல்லிட விரும்புகிறேன். தனது இல்வாழ்க்கைச் சுகங்களைக் குறைத்துக் கொண்டு, ஆன்மிக வாழ்க்கையை முழுமையாகத் துய்த்து விட்டார் என்றால் மிகையல்ல.

இந்த சிறிய நூலில் எனது கணவருடைய லட்சியம், அந்த லட்சியத்தை அடைவதற்கு அவர் காட்டிய உழைப்பு, அவர் செய்த தியாகங்கள் அனைத்தையும் திருமதி இராஜலெட்சுமி செப்புப்பட்டையம் போல பதிவு செய்து விட்டார்கள் என்று சொல்ல விரும்புகிறேன். ஸ்தபதியின் மீது அவர் கொண்ட அன்பும் மரியாதையும் ஒருங்கிணைந்து என்றும் எவரும்

---

* "சிற்பக் கலையில் நீ செய்த பிரவேசம்
அதற்கு மாபெரும் அதிர்ஷ்ட மாகும்"

– தந்தை சொல்லிய மந்திரம்

மறவாதிருக்கச் செய்த, தன்னலமற்ற திருமதி இராஜலட்சுமியின் பணியை மனமாரப் பாராட்டுகிறேன். இந்த வரலாற்றின் மூலம் திருமதி இராஜலெட்சுமி அவர்களும் எல்லோருடைய மனதிலும் நிலைத்த இடம் பெறுவார் என்று நம்புகிறேன்.

திருமதி இராஜலெட்சுமி கதை கட்டுரை பல ஏடுகளில் எழுதிய நல்லதொரு எழுத்தாளர். எலக்ட்ரானிக்ஸ் துறையில் பட்டயப் படிப்பு படித்தவர் **(Diploma in Electronics).** கணிப்பொறியாளர் பயிற்சியும், பெற்றவர். நல்ல தொழில் நுட்ப வல்லுனர். இதேபோல நல்ல கல்வியறிவும், ஆராய்ச்சியோடு செயல் வீரருமாக விளங்கிடும் திரு.இராம நாராயணன் அவர்களைக் கணவராக அடைந்து நல்லபேறு பெற்றவர். இவர் கணவர் **B.E.** எலக்டிரானிக்ஸ் துறையில் பட்டம் பெற்று, தற்போது ஓமன் என்ற அயல் நாட்டில் அரசு மருத்துவத் துறையில் மதிப்புமிகு தலைமை இடம் வகித்து, நல்ல பொருளாதார உயர்வும் பயனும் சுகமும் அடைந்து வருகிறார். இவரும் ஒரு விஞ்ஞானியே. என்கணவர் செய்திடும் வாஸ்து விஞ்ஞான ஆராய்ச்சி முடிவுகளை குடியரசுத் தலைவர் மேதகு அப்துல் கலாம் அவர்களிடம் விளக்கிக் கூறி என் கணவருக்கு புகழ் சேர்த்தவர்.

இத்தகைய மதிப்புமிகு நல்ல கணவரை, என்னைப் போல் பெற்ற அவரை பெருமையோடு பாராட்டுவதோடு, அவ்விருவரும், அவர்தம் குழந்தைகளும் நீடுவாழ்ந்து நல்ல பெயரும், புகழும், செல்வமும் பெற்றிட, அவற்றை வைத்து சமுதாயத்திற்குத் தொடர்ந்து தொண்டு செய்திட, அதன் மூலம் ஆன்ம பலம் பெற்றுப் பேரின்பம் இவர் வாழ்நாட்களிலேயே துய்த்திட, எல்லாம் வல்ல இறைவனை வேண்டுகிறேன்.

நான் நிரம்பப் படிக்காதவள். நான் 7வது வகுப்பு முடித்து எட்டாவது வகுப்பில் நுழைந்திட்ட காலத்தில் படிப்பை ஒதுக்கி வாழ்க்கைப் பள்ளியில் நுழைந்து விட்டேன். என்றாலும், மாமல்லபுரத்தில் சிற்பக் கலைக் கல்லூரி முதல்வராக இருந்த என் கணவரோடு வாழ்ந்த 27 ஆண்டுக் காலகட்டத்தில் அவ்வூரிலிருந்த ஒரு நூலகத்திலிருந்து பல தமிழ் நூல்களை - இராமாயணம் முதல் பாரதியார் கவிதைகள் வரை - எண்ணறற புத்தகங்களை வாசித்திருக்கிறேன். நானும் இசைப்பேன். இசையை ரசிப்பேன். என் படுக்கை அறையில் இரவு பகல் எப்போதும் இசை ஒலியைக் கேட்கலாம். என்னுடைய அகம் எப்போதும் அமைதியுடனிருக்க இவையெல்லாம் உதவின. என் கணவர் போல் அனைத்து மக்களையும் என் மக்களாகப் பார்த்து அன்பு செலுத்துவதைத் தவிர வேறேதுமறியேன்.

அடுத்து 75 வது வயது நிரம்பிய தினத்தன்று அவருடன் பணியாற்றி வரும் உடனுறை சிற்பக்கலைஞர்கள், அலுவலகத் துணைவர்கள் ஆகியோர் எழுதிப் பேசிய பேச்சுக்களும் விரைவில் வெளிவர உளது. என் பெயர் கொண்ட ''தெக்ஷிணா கலை நூற்பதிப்பகம்'' இதனைப் பதிப்பித்திடும். அவற்றையும் படியுங்கள். நன்றி வணக்கம்.

க. தெக்ஷிணவதி

க.தெக்ஷிணாவதி அம்மையார்.

வாஸ்து வேதிக் டிரஸ்டின் உறுப்பினர்.

## டாக்டர் ஸ்தபதியின் முன்னுரை

## உள்ளிட்ட நன்றியுரை

நமது தமிழ் நாட்டில் பட்டியல் இடப்பட்ட கோவில்கள் 35,000 என்று கணக்கிடப்பட்டிருக்கிறது. பட்டியலில் ஏறாத கோவில்கள் இந்த எண்ணிக்கையைக் காட்டிலும் பலமடங்குகள் இருக்கும் என்று நம்மவர்க்கு இன்று தெரியும். காரணம், அத்தனை கோயில்கள் மலர்ந்த - மலிந்திட்ட மாநிலம் நம் தமிழ் மாநிலம். இது மட்டுமல்ல, தமிழ் நாட்டைச் சுற்றி, கேரளம், ஆந்திரம், கர்நாடகம் ஆகிய மாநிலங்களில் தோன்றிய கோவில்களைச் சேர்த்தால் இந்த எண்ணிக்கை பல லட்சங்களை எட்டிவிடும் என்று சொன்னால் ஒருக்காலும் மிகையாகாது. இவற்றை விடுத்து இந்தியத் துணைக்கண்டத்தின் நடு நாட்டிலும், வட நாட்டிலும் எத்தனையோ கோவில்களும் தோன்றியிருக்கின்றன. இந்தக் கோவில் கட்டும் திருப்பணி மரபு இந்தக் காலத்தில், உலக நாடுகளில் பற்பல இடங்களில் வேரூன்றி வருகின்றது. இச்செய்தியும் பலர் அறிந்ததே.

''கோவில் இல்லா ஊரில் குடியிருக்க வேண்டாம்'' என்றும் ''ஆலயம் தொழுவது சாலவும் நன்று'' என்றும் பல முதுமொழிகள் தோன்றிய செய்தியும் நம் மக்கள் அறிந்ததே. இத்தகைய கோவில்கள் ஓர் அதிசய விஞ்ஞான அனுபவத்தை நம் அகத்தே தோற்றுவித்து, ஆன்மபலம் கூட்டுவதே அடிப்படைக் காரணம் என்பதை அறிதல் வேண்டும். இத்தகைய ஆன்ம நிலையங்களாகிய கோவில்களைக் கட்டியோர் யாவர் என்று

கேட்டால் எவரும் அறுதியிட்டுக் கூறமுடியாத நிலை அன்று போல் இன்றும் இருக்கிறது. இஃது எதற்கொப்புமெனில், 'சைக்கிளில் சவாரி செய்வோர் சைக்கிளைச் செய்தோனை மறந்து விட்டது போல' என்க.

இந்த நிலையில், கோயில் கல்வெட்டுகளில் ஒரு சில மஹா சிற்பிகளின் பெயர்கள் மட்டும் இங்கொன்றும், அங்கொன்றும் எனக் காணக்கிடக்கின்றன. ஆனால் கர்நாடகத்திலும், ஆந்திரத்திலும் சிற்பியர்தம் (ஸ்தபதியர்) பெயர்கள் எண்ணற்றவை காணப்படுகின்றன. இது விதிவிலக்குத்தான். இப்பணி செய்வோர் ஒரு தேசிய இனமாக இன்று பரந்து கிடக்கிறார்கள். இந்த இனத்தின் பெயர் இலக்கியங்களில் 'நுண்வினைக் கம்மியர்' என்றும், இதிகாசங்களிலும், புராணங்களிலும் 'விசுவகர்மர்கள்' என்றும் குறிப்பிடப் படுகின்றது.

எனக்குத் தெரிந்த வரையில் மாமல்லபுரக் கற்றளிகளையும், குகைக் கோவில்களையும் சுற்றிப் பார்த்து, உற்று நோக்கினால் கேவாதப் பெருந்தச்சன் என்ற சிற்பியின் பெயர், கி.பி. 6வது நூற்றாண்டு தரையோடு தரையாக இருக்கும் ஒரு பாறையில் செதுக்கப்பட்டிருக்கும். அவனுக்குத் துணைவர்களாக இருந்த ஒரு சில சிற்பிகளின் பெயர்களும் அவன் பெயருக்கு அருகே காணக்கிடக்கின்றன. தச்சன் குணமல்லன், தச்சன் ஆபாஜன், பய்யமிளிப்பான் என்ற பெயர்களும், அங்கே செதுக்கப்பட்டிருக்கும்.

தஞ்சைப் பெருவுடையார் கோவிலை 1018 ஆண்டுகளுக்கு முன் படைத்துக் கொடுத்த சிற்பியின் பெயர் கல்வெட்டாக, அக்கோவிலில் செதுக்கப்பட்டிருக்கிறது. அவருடைய பெயர் குஞ்சரமல்லன் என்பதாகும். இவர் **Royal Architect** ஆக இருந்தமையால், அவரைக் குஞ்சரமல்லன் ராஜ ராஜப் பெருந்தச்சன் என்று அக்கல்வெட்டுக் கூறுகிறது.

காஞ்சீபுரம் அருகே உள்ள உத்திரமேருரில் ஒரு சிற்பியின் புதிய படைப்பை அஷ்டாங்க விமானம் என்று சொல்லுவர். இக்கருத்தொத்து எழுப்பிட்ட விமானம் இஃதாகும். இஃதொரு அபூர்வப் படைப்பு எனலாம். இதை இயற்றியவர் பெயர் பரமேஸ்வரப் பெருந்தச்சன் என்பதாகும். அங்ஙனமே திருவொற்றியூர் கோவிலைக் கட்டியவன் பெயர் ரவிப் பெருந்தச்சன் என்பதாகும்.

இதே போல, காஞ்சீபுரத்தில் உள்ள தொன்மைச் சிறப்பும் விஞ்ஞான நுட்பமும் ஒருங்கமைந்த கைலாச நாதர் கோவிலை நிர்மாணித்தவன் பல்லவர் காலத்திய (கி.பி. 8வது நூற்றாண்டு) சர்வசித்தி ஆச்சாரி என்பதாகும். காஞ்சியை வென்ற புலிகேசி என்ற மன்னர் மகாராஷ்டிரத்திற்கு அழைத்துச் சென்று இதே பெயருடைய பெரியதொரு கோவிலை எல்லோராவில் கட்டிக் கொண்டான் என்ற வரலாற்றுச் செய்தியும் தெரியவருகிறது.

இப்படி அங்கும் இங்கும் சிற்பியர்கள் பெயர்கள் மட்டும் தெரிகின்றனவே ஒழிய அவர்தம் வரலாறுகளை மற்றும் ஆற்றல் தொடர்பான குறிப்புரைகளை, - வேதனை சாதனைகளை - அந்தச் சிற்பியர்களோ, அந்தச் சிற்பியர் சமூகத்தைச்

சேர்ந்தவர்களோ, அல்லது கலை ஆர்வர்வலர்களோ பத்துவரி கூட எழுதி வைக்கவில்லை.

ஆனால், இத்தகைய சிற்பிகள் வழிவந்த கலாச்சாரம் தான், அதிலிருந்த நுட்பங்களின் நல்விளைவுகள் தான், இன்று பாரதீய கலாச்சாரம் என்று வழங்கிவருகிறது என்று சொல்லலாம். இந்தக் கலாச்சாரத்திற்கு அஸ்திவாரமாக இருந்தவர்கள், இன்றும் இருப்பவர்கள் சிற்பிகள் என்றால் மிகையல்ல. இத்தகைய விஷயம் அறிந்தோர் இருப்பின் அவர்கள் நன்றியறிதலுக்கு உரியவர் ஆவர் என்று சொல்லுவேன்.

இவ்வாறு சிற்பிகளுக்கு என்று ஒரு வரலாறு இல்லாத நிலையில் இக்காலச் சிற்பியாகிய இந்தச் சிறியேனைப்பற்றி ஒரு வரலாறு எழுதப்பெற்றிருக்கிறது. இந்த வரலாற்று நூலை, தொல்பழங்காலத்திலிருந்தே வழி வழியாக, வாழையடி வாழை என வரும் சிற்பியர் வரலாற்றில் முந்து நூல், முது நூல் (அ) முதல் நூல் என்று சொன்னால் மிகையாகாது. இந்த நூலை இந்த 21வது நுற்றாண்டில் எழுதியவர்தான் ஸ்ரீமதி. இராஜலெட்சுமி இராமநாராயணன் என்ற பெண்மணி ஆவார். இத்தகைய வரலாற்றை எழுதிய தன்னையும் என்னோடு வரலாற்றில் பதித்துக் கொண்ட அந்தப் பெண்மணியைப் பாராட்டுகிறேன். நெஞ்சார வாழ்த்துகிறேன்.

இந்த வரலாற்றுக்குள் மேலும் வரலாறு ஒன்றும் உண்டு என்பதை இங்கே சொல்ல வேண்டும். நானும், இந்தப் பெண்மணியும், அவருடைய கணவரும் 29-11-2003 தேதி அன்று, இந்தியக் குடியரசுத் தலைவர், 'பாரத ரத்னா' என்று

போற்றப்படும் அறிவியல் மேதை டாக்டர் அப்துல் கலாம் அவர்களை டில்லியில் இராஷ்டிரபதி பவனில் சந்திக்கும் பாக்கியம் பெற்றோம். சந்தித்தது மட்டுமல்லாமல், அவரோடு உரையாட ஒரு 45 நிமிட கால அவகாசமும் எங்களுக்குக் கிடைத்தது. இந்த உரையாடலை ஒரு கட்டுரையாக இந்தப் பெண்மணி எழுதினார்கள்.

இந்த உரையாடலை என்னுடைய **Vaastu Purusha** என்ற ஆய்வு இதழில் வெளியிட்டோம். அதனைப் படித்த எத்தனையோ பேர் இந்தப் பெண்மணியைப் பாராட்டினார்கள். இதைக் கேள்விப்பட்ட அந்த பெண்மணியின் கணவர் திரு. இராமநாராயணன் அவர்கள் (இவர் B.E. எலக்ட்ரானிக்ஸ் படித்தவர் ஓமன் நாட்டில் அரசுப் பதவியில் தலைமையிடம் வகித்து வருகிறார். இவர் ஓர் ஆராய்ச்சி வல்லுநரும் ஆவார்.) நான் எழுதிவரும் வாஸ்து விஞ்ஞானத்தைப் புரிந்து என்மீது அபரிமிதமான மதிப்பும் அன்பும் கொண்ட நிலையில், தன் வாழ்க்கைத் துணைவியாகிய திருமதி இராஜலெட்சுமியை அழைத்து இந்த மாதிரி சம்பவங்கள் திரு கணபதி ஸ்தபதி அவர்கள் வாழ்க்கையில் நிரம்ப ஏற்பட்டிருக்க வேண்டும் என்று சொல்லி, இராஷ்டிரபதி பவனில் நடந்த செய்தியை முன்னிலைப்படுத்தி, முதல் கட்டுரையாக வைத்து, அதேபோன்ற அவரது வாழ்க்கைக் குறிப்புகளை எழுதுக என்று சொல்லியதின் பேரில் என்னை அடிக்கடி குடைந்து, குடைந்து, கேள்விமேல் கேள்வி கேட்டு என்னுடைய வரலாற்றை எழுதியிருக்கிறார்கள்.

இவரது இந்தப் படைப்பை எனது விஸ்வகர்ம சமூகம் படித்து, என்வழி செல்ல வேண்டும் என்று இலட்சியம் கொண்டு இந்த வரலாற்றை எழுதுவதாக இராஜலெட்சுமி சொல்லுகிறார்கள். எனவே, இந்த வரலாற்றுக்கு மூல காரணமாக - ஏன் மூலப் பொருளாக விளங்கிய திரு. இராமநாராயணன் அவர்களுக்கும், எனது வாழ்க்கைச் சம்பவங்களை சொற் காட்சிகளாக வரைந்திட்ட திருமதி இராஜலெட்சுமி அவர்களுக்கும் நான் மட்டுமல்ல, விஸ்வகர்ம சமூகமே நன்றிக் கடன் பட்டிருக்கிறது என்று சொல்லி எனது நெஞ்சார்ந்த பாராட்டுகளையும், நன்றியையும் உரித்தாக்குகிறேன்.

எனது மனைவி சொல்வது போல, எத்தனையோ மாமனிதர்களையும், தொழில் விற்பன்னர்களையும், கவிஞர்களையும் மையப்பொருளாக வைத்துத் திரைப்படங்கள் தயாரிப்போரும், நூல்களை எழுதுவோரும் இருந்து வரும் காலத்தில் ஒரு ஸ்தபதியைப் மையப்பொருளாக வைத்து நூலோ, படமோ ஒன்று கூடவரவில்லையே என்ற ஆதங்கத்தை இந்த வரலாற்று நூல் பூர்த்தி செய்கிறது என்று சொல்லி எனது முன்னுரையை முடிக்கின்றேன். மேல் விளக்கம் வேண்டுவோர் என்னை அணுகுங்கள்.

- டாக்டர்.வை. கணபதி ஸ்தபதி

## மாண்புமிகு இந்திய ஜனாதிபதியுடன் டாக்டர் வை.கணபதிஸ்தபதி அவர்களின் சந்திப்பு

**நாள் : 29.11.2003.    இடம் : இராஷ்டிரபதி பவன், புதுடில்லி.**

இக்கட்டுரை மதிப்பிற்குரிய பாரத ஜனாதிபதி திரு. அப்துல் கலாம் அவர்களுடன் டாக்டர் வை.கணபதி ஸ்தபதி அவர்கள் 29.11.2003 அன்று புதுடில்லி இராஷ்டிரபதி பவனில் நிகழ்ந்த சந்திப்பின் சாராம்சம். ஸ்தபதியுடன் சென்று ஜனாதிபதியுடன் உரையாடியவர்கள் திரு. இராமநாராயணன் மற்றும் திருமதி. இராஜலஷ்மி இராமநாராயணன்.

திரு. இராமநாராயணன் அவர்கள் ஒரு மின்னணுப் பொறியாளர். தற்கால நவீன விஞ்ஞான கண்டுபிடிப்புகள் அனைத்துமே நமது பண்டைய நூல்களில் சொல்லப் பட்டிருப்பவைதான் என்று, ஸ்தபதியின் ஆராய்ச்சி மூலம் வெளிப்பட்டுள்ள நல்ல பல தமிழ் நூல்களை ஒப்பிட்டுப் பார்த்து ஆராய்ச்சிகள் செய்து வருகிறார். அந்த ஆராய்ச்சியின் ஓர் அங்கமாக, ஒரு சிறு கட்டுரையை மாண்புமிகு ஜனாபதி அவர்களுக்கு வழங்கினார்.

★★★★★★

29.11.2003, காலை மணி 10.20. கடுமையான பாதுகாப்பு சோதனைகளுக்குப் பிறகு புதுடில்லியில் உள்ள ஜனாதிபதி மாளிகையில், விருந்தினர் அறையில், அன்போடு வழங்கப்பட்ட சிற்றுண்டி, மற்றும் தேநீரை அருந்தி விட்டு, இன்னும் 10 நிமிடங்களில் இந்த நாட்டின் முதல் குடிமகனை, ஒரு மாபெரும்

விஞ்ஞானியை, இந்தியாவின் ஒரு மூலையில் தமிழ்நாட்டில் உள்ள இராமேஸ்வரத்தில் பிறந்த அம்மாமேதையை சந்திக்கப் போகிறோம் என்று மூவருக்கும் ஓர் எதிர்பார்ப்பு, லேசான பதட்டம்... திரு.வை.கணபதி ஸ்தபதியார் அவரை முன்பே இரு முறை சந்தித்திருந்தாலும், [ஒரு முறை கன்னியாகுமரி வரலாற்றுப் பண்பாட்டு ஆய்வு மையத்தின் நிறுவனர் மற்றும் பொதுச் செயலாளரான டாக்டர் பத்மநாபன் அவர்களுடன் சந்தித் திருந்தார்] இந்த சந்திப்பின் போது வாஸ்து விஞ்ஞானத்தைப் பற்றியும் அதைப் பற்றி அவர் எழுதிய நூல்களையும் ஜனாதிபதி அவர்களுக்கு அளிக்கப் போகும் ஆவலில் இருந்தார்.

சரியாக மணி 10.30. ஒரு மெய்க்காப்பாளார் அன்புடன் ஜனாதிபதியின் அறைக்கு அழைத்துச் செல்கிறார். மிகப் பெரிய ஆனால் மிகவும் ஆடம்பரம் இல்லாமல் அலங்கரிக்கப்பட்ட அறை. ஒரு நாற்காலியில் அமர்ந்திருந்த ஜனாதிபதி அவர்கள் ஸ்தபதி அவர்களைக் கண்டதும் எழுந்து நின்று ''வாங்க ஸ்தபதி'' என்று வரவேற்கிறார். ஸ்தபதி மற்ற இருவரையும் அறிமுகப்படுத்து கிறார். ஜனாதிபதிக்கு அருகில் உள்ள இருக்கையில் ஸ்தபதியும் இன்னொரு இரட்டை இருக்கையில் மற்ற இருவரும் அமருகின்றனர்.

ஜனாதிபதி அவர்களைப் பார்த்த மகிழ்ச்சியில் அனைவரும் திக்குமுக்காடிப் போயிருந்த போதிலும் ஸ்தபதி அவர்கள் உரையாடலை ஆரம்பிக்கிறார். ''அய்யா! உங்களை நேரில் பார்க்க வேண்டும் என்ற எனது நீண்ட நாள் அவா இன்றுதான் நிறைவேறியது'' என்று உணர்ச்சி மிகுதியில் வார்த்தைகளை மெள்ள வெளியிடுகிறார்.



மாண்புமகு இந்திய ஜனாதிபதி திரு.அப்துல்கலாம், திரு.வை.கணபதி ஸ்தபதி, கட்டுரை ஆசிரியை திருமதி.இராஜலஷ்மி, அவரது கணவர் திரு.இராமநாராயணன்

சற்று நேர மௌனத்திற்குப் பிறகு ஸ்தபதி, ‘‘ இந்த பிரபஞ்சமே ஓர் அளவுக்கு உட்பட்டது. அந்த அளவுகளைப் பிரதானமாக வைத்து உருவாக்கப்பட்டதுதான் நாங்கள் இப்போது கடைபிடித்து வரும் வாஸ்து சாஸ்திரம்.’’ என்று தான் வந்த நோக்கமாகிய நமது பண்டைய விஞ்ஞானத்தின் பெருமையை ஜனாதிபதிக்கு எடுத்துக் கூற வேண்டும் என்ற ஆவலில் கூறினார்.

உடனடியாக அதை ஆமோதிக்கும் குரலில் திரு ஜனாதிபதி அவர்கள், ‘‘ஆம். அளவுகள் (Dimension, measure) இல்லாமல் இந்த உலகமே கிடையாது. இந்த உலகத்தின் காலத்தை எவராலுமே சொல்ல முடியாது. நமது பூமி தன்னைத்தானே சுற்றிக் கொள்ள 24 மணி நேரம் ஆகிறது. பூமி சூரியனைச் சுற்றி வர 365 நாட்கள் ஆகின்றன. அந்த சூரியன் ஒளிவெளிப்படலத்தைச் (Galaxy) சுற்றி வர 250 மில்லியன் ஆண்டுகள் ஆகும்.

நாமெல்லாம் ஒவ்வொரு சுற்றுப் பாதையில் (Orbit) சுற்றிக் கொண்டிருக்கிறோம். நான் இப்போது 73வது orbit ல் இருக்கிறேன். ஸ்தபதி நீங்கள் எத்தனையாவது orbit?'' என்று சிரித்துக் கொண்டே கேட்டார்.

ஸ்தபதி கேள்வியைப் புரிந்து பதிலளிக்கும் முன் திரு. இராமநாராயணன் ''77 வது orbit '' என்று கூறினார்.

''நல்லது. நீங்கள் எத்தனையாவது orbit சார்?'' என்று அவரைப் பார்த்து ஜனாதிபதி அவர்கள் கேட்டார்.

பதிலளிக்கும் வகையில் ''50வது orbit. சொல்லப் போனால் இன்றுதான் 51 வது orbit க்குள் காலடி எடுத்து வைக்கிறேன்'' என்றார் இராமநாராயணன்.

சற்றே வியப்பாகப் பார்த்த ஜனாதிபதியை நோக்கி, ''ஆம் அய்யா! இன்றுதான் அவருக்குப் பிறந்த தினம்.'' என்று கூறினார் ஸ்தபதி.

''அப்படியா? மிகவும் மகிழ்ச்சி. பிறந்த நாள் வாழ்த்துக்கள்.'' என்று அத்தனை சுவாரசியமான உரையாடலுக்கு நடுவிலும் வாழ்த்துச் சொல்ல மறக்கவில்லை ஜனாதிபதி அவர்கள்.

இராமநாராயணன் நன்றி கூறி விட்டு, ''எனது 50 ஆண்டுகால வாழ்க்கையில், தங்களை நேரில் சந்தித்ததைப் போல் மிகவும் உயர்ந்த பிறந்த நாள் பரிசு வேறு ஒன்றும் கிடையாது.'' என்றார்.

ஸ்தபதி ஜனாதிபதியிடம், ''நீங்கள் சொன்ன காலத்தைப் பற்றித்தான் மயன் 'காலமே எவற்றுக்கும் மூலம்: காலமே

ஆக்கும் காலமே காக்கும்: காலமே துடைக்கும்' என்று கூறியுள்ளான்'' என்றார்.

''மயன் என்பவன் யார்?'' என்று ஸ்தபதியிடம் கேட்டார் ஜனாதிபதி அவர்கள்.

''மயன்தான் இந்த உலகத்தின் முதல் விஞ்ஞானி. அவன் எழுதிய நூல்கள் பல. இப்போதுள்ள கட்டிடக் கலை, ஓவியக்கலை, சிற்பக்கலை போன்ற பல நூல்களை எழுதியுள்ளான். கப்பல் கட்டுவது பற்றி மரக்கலச் செந்நூல், அணுவைப் பற்றிச்சொல்லும் அணுவியல், வானசாஸ்திரத்தை விளக்கும் சூரியசித்தாந்தம் போன்ற பல நூல்களை எழுதியவன். அந்த மரபில் வந்த பழங்குடி மகன் நான் (**I belong to the aboriginal creative tribe of India**)'' என்று ஸ்தபதி விளக்கினார்.

அப்போது இராமநாராயணன் எழுந்திருந்து ஜனாதிபதியிடம், ''ஸ்தபதி அவர்கள் இப்போது சொன்ன நூல்களில் எல்லாம் தற்போதைய நவீன விஞ்ஞான உண்மைகள் பொதிந்துள்ளன. உதாரணமாக 1911 ம் ஆண்டு ரூதர் போர்ட் (**Rutherford**) என்பவரும் 1913 ம் ஆண்டு போர் (**Bhor**) என்பவரும் கண்டு பிடித்த **atom & subatom** போன்றவை நமது பண்டைய சாஸ்திரங்களில் அணு, பரமாணு என்று குறிப்பிடப்பட்டுள்ளது'' என்றார்.

''அப்படியா?''

''ஆம். இன்னும் நிறைய கண்டுபிடிப்புகள் நமது பண்டைய சாஸ்திரங்களில் உள்ளன. அதற்கான சான்றுகளை ஸ்தபதி அவர்கள் நூல்களாக வைத்துள்ளார். இந்த உண்மைகளை விளக்கி

நான் ஒரு கடிதம் எழுதியுள்ளேன். அதைத் தாங்கள் படிக்க வேண்டும்'' என்று கூறி ஜனாதிபதியிடம் தான் கொண்டு வந்துள்ள கடிதத்தை அளித்தார் இராமநாராயணன். [காண்க : இராமநாராயணன் அவர்களது கடிதத்தின் ஆங்கில மூலம், பக்கம் – 12]

உடனடியாக அந்த கடிதத்தை ஆவலுடன் படித்தார் ஜனாதிபதி அவர்கள். மிகவும் வியப்படைந்தார். அவரது சில ஐயப்பாடுகளுக்கு இராமநாராயணன் அவர்க்ள் விளக்க ஆரம்பித்தார்.

பேச்சு சற்றே திசை மாறிப் போனாலும், மறுபடியும் விட்ட இடத்திலிருந்தே தொடர்கிறார் திரு. அப்துல் கலாம் அவர்கள். ''ஆகையினால் நாமெல்லாம் ஒவ்வொரு orbit ல் சுற்றிக் கொண்டு இருக்கிறோம். சூரியன் galaxy ஐச் சுற்றும் என்றேன். galaxy எதைச் சுற்றும்? பால்வெளியை (milkyway). ஆனால் பால்வெளிக்கு முன்னால் என்ன இருக்கிறது என்று சொல்ல முடியுமா? நாமெல்லாரும் அந்த அகண்ட பால்வெளியின் மிகச்சிறிய குழந்தைகள்.'' என்றார்.

சற்று நேர மௌனத்திற்குப் பிறகு ஸ்தபதி ''மயன் எழுதிய நூல்கள் எல்லாவற்றிலும் முதன்மையானதாக நான் கருதுவது பிரணவ வேதம் என்ற நூலும் ஐந்திறம் என்ற நூலும். பிரணவ வேதத்தைப் பற்றி பாகவதத்திலேயே வேத வியாசர் கூறி இருக்கிறார். அந்தப் பிரணவ வேதத்தைத்தான் நான் இப்போது பதிப்பித்துக் கொண்டிருக்கிறேன். அதைத் தங்கள் கையால் வெளியிட வேண்டும் என்பதுதான் எனது விண்ணப்பம்.''

''நான் புத்தகங்களை வெளியிடுவதில்லை. ஆனால், அவற்றைப் பெற்றுக் கொண்டு படிக்கிறேன் **(I don't release books. But I receive them and read)**'' என்றார் ஜனாதிபதி.

அப்போது இராமநாராயணன் ''ஸ்தபதி அவர்கள் தங்களுக்கு அனுப்பியிருந்த **Vaastu Shastra, a scientific treatise** புத்தகம் கிடைக்கப் பெற்றதற்காக நீங்கள் அனுப்பியிருந்த கடிதம்'' என்று அவர் ஸ்தபதிக்கு அனுப்பியிருந்த கடிதத்தைக் காட்டினார்.

''வாஸ்து சாஸ்திரம் என்பது என்ன?'' என்று கேட்ட ஜனாதிபதி அவர்களுக்கு அதைப் பற்றி அவருக்கே உரிய நடையில், மிகுந்த பாண்டியத்துடன் விளக்கினார் ஸ்தபதி.

''ஓ! இவ்வளவு பாரம்பரியமான விஞ்ஞானத்தை இப்போதுள்ள சிலர் துஷ்பிரயோகம் செய்து கொண்டிருக்கிறார்களே! ஸ்தபதி நீங்கள் இந்த வாஸ்து சாஸ்திரத்திற்கு வேறு பெயரிட்டு மாற்றி விடுங்கள்.'' என்று ஜனாதிபதி அவர்கள் கூற சற்று நேரம் அங்கு சிரிப்பலைகள்.

பிறகு ஸ்தபதி ''ஐயா! நான் நமது பண்டைய சாஸ்திரத்தின் பெயரை மாற்ற விரும்பவில்லை. ஆனால், அந்த சாஸ்திரத்தைத் துஷ்பிரயோகம் செய்பவரை மாற்றி விடுகிறேன்.'' என்றார்.

இராமநாராயணன் ''நமது பண்டைய விஞ்ஞானம் சிறிது சிறிதாக மங்கிக் கொண்டே வருகிறது.'' என்றார்.

''ஆம். நாம் என்னதான் நவீன விஞ்ஞானத்திற்கு முன்னேறினாலும் அதன் சிறப்பே தனிதான். அவ்வளவு ஏன் 2000 ஆண்டுகளுக்கு முன்பு சொல்லப்பட்ட திருக்குறளுக்கு இணையாக ஒரு நூலையும் இப்போது குறிப்பிட

முடியவில்லையே. அதில் சொல்லப்படாத விஷயங்களே இல்லை.''

இராமநாராயணன் அதனை ஒப்புக் கொள்ளும் விதத்தில் "ஆம். ஆங்கிலத்தில் *When going gets tough, tough gets going* என்பார்கள். அதனைத்தான் வள்ளுவர் எவ்வளவு சுருக்கமாக

'இடும்பைக்கு இடும்பை படுப்பர். இடும்பைக்கு

இடும்பை படாஅ தவர்' என்று கூறி இருக்கிறார்.''

என்றார்.

அதனை மகிழ்ந்து இரசித்த ஜனாதிபதி ''ஸ்தபதி! திருக்குறளின் மூல ஓலைச் சுவடி கிடைக்குமா என்று பாருங்களேன்.'' என்றார்.

ஸ்தபதி ''தேடிக் கொண்டு இருக்கிறார்கள் ஐயா! நிச்சயம் கண்டு பிடித்து விடுவார்கள்'' என்றார்.

''நான் தினமும் திருக்குறளைப் படிக்காமல் இருப்பதில்லை. தினமும் ஒரு குறளுக்கு நான் புரிந்து கொண்ட வகையில் விளக்கம் எழுதி விடுவேன். நேரம் கிடைப்பதில்லை. மொத்த திருக்குறளுக்கும் விளக்க உரை எழுத வேண்டும் என்று மிகுந்த ஆவல்.'' என்று ஜனாதிபதி கூறியதும் கட்டுரை ஆசிரியை குறுக்கிட்டு, ''ஐயா! நீங்கள் கண்டிப்பாக எழுத வேண்டும். பரிமேலழகர் உரை என்பது போல தங்களது உரையும் புத்தகமாக வெளி வர வேண்டும்'' என்றார்.

''முயற்சி செய்கிறேன் அம்மா! இப்போது அஷ்டவக்ரஹசம்ஹிதா* என்ற நூலைப் படித்துக் கொண்டு இருக்கிறேன்.'' என்றார் ஜனாதிபதி.

---

* The Ashtavakra Samhita or Ashtavakra Gita as it is sometimes called, is a treatise on Advaita Vedanta, ascribed to the great Sage Ashtavakra.

சற்று நேர மௌனத்திற்குப் பிறகு, ஸ்தபதி ''ஐயா உங்களிடம் நிறைய பேச வேண்டும் போல் உள்ளது. நீங்கள் சென்னை வரும்போது நானே உங்களை நேரில் வந்து சந்திக்கிறேன்'' என்றார்.

''நானே உங்கள் வீட்டிற்கு வருகிறேன் ஸ்தபதி! வாஸ்து சாஸ்திரப்படி கட்டிய வீடு என்கிறீர்கள். நான் வந்து பார்க்க வேண்டும். எங்கே இருக்கிறது உங்கள் வீடு?'' என்று கேட்டார் ஜனாதிபதி.

உடனே இராமநாராயணன் எழுந்திருந்து ஸ்தபதியின் ஒரு புத்தகத்தின் பின் அட்டையில் அச்சிடப்பட்டடுள்ள ஸ்தபதியின் வீட்டின் புகைப்படத்தினைக் காட்டுகிறார்.

ஜனாதிபதி அதைப்பார்த்து விட்டு, ''ஸ்தபதி! உங்கள் இல்லமே கோவில் மாதிரி உள்ளது.'' என்றார்.

ஸ்தபதி மகிழ்ச்சியுடன் ஆமோதித்து கை கூப்புகிறார்.

''சென்னையில் எங்கே உள்ளது உங்கள் இல்லம்?''

''கிழக்குக் கடற்கரைச் சாலையிலேயே ஈஞ்சம்பாக்கத்திற்கு அருகிலுள்ளது.''

'அப்படியா?மிகவும் சுலபமாகி விட்டது. நான் கல்பாக்கத்திற்கு வரும் வழியில் உங்கள் வீட்டிற்கு வந்து விடுகிறேன்.''

''நீங்கள் வந்தால் எங்கள் பாக்கியம். நீங்கள் எங்கள் வீட்டிற்கு வந்தால் எனது வீடு இன்னொரு இராஷ்டிராபதி பவனாக மாறி விடும். மிகவும் மகிழ்ச்சியடைவோம்.'' என்றார் ஸ்தபதி.

''கண்டிப்பாக வர முயற்சிக்கிறேன். ''

சற்று நேரம் உரையாடல் இப்படிச் சென்றதும் திடீரென்று ஜனாதிபதி ''கடவுள்தான் மிகவும் உயர்ந்த படைப்பாளி. அவர் எல்லோரையும் ஒரே மாதிரிதான் படைக்கிறார். எல்லோருக்கும் ஒரே மாதிரியான உலகத்தைத்தான் தந்துள்ளார். மனிதன் அந்த சௌகரியங்களை எப்படி உபயோகப்படுத்திக் கொள்கிறான் என்பதைப் பொறுத்து அவன் கென்னடியாகவோ, கணபதி ஸ்தபதியாகவோ, கோட்சேவாகவோ மாறுகிறான். **(God is the greatest Creator and he has given all the facilities to everybody. It is upto the human to use them. Whether it is Kennedy, or Ganapati Sthapati or Gotsey. It is all upto to us to make ourselves)**'' என்றார்.

உரையாடலின் முத்தாய்ப்பாக ஜனாதிபதி இவ்வாறு கூறியதும் அதிலுள்ள ஆழ்ந்த கருத்தைப்புரிந்து கொண்ட இராமநாராயணன் ''மிகவும் உண்மை.'' என்றார்.

ஏறக்குறைய ஒரு மணி நேரம் ஆகிவிட்டபடியால் ஜனாதிபதி எங்களுக்கு விடை கொடுக்க எழுந்து நின்றார். கட்டுரை ஆசிரியர் ஜனாதிபதியுடன் புகைப்படம் எடுக்க ஆசைப்படுவதாகக் கூறியவுடன் அவரே ஒரு மணியை அழுத்திப் புகைப்படக்காரரை அழைத்து புகைப்படம் எடுக்கும்படி பணித்தார்.

[காண்க : புகைப்படம்]

அறை வாசல் வரை வந்து வழி அனுப்ப வந்த ஜனாதிபதி ''உங்கள் கார் எங்கே நிறுத்தி இருக்கிறீர்கள் ஸ்தபதி?'' என்று கேட்டார்.

பாதுகாப்பு காரணங்களுக்காக வெகு தொலைவில் நிறுத்தப்பட்டுள்ள காரைக் சுாண்பித்ததும் ''அவ்வளவு தூரம் நீங்கள் நடக்க வேண்டாம். காரை இங்கேயே கொண்டு வரச் சொல்லுகிறேன்'' என்று கூறி விட்டு உடனடியாக பாதுகாப்பு அதிகாரிகளுக்குக் காரை அருகில் கொண்டு வரும்படி உத்தரவிட்டார்.

அறைக்கு அருகிலேயே கார் வந்து விட பிரியாவிடை பெற்று ஏறி அமர்ந்தோம். என்ன அன்பு! என்ன மனிதாபிமானம்! மரபுகளையும் மீறிய மனிதாபிமானம்!

# PHILOSOPHY AND TECHNOLOGY OF VAASTU SCIENCE

### *Submitted to H.E.President of India, Dr.A.P.J.Abdul Kalam on 29th Nov 2003 by Mr. S.Ramanarayanan*

### *A brief note about Mr.S.Ramanarayanan by Dr.V.Ganapati Sthapati*

*Mr.S.Ramanarayanan is a graduate in Electronics Engineering. He is a great expert with a thorough knowledge of the dynamics of the computer science. He has worked in many establishments in India and abroad as Technical expert. His expertise in the particular field and my discussion with him about the human computer gave him a bundle of information about the modern and ancient engineering science, the latter having been called Vaastu science. It must be known to the readers that Vastu is energy and Vaastu is matter and Vastu=Vaastu which conforms to the concept of $E = mc^2$ of Prof. Einstein.*

*While I was discussing the absolute energy and absolute matter and one changing into the other, I may mention of the wave pattern that emanates from celestial energies and terrestial energies. In a rhythmic pattern, which we call Brahma Pada, Deivika Pada, Manusha Pada and Paisachika Pada. This rhythmic pattern gave him an impression of the electron wave patterns. When I said that this pattern is traditionally followed in the design of Pancha Prakara concept, it struck him that the wave patterns conformed to the electronic wave pattern. This was written down in a beautiful letter and submitted to H.E. Dr. A.P.J.Abdul Kalam when we met him in Rashtrapathy Bhawan in New Delhi on 29.11.2003.*

*On knowing the unique science involved in the ancient Vaastu Science, the Honourable President not only appreciated, but also advised me to change the name of 'Vaastu' with some other name, since the media and society have polluted the term 'Vaastu'. He nodded his head when I observed and said that it would be harmful to the society if it is misused like this. I said that instead of changing the ancient name Vaastu I would change the wrong spellers to understand and apply correctively. Here under we furnish the letter submitted to H.E.Dr.A.P.J.Abdul Kalam on 29.11.2003.*

Since the inception of philosophy up to the modern Techonological era, there has been always a point of conflict between the philosophical thinkers and materialistic thinkers for ages.

A few, classical examples of this conflict are the finding of the Atomic power and the Bioengineering development of cloning.

By this conflict, philosophical thinkers have largely differed from technological thinkers and their contributions to the civilisation of the mankind. Philosophers consider the materialistic growth is impeding the attainment of self-realisation.

In India, many technological contributions had been made even during prehistoric period. But our great philosophical thinkers, who were by and large influencing the mass/ society, had shadowed these contributions.

A recent discussion with Dr.V.Ganapati Sthapati, founder of Vastu Vedic Research Foundation has triggered this view. Coming to the subject matter we see that our early technical

thinkers have contributed a lot of technical finding, which are known only to a few.

The nature of the Atom modelled by **Rutherford** in 1911 and the subsequent model suggested by Bhor in 1913 to overcome the inability of the classical theory, to explain the presence of definite electron energy levels in the atom, etc., had been thought about and even modelled by our ancient thinkers.

An unbiased listening to what Sthapati says reveals the fact that early finding of the Atomic energy levels & various energy states of the atoms have been achieved by our ancient technical thinkers.

Dr. V. Ganapati Sthapati has the proof for all the claims about the superiority of our traditional knowledge on technology in the areas of study of Atom, subatomic particles and also it's modelling to explain to common man.

All these had been given by our great technical thinker MAYAN, whose period is way back 10,000 BC, who lived in the island of Jambudvipam (Naavalantheevu).

Even the Quantum theory of the energy emitted (radiated) and absorbed in the form of multiples of units is traced in the MAYAN's findings. Since these findings are too technical and also due to the knowledge gap created by the great continental deluges had made these knowledge to stay with very few.

Philosophy based reformations had unfortunately masked

these technical findings for their own advantage. But one interesting point to be noted here is that the modelling of this atomic and sub-atomic nature had been borrowed or rather used to construct the common worship places, temples. The scientific findings behind the modelling had been ignored and shadowed by more of the philosophical views.

Some comparison between a few of our early findings related to the aspects mentioned for a temple & the modern Atomic study are listed below:

| Modern Atomic Structure | Found in our Traditional texts |
|---|---|
| 1. Atom, Sub atomic particles. | 1. Anu, Paramanu. |
| 2. Electron spins & rotates nucleus. The position and momentum cannot be determined simultaneously. | 2. Energy turns into Matter due to spin. Energy is in pockets and cubical in shape. |
| 3. There are definite energy states for the subatomic particles in the atom. | 3. Bindu is the centre, which has the maximum energy & various levels of energy circles around it. |
| 4. Sub atomic particles radiate, absorb photons, while shifting from its energy levels. | 4. Light is produced from the centre of the Bindu. Also it has sound energy. |
| 5. Electrons revolving in the energy bands have definite radius as rb, $2^2$rb, $3^2$rb,...... | 5. The model, which is suggested by our tradition has the outer passages in a dimension proportional to a,2a,3a,.... |

| | |
|---|---|
| 6. Electrons' position is determined by a probability curve. Electron in wave theory is like wave pockets. | 6. The shape of the curve is shown in the models. Under the wave pockets in the model the energy pockets are mentioned. |
| 7. Each shell, which has different energy states contains a fixed number. | 7. Each passage has a definite energy level and they are symbolised through the power with respect to the Bindu. |

The point derived through this short note is that our early finding of the technological theories are inscribed in our traditional scripts. These traditional scripts are in two forms categorised into four vedas and outside the four vedas Like mathematical innovations are found in the vedas, many of the modern findings appear in the scripts outside the four vedas.

Very few like Dr.V. Ganapati Sthapati possesses the linkage to these scriptures and are doing the research. Our Nation should be proud of such early findings and strive to bring out these to the western world through structured research works and publications by involving our great scientists.

Warm Regards,
S.Ramanarayanan

**Ramanarayanan**
**Blessed with the friendship**
**of Dr.V.Ganapati Sthapati**

## திரு.வைத்தியநாத ஸ்தபதி மற்றும் திருமதி வேலம்மாள் (பெற்றோர்)

தஞ்சை மாவட்டத்தைச் சேர்ந்த திரு. வைத்தியநாத ஸ்தபதி அவர்களுக்கும் மதுரை மாவட்டத்தைச் சேர்ந்த திருமதி வேலம்மாள் அவர்களுக்கும் அருமைப் புதல்வனாய் 30.09.1927 அன்று கணபதி அவதரித்த நாள் அன்று இப்பூவுலகம் மாபெரும் மகிழ்ச்சியில் களித்திருக்கும் என்பதில் ஐயமில்லை.

கணபதியின் தந்தையார் வைத்தியநாத ஸ்தபதி அவர்கள் ஒரு மாமேதை. பன்மொழி வித்தகர், சம்ஸ்கிருதம், தமிழ், கிரந்தம், தெலுங்கு, மலையாளம் போன்ற பன்மொழிகள் தெரிந்தவர். சிற்பக் கலையில் அளப்பறிய திறமை பெற்றவர். கற்பனை வளம் மிக்கவர். சோதிட ஆராய்ச்சியாளர். பற்பல கோயில்களைக் கட்டியவர்.

எந்தெந்த ஊர்களில் கோயில் கட்டுகிறாரோ அப்பணி முடியும் வரை குடும்பத்துடன் அந்த ஊரிலேயே தங்கி விடுவது அவர் வழக்கம். காரணம், அவர் ஒரு ஆசாரசீலர். அநுஷ்டானங்களைக் கடுமையாகக் கடைபிடித்து வருபவர். அசைவம் சாப்பிட மாட்டார். வெளியில் எங்கும் உணவருந்த மாட்டார். ஒரு கோயிலைக் கட்டி முடிக்க ஏறத்தாழ இரண்டிலிருந்து பல வருடங்கள் ஆகும் என்பதாலும், அதுவரை உணவிற்குக் கவலை இல்லாமல் இருக்கலாமே என்பதாலும்தான் இந்த ஏற்பாடு.

இவ்வாறு ஊர்ஊராகச் சென்று கோயில் கட்டும் போது, காரைக்குடிக்கு அருகில் உள்ள பிள்ளையார்பட்டி கோயிலின் ஏழுநிலை இராஜகோபுரத் திருப்பணியை வைத்தியநாத ஸ்தபதி அவர்கள் மேற்கொண்டு அங்கேயே தங்கித் திருப்பணிகளை

கவனித்துக் கொண்டு வரும் போது, அந்த ஊரில் பிறந்தவர்தான் கணபதி. பிள்ளையார்பட்டி இறைவனான பிள்ளையாரின் நாமத்தையே தனது பிள்ளைக்கும் ''கணபதி'' என்று வைக்கும் போது, இந்த *'பிள்ளை யார்'* என்று ஒரு நாள் உலகமே அதிசயிக்கும் என்று திரு. வைத்தியநாத ஸ்தபதி நினைத்திருப்பாரோ?

இவ்வாறு, அவர் எந்த ஊரில் கோவில் திருப்பணி செய்கிறார்களோ அந்த ஊரில் பிறந்த பிள்ளைகளுக்கு அந்த கோவில் திருப்பணியின் தெய்வத்தின் பெயரை வைப்பதாக வழக்கமாகக் கொண்டவர். கணபதியின் ஒரு தம்பி திருவண்ணாமலை இரமணாஸ்ரமம் வேலை நடைபெறும் போது பிறந்ததால் ரமணன் என்று பெயர் வருமாறு ஜானகி ரமணன் என்று பெயரிடப்பட்டார்.

சிறுவன் கணபதி பள்ளிப்பருவம் அடைந்ததும் தேவகோட்டையில் உள்ள சொந்த வீட்டிற்குக் குடி பெயர்ந்தனர். அங்குள்ள S.M.S. பள்ளியில் ஆரம்பக் கல்வி பயில கணபதியை சேர்த்து விட்டனர். ஊர்ஊராக மாற்றும் போது படிப்பு கெடக்கூடாதே என்று தேவகோட்டையில் பிள்ளைகளை அவரது தாயாரின் பொறுப்பில் விட்டு வேலை பார்க்கும் ஊருக்கு மனைவியுடன் சென்று விட்டார் வைத்தியநாத ஸ்தபதி. அப்பத்தாவிடம் [அப்பாவின் தாயார் அப்பத்தா] வளர்ந்த சிறுவன் கணபதி மிகுந்த குறும்புடனும் சேட்டைகளுடனும் வளர்ந்தார். அவரது குறும்புகளை அவரது வார்த்தைகளாலேயே கேட்போம்.

''சிறுவயதில் நான் மிகவும் குறும்பு. புருஷோத்தமனைப் [கணபதி ஸ்தபதியாரின் தற்போதைய 7 வயது பேரன்] போல நான் மிகவும் விஷமம் செய்வேன். தேவகோட்டையில் வீடு சிறியதாக

இருப்பினும் மரங்கள் அதிகம் இருக்கும். ஒரு மரத்தின் மீது ஏறினால் கீழே இறங்காமலேயே அடுத்த மரத்திற்குக் குரங்கு போல தாவுவேன். அப்பத்தா பார்த்து தந்தையாரிடம் சொல்லப் போவதாக மிரட்டினால் அவர்களை அடக்கி விட்டு மறுபடி விஷமம்தான். தந்தையார் ஊரில் இருந்து வரும் சமயம் அப்பத்தா இது பற்றிச் சொல்லும் போது நல்ல அடி விழும். ஆனாலும் நான் நன்றாகப் படிப்பேன் என்ற காரணத்தினால், அடுத்த நிமிடம் தந்தையார் சமாதானப்படுத்தும் விதமாகக் கூப்பிட்டு காலணா கொடுப்பார். உடனே ஓமப்பொடி வாங்கிச் சாப்பிட்டு விடுவேன். அப்பத்தாவும் எங்கு சந்தைக்குப் போய்விட்டு வரும்போதெல்லாம் தின்பதற்கு வாங்கி வருவார்கள்''

இவ்விதம் நாளொரு விஷமமும் பொழுதொரு குறும்புமாக வளர்ந்தாலும் படிப்பு விஷயத்தில் கணபதி மிகவும் கெட்டி. இவர்கள் குடும்பத்திலேயே முதன் முதலில் ஆங்கிலம் படிக்கத் தொடங்கியவரும் இவர்தான். இவரது தாத்தாவிற்கு இது பற்றி மிகவும் பெருமை. 'என் பேரன் இங்கிலிபீசு படிக்கிறான்'' என்று எல்லோரிடமும் பெருமையாகப் பேசுவாராம். வந்திருப்பவரிடம் ஆங்கிலத்தில் ஏதாவது சொல்லும்படி கேட்க சிறுவன் கணபதியும் படித்த ஆங்கிலப் பாடல்கள் ஏதாவது சொல்லிக் காண்பிக்க ஒரே மகிழ்ச்சி வெள்ளம்தான். இவ்விதம் செல்லப் பிள்ளையாக வளர்ந்தாலும் பள்ளியில் மிகவும் நல்ல மாணவனாகவே சிறுவன் கணபதி திகழ்ந்தது பெருமைக்குரிய விஷயம்தானே!

பள்ளியில் தேசபக்திப் பாடல்கள்தான் கடவுள் வணக்கமாகப் பாடுவார்கள். பாரதியின் 'எந்தையும் தாயும் மகிழ்ந்து குலாவி இருந்ததும் இந்நாடே' என்ற பாடலை மிகவும் இரசித்து பாடும் கணபதி ஆசிரியர்களிடம் மிகவும் மதிப்பு வைத்திருந்தார்.

ஆறாம் வகுப்பிற்கு **N.S.M.V.P.S. Higher Sec. School,** பள்ளியில் சேர்த்துவிட்டனர் பெற்றோர். அப்போது தந்தையார் வைத்தியநாத ஸ்தபதிக்கு தேவகோட்டைக்கு அருகிலுள்ள மாத்தூர் என்ற ஊரில் திருப்பணி. வேலையில் ஓய்வு கிடைக்கும் போதெல்லாம் தேவகோட்டைக்கு வந்து விடுவார். இல்லையென்றால் கணபதி அங்கு போய் விடுவார். தந்தையாரைப் பற்றி நன்கு புரிந்து கொள்ளவும் அவரது அறிவையும், ஞானத்தையும், தொழில் திறமையையும் அவர் நன்கு அறிந்து கொண்டவுடன் தந்தை மீது இருந்த மதிப்பு மேலும் பெருகியது. பெரிய பெரிய பண்டிதர்கள் எல்லாம் வைத்தியநாத ஸ்தபதியின் வீடு தேடி வந்து சந்தேகங்களைத் தீர்த்துக் கொண்டு போவார்கள். எல்லாவற்றிற்கும் புத்தகத்திலிருந்து ஆதாரங்களைக் காட்டுவார். அவ்வளவு புத்தகங்கள் வீட்டில் இருக்கும்.

'இத்தனைப் புத்தகங்களை இவர் எப்போது படித்தார்? சகல விஷயங்களும் தெரிந்தவராக இருக்கிறாரே, இவருக்கு மகனாய்ப் பிறக்க நான் பெரும் புண்ணியம் செய்திருக்க வேண்டும்' என்று எண்ணிக் கொள்வாராம் கணபதி.

இன்றளவும் மறைந்த அவரது தந்தையின் மீது அளவற்ற பக்தியும், மரியாதையும், பாசமும் கொண்டுள்ள அவருக்குத் தந்தையைப் பற்றிப் பேசும்போதெல்லாம் உணர்ச்சி மிகுதியால் தொண்டை கம்ம கண்கள் கலங்குவதைக் காணலாம்.

பள்ளிப் படிப்பைத் தொடர்வதற்காக சேலம் குடிபெயர்ந்தனர் திரு. வைத்தியநாத ஸ்தபதியின் குடும்பத்தினர். அப்போது சேலம் சுகவனேஸ்வரர் கோயில் திருப்பணியை அவர் மேற்கொண் டிருந்தார். சேலத்தில் இந்து மகாஜன உயர்நிலைப்பள்ளியில் பள்ளி இறுதியாண்டு படித்துக் கொண்டு வந்தார் கணபதி.



# The Royal Lineage



**Vaastu Shilpa Vachaspati Late Sri. V. Makizhavanam Sthapati**
Grandfather of Dr. V. Ganapati Sthapati
(1874 - 1953)



**Silpakalasāgāram Late Sri. M. Vaidyanathan Sthapati**
Father of Dr. V. Ganapati Sthapati
(1905 - 1962)



**Dr. V. Ganapati Sthapati**



அந்தணர்கள் வசிக்கும் அக்ரஹாரம் எனப்படும் பகுதியிலேயே இவர்களுக்கு ஜாகை வழங்கியிருந்தது கோயில் நிர்வாகம். சுகவனேஸ்வரர் கோயில் திருப்பணியுடன் திருவண்ணாமலை இரமணாஸ்ரமத்தில் உள்ள மாத்ருபூதேஸ்வரர் சன்னிதி திருப்பணியையும் திரு.வைத்தியநாத ஸ்தபதி ஏற்றுக் கொண்டிருந்ததால் சேலத்திற்கும், திருவண்ணாமலைக்கும் அடிக்கடி போய் வந்து கொண்டிருப்பார்.

பள்ளி இறுதியாண்டு படித்தாலும், விளையாட்டுதான் கணபதியின் வாழ்க்கையில் முதலிடம். உயரமாக இருந்ததினால் கால் பந்தாட்டத்தில் மிகவும் ஈடுபாடு. பள்ளியின் கால்பந்தாட்டக் குழுவின் தலைவன்.

எவ்வளவுதான் விளையாடினாலும் விளக்கு வைத்ததும் வீட்டிற்கு வந்து சிம்னி விளக்கின் உதவியுடன் படிக்கத் தொடங்கி விடுவார். பாடம் ஒரு பக்கத்தில் படித்துக் கொண்டிருந்தாலும் வீட்டினுள்ளே பாட்டு கற்றுக் கொண்டிருக்கும் மற்ற இரு தம்பிகளின் பாட்டையும் கவனித்துக் கொண்டிருப்பார். அதன் விளைவு, கர்நாடக சங்கீதத்தில் நல்ல பரிச்சயம் உண்டாயிற்று அவருக்கு. பாடவில்லை என்றாலும், இராகத்தை மிகச் சரியாகக் கண்டு பிடித்து விடுவார். இன்றும் அவர் இராகங்களைக் கண்டு பிடிக்கும் திறமையைக் கண்டு வியப்படைவோம்.

அக்ரஹாரத்தில் உள்ள மற்ற பிள்ளைகள் எப்போதும் படித்துக் கொண்டிருந்தாலும், இவர் குறிப்பிட்ட சிறிது நேரமே படித்துப் புரிந்து கொண்டு, எல்லோரையும் விட அதிக மதிப்பெண் பெற்று பள்ளி இறுதித் தேர்வில் வென்றார். அதைக் குறித்து மற்ற பிள்ளைகளுடைய பெற்றோர்கள் ‘வைத்தியநாத ஸ்தபதியி னுடைய பையனைப் பார். எவ்வளவு புத்திசாலி’ என்று போற்றிப் புகழ்வர். இவ்வாறாக, பள்ளி இறுதித் தேர்வை முடித்தார்.

## கல்லூரி வாழ்க்கை....

பள்ளி இறுதியாண்டு படிக்கும் போதே தந்தையார் திரு.வைத்தியநாத ஸ்தபதி திருவண்ணாமலை இரமணாஸ்ர மத்தின் மாத்ருபூதேஸ்வரர் சந்நிதி திருப்பணியை ஏற்றுக் கொண்டதால், கணபதியும் அடிக்கடி திருவண்ணாமலை சென்று வரத் தொடங்கினார். இதனால் பகவான் ஸ்ரீஇரமண மகரிஷியின் அன்புக்குப் பாத்திரமானார்.

இரமணரைச் சுற்றி நம்நாட்டவர்களும், வெளிநாட்ட வர்களும் குழுமி எப்போதும் கூட்டமாகவே இருக்கும். இரமணர் போதிக்கும் 'நான் யார்?' என்ற ஆத்ம விசாரணைச் சொற்ப்பொழிவைக் கேட்க அனைவரும் அவரைச் சுற்றி இருப்பர். இதனால், இரமணரது 'நான் யார்?' சொற்ப் பொழிவை நேரில் கேட்கும் வாய்ப்பையும், ஆசிகளையும் பெற்றவரானார் கணபதி.

'எத்தனை கூட்டம் இருந்தால் என்ன? எத்தனை பெரிய மனிதர்களாகத்தான் இருந்தால் என்ன?' கணபதி அங்கு சென்று விட்டாலே ''வைத்தியநாத ஸ்தபதியின் பையன் வந்து விட்டான்''என்று மகிழ்வுடன் கூறி, அருகில் அழைத்து அமர வைத்துக் கொள்வாராம் இரமண மகரிஷிகள். இன்றளவும் அதை மாபெரும் பாக்கியமாகக் கருதுகிறார் அவர்.

பள்ளி இறுதி முடிவு வெளியாகும் தருணம் இரமணாஸ்ரமத்தில் இருந்தார் கணபதி. முடிவை செய்தித்தாளில் அவர் இன்னும் பார்க்கவில்லை. அப்போது இரமணர் அவரை அருகில் அழைத்து ''கணபதி, நீ பரீட்சையில் பாஸாயிட்டே. உன்னுடைய நம்பர் 25627 பேப்பரில் வந்திருக்குடா'' என்று சிறு

பிள்ளை போல் மகிழ்ச்சியுடன் சொல்லியதை நினைத்து நெக்குருகிப் போவார் கணபதி ஸ்தபதி அவர்கள். 'இரமண மகரிஷி எவ்வளவு பெரிய மகான்! என்னுடைய தேர்வு எண்ணை ஞாபகம் வைத்துக் கொண்டு அவ்வளவு பேர் மத்தியில் கூப்பிட்டுச் சொல்ல நான் என்ன புண்ணியம் செய்திருக்க வேண்டும்' என்று அடிக்கடி கூறிக் கொண்டே இருப்பார்.

நல்ல மதிப்பெண்கள் Intermediate exams ல் பெற்றுத் தேர்ச்சி பெற்றிருந்தாலும், சென்னையிலுள்ள கிண்டி பொறியியல் கல்லூரியில் படிப்பதற்கு நுழைவு அனுமதி கிடைத்தாலும், குடும்பத்தில் நிலவும் வறுமை காரணமாக [வருடம் ரூ 480/- கட்ட வேண்டும் - 1947 ம் வருடம்] அந்த



ஸ்ரீ இரமண மகரிஷிகளுடன் திரு.வைத்தியநாத ஸ்தபதி (வலது) மற்றும் இரமணரது சகோதரர் மகன் திரு.வெங்கட்ராமன் (இடது)

வாய்ப்பை அவர் ஏற்கவில்லை. [அதனால் என்ன? அப்படி அவர் பொறியியல் படிப்பைப் படிப்பதற்குச் சென்றிருந்தால், சிற்பத்துறை ஓர் அருமையான விற்பன்னரை இழந்திருக்கும்.]

என்ன செய்வது என்று புரியாமல், இரமணரிடம் சென்ற போது, அவர் ''கணபதி! நீ கவலைப்படாதே! பொறியியல் படிக்கவில்லை எனில் என்ன? உனக்காகவே, உனது ஊரிலேயே ஒரு கல்லூரி காரைக்குடியில் திறக்கிறார்கள். நீ அங்கே போய்க் கணிதம் படி'' என்று கூறி விட்டார். ஆம். அந்த வருடம்தான் [1947 ம் வருடம் ஆகஸ்டு 15ம் நாள்] காரைக்குடியிலுள்ள அழகப்பா கலைக் கல்லூரி ஆரம்பிக்கப்பட்டது.

புதிதாக ஆரம்பிக்கப்பட்ட அந்தக் கல்லூரியின் முதல் வருடத்தில் கணிதம் படிப்பதற்கு சேர்ந்து விட்டார். 'கணபதி' என்ற பெயரில் அழகப்பா கல்லூரியின் முதல் மாணவராக சேர்த்துக் கொள்ளப்பட்டார். இன்றும் அழகப்பா கல்லூரியின் வரலாற்றில் அக்கல்லூரியின் முதல் மாணவன் 'கணபதி' என்றிருக்கும். எந்தவொரு காரியத்தையும் தொடங்கும் பொழுது கணபதியை நினைத்துக் கொண்டுதான் செய்வார்கள். அழகப்பா கல்லூரிக்கோ கணபதியே வந்து விட்டார்!

அக்கல்லூரியின் நிறுவனர் திரு.அழகப்பா செட்டியார் அவர்கள் கல்லூரி தொடங்கிய சில நாட்களில் கல்லூரிக்கு விஜயம் செய்தார். அப்பொழுது முதல் வருடம் படிக்கும் மாணவர்கள் அனைவரையும் அவரிடம் அறிமுகப் படுத்துவதற்காக அழைத்து வந்தனர். முதல் மாணவன் பெயர் கணபதி என்று அறிமுகப்படுத்தப்பட்டதும் திரு.அழகப்ப

செட்டியார் அடைந்த மகிழ்ச்சிக்கு அளவே இல்லை. கல்லூரியில் உதவித் தொகை பெற்று திரு.கணபதி படித்தார்.

கணிதம் படித்தாலும் சிறப்புப் பாடமாக சம்ஸ்கிருதத்தைத் தேர்ந்தெடுத்தார். அப்போது அவருக்கு சம்ஸ்கிருத ஆசிரியராக இருந்தவர் திரு. நாகராஜ சர்மா என்பவர். அவர் சம்ஸ் கிருதத்திலும், ஆங்கிலத்திலும் பெரும் பாண்டித்யம் பெற்றவர். [திரு. நாகராஜ சர்மாவின் ஆங்கிலப் பேராசிரியர் **Right Honourable, Silver Tongued** திரு. சீனிவாச சாஸ்திரியாகும்.]

அப்படிப் பெரும் பாண்டித்யம் பெற்ற திரு. நாகராஜ சர்மாவிடம் பயின்றதால், இன்றளவும் கணபதி ஸ்தபதியாரின் சம்ஸ்கிருத மற்றும் ஆங்கிலப் புலமை மற்றவர்கள் கண்டு வியக்கும்படிதான் இருக்கும். அவர் எழுதும் புத்தகங்களில் அந்த ஆற்றல் வெளிப்படும். அவரது புத்தகங்களைப் படித்த பல பெரியோர்கள், அவற்றில் கையாளப்பட்டுள்ள எளிமையான ஆனால் இனிமையான மொழி நடையைக் கண்டு பாராட்டிப் பேசுவர்.

திரு. நாகராஜ சர்மா அவர்களுக்குத் தற்போது 88 வயது. வெகு சமீபத்தில் அவரை நேரில் திரு. கணபதி ஸ்தபதி அவர்கள் சந்தித்து பேசிய உணர்ச்சி மிகு நிகழ்ச்சியைப் பிறிதொரு அத்தியாயத்தில் விளக்கப்படும்.

இவ்வாறு காரைக்குடி அழகப்பா கல்லூரியில் சேர்ந்து கணிதத்தில் பட்டப்படிப்பு (B.A. Maths)முடித்தார், திரு. கணபதி ஸ்தபதி.

## மூதறிஞர் திரு.இராஜாஜி அவர்களுடன்..

பட்டப் படிப்பு முடித்ததும், கணபதி மும்முரமாக வேலை தேடிக் கொண்டிருந்த காலகட்டம். அப்போது அவரது தந்தையார் இலங்கையிலுள்ள தம்பலகாமம் என்ற ஊரிலுள்ள தம்பலகாமேஸ்வரர் கோயிலின் ஐந்து நிலைகள் கொண்ட இராஜகோபுரத் திருப்பணி முடித்து விட்டுத் திரும்பியிருந்தார்.

அப்போது, தஞ்சையில் ஒரு கலைக்கூடம் திறப்பு விழாவிற்கு ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது. அதில் திரு. வைத்தியநாத ஸ்தபதி வரைந்த ஆடவல்லான் ஓவியம் ஒன்று மாட்டப்பட்டிருந்தது. [திறப்பு விழா தொடங்குவதற்கு முன்பாக அரங்கத்தைப் பார்வையிட்ட கம்பன் அடிப்பொடி திரு.சா.கணேசன் அவர்கள், திரு.பாஸ்கரத் தொண்டைமான் அவர்கள் மற்றும் திரு. T.K. பழனியப்பன் I.A.S. அவர்கள் ஆகியோர் அங்கு மாட்டியிருந்த எல்லா ஓவியங்களையும் அகற்றும்படி கூறினர். ஆயினும் திரு. வைத்தியநாத ஸ்தபதி அவர்களின் ஓவியத்தை மட்டும் அதன் அழகில் மயங்கி மாட்டுவதற்கு ஒப்புதல் அளித்தனர் என்பது குறிப்பிடத்தக்கதாகும்.]

ஓவியத்தை மாட்டுவதற்கு அளித்து விட்டு அவர் தனது மகன் கணபதியை அழைத்துக் கொண்டு தஞ்சை பிரகதீஸ்வரர் கோயிலுக்குச் சென்று விட்டார். கோயில் விமானத்தின் கலைநுணுக்கங்களை மகனுக்கு எடுத்துச் சொல்லிக் கொண்டிருந்தார். விமானத்தைக் கட்டிய குஞ்சர மல்லன் இராஜஇராஜ பெருந்தச்சன் வழி வந்தவர்களாயிற்றே! தனது முன்னோர்கள் கட்டிய விமானத்தின் கலை மற்றும் விஞ்ஞான

உண்மைகளை விளக்கிக் கொண்டிருந்தார். விளக்கி முடித்து, கோயிலை நன்கு சுற்றிப் பார்த்து விட்டு நிதானமாகக் கலைக்கூடத்திற்குத் திரும்பினர்.

கலைக்கூடத் திறப்பு விழா அப்போதைய தமிழக முதல்வர் திரு.இராஜாஜி அவர்களால் நடைபெற்றது. திறப்பு விழா முடிந்ததும் அங்கு மாட்டப்பட்டிருந்த ஓவியங்களைப் பார்வையிட்ட அவர் திரு.வைத்தியநாத ஸ்தபதி வரைந்த ஓவியத்தைப் பார்த்து, மிகவும் மகிழ்ந்து, 'இதை வரைந்தவர் யார்?' எனக் கேட்டுள்ளார். அவருடன் எப்பொழுதும் இருக்கும் கம்பன் அடிப்பொடி திரு.சா. கணேசன் அவர்களும், திரு.கல்கி அவர்களும் வைத்தியநாத ஸ்தபதியைப் பற்றிக் கூறியுள்ளார்கள்.

திரு. இராஜாஜி அவர்கள் ஒரு முறை திருவண்ணா மலையில் உள்ள இரமணாஸ்ரமத்திற்கு வருகை தந்திருந்த போது, அங்குக் கருவறையின் தெற்குப் பக்கத்தில் வைக்கப் பட்டிருந்த தஷிணாமூர்த்தி விக்ரஹத்தைப் பார்த்து, அதன் அழகில் மயங்கி, 'இதைச் செய்தவர் யார்?' என்று வினவி, அங்குள்ளவர்கள், 'திரு.வைத்தியநாத ஸ்தபதிதான் அச்சிலையை வடித்தவர்' என்று கூறியதும் 'அவரைச் சந்தித்துப் பேச வேண்டும்' என்று திரு.இராஜாஜி அவர்கள் கூறியிருந்தது இங்கு குறிப்பிடத்தக்கது.

கலைக் கூடத்தில் மாட்டப் பெற்றிருந்த ஓவியத்தைப் பார்த்த திரு.இராஜாஜி மறுபடி திரு.வைத்தியநாத ஸ்தபதியை உடனடியாகப் பார்க்க வேண்டுமென்றார்கள். ஒலிபெருக்கியில் பலமுறை அழைத்தும் வைத்தியநாத ஸ்தபதி வரவில்லை. அவர்தான் பிரகதீஸ்வரர் ஆலயத்திற்கு மகனுடன் சென்று

விட்டாரே! சென்னை வந்து தன்னைப் பார்க்கும்படி பணித்து விட்டு திரு.இராஜாஜி சென்னை திரும்பி விட்டார்.

கோயிலிலிருந்து திரும்பி வந்த வைத்தியநாத ஸ்தபதியிடம் விவரங்களைக் கூறிய திரு.சா.கணேசனும், திரு.கல்கியும் சென்னை சென்று திரு.இராஜாஜியைப் பார்ப்பதற்கு ஏற்பாடு செய்தனர். முன் அனுமதி பெற்று ஒருநாள் திரு.வைத்தியநாத ஸ்தபதி, அவர் மகன் கணபதியுடனும், திரு.சா.கணேசன் மற்றும் திரு. கல்கியுடனும் திரு.இராஜாஜியைப் பார்ப்பதற்குச் சென்றனர்.

வைத்தியநாத ஸ்தபதியைப் பார்த்த திரு.இராஜாஜி ‘மிகவும் இளவயதினராகத் தெரிகிறீர்களே’ என்றாராம். பிறகு அவருடைய குடும்பப் பின்னணியைப் பற்றியும், அதன் பாரம்பரியம் பற்றியும் கேட்டறிந்தார்.

அதன் பின்னர், சென்னையில் மகாத்மா காந்தியடிகளுக்கு ஒரு நினைவு மண்டபம் கட்ட வேண்டும் என்றும் அதற்கான வரைபடங்கள் மற்றும் திட்ட மதிப்பீடு தயாரித்துக் கொண்டு வரும்படியும் ஆணையிட்டார்.

இதனிடையில், காந்தி மண்டபம் கட்டுவதற்கான ஒப்பந்த அறிக்கை நாளிதழ்களிலும் வெளியிடச் செய்தார். விளம்பரத்தைப் பார்த்து அணுகியவர்களில் மூவரின் வரைபடங்கள்தான் கடைசி கட்டத் தேர்வுக்குத் தகுதி பெற்றது. அதில் ஒன்று திரு.வைத்தியநாத ஸ்தபதியினுடையது. மூன்றையும் பார்வையிட்ட திரு.இராஜாஜி அவர்கள் சில தகுதியான காரணங்களுக்காக மற்ற இரண்டு வரைபடங்களையும் நிராகரித்து விட்டு வைத்தியநாத ஸ்தபதியினுடைய வரைபடத்தை மட்டும் தேர்வு செய்தார். ஏனெனில், மிகவும் அழகாகவும், கலை

நுணுக்கங்களுடனும் அது காணப்பட்டது. ஒப்புதல் அளித்ததும், உடனடியாகப் பணிகளை ஆரம்பிக்கும்படிக் கூறினார். சென்னையில், இராஜ்பவன் அருகில் உள்ள இடத்தையும் ஒதுக்கீடு செய்து கொடுத்தாகி விட்டது. வைத்தியநாத ஸ்தபதி குடும்பத்துடன் தங்குவதற்கு மத்திய தோல் ஆராயச்சி நிலையத்திற்கு எதிரில் வீடு ஒன்றும் அளிக்கப்பட்டது.

தற்போது சென்னை கிண்டியிலுள்ள கவின்மிகு காந்திமண்டபம் திரு.வைத்தியநாத ஸ்தபதியால் தொடங்கப்பட்டு மூன்று ஆண்டுகளில் கட்டிமுடிக்கப்பட்டது. பணி நடைபெற்றுக் கொண்டிருக்கும் போதே அடிக்கடி பணிகளைப் பார்வையிடுவதற்காக திரு. இராஜாஜி அவர்கள் வருவது வழக்கம். ஓவ்வொரு முறை வரும் போதும் வைத்தியநாத ஸ்தபதியுடன் அவர்களது பாரம்பரியம் பற்றியும் கலைத் திறமையைப் பற்றியும் ஆவலுடன் கேட்டறிவார். 'இப்படிப்பட்ட ஓர் அருமையான சிற்பக்கலையை அனைவரும் கற்கும் வண்ணம் ஏற்பாடு செய்தால் என்ன' என்ற எண்ணமும் அவருக்குத் தோன்றி விட்டது. அதற்கான ஏற்பாடுகளையும் செய்யத் தொடங்கினார். அப்போது அவர் எண்ணத்தில் முகிழ்ந்து செயலாக்கப்பட்டதுதான் தற்போது மாமல்லபுரத்தில் இயங்கி வரும் 'அரசு சிற்பம் மற்றும் கட்டிடக் கலைக் கல்லூரி.'

மண்டபம் கட்டி முடிக்கும் தருணத்தில் திரு.இராஜாஜி அவர்கள் வைத்தியநாத ஸ்தபதியை அழைத்து ''இது ஒரு கலைப் பொக்கிஷம். இதைக்கட்டிய உங்களது பெயர் மட்டுமே இதில் பொறிக்கப்பட வேண்டும். உங்கள் பெயரை எப்படி எழுதுவீர்கள்?'' என்று கேட்டார்.

''ம.வைத்தியநாதன் என்று எழுதுவேன்''

''வேறு எப்படி எழுதுவீர்கள்? ''

''வைத்தியநாத ஸ்தபதி என்று எழுதுவேன்.''

''அது வேண்டாம். இனி ஸ்தபதி ம.வைத்தியநாத ஆச்சாரி என்று எழுதுங்கள். அப்படியே கல்லிலும் செதுக்கி விடுங்கள். எல்லோரும், எப்போதும் பார்க்கும் இடத்தில் [உபபீடத்தில்] அந்தக் கல்வெட்டு இருக்க வேண்டும். இந்த மண்டபம் ஏதோ காரணங்களுக்காக அழிந்து விட்டாலும் உங்களது பெயர் அழியாமல் நிலைத்து நிற்க வேண்டும் '' என்று திரு.இராஜாஜி அவர்கள் கூறினார். சற்றே மிகைப்படுத்தப் பட்டுக் கூறப்பட்ட வார்த்தைகள் எனினும், ஒரு மாநில முதல்வரால், அன்பின் மிகுதியால் கூறப்பட்டதை உணர்ந்து மகிழ வேண்டும்.

எங்கே அந்த கல்வெட்டு செதுக்கப்பட வேண்டும் என்றும் திரு.இராஜாஜியே சுட்டிக் காட்டினார். அப்படியே செதுக்கப்பட்டது.

மண்டபம் முடிவுறும் தருணத்தில் திரு. இராஜாஜி அவர்கள் அப்பணியின் நிர்வாகக் கூட்டத்தில், 'காந்தி மண்டபம் கட்டும்



சென்னை காந்தி மண்டபத்தில் உள்ள கல்வெட்டு

பணி முடியப் போகிறது. தலைமை ஸ்தபதியான வைத்தியநாத ஸ்தபதியை கௌரவிக்க விரும்புகிறேன். ஆனால், அதற்காக அரசாங்கத் திலிருந்து செலவழிக்கக் கூடாது. எனவே, எனது சொந்தப் பணத்தில் அவருக்கு ஒரு பரிசுப் பொருளை வாங்கி, திறப்பு விழாவில் அவரை கௌரவிக்க எண்ணுகிறேன்' என்று கூறி விட்டார்.



முதறிஞர் இராஜாஜி அவர்களால் திரு.வைத்தியநாத ஸ்தபதி அவர்களுக்கு அணிவிக்கப்பட்ட தோடா என்னும் ஆபரணம்

காந்தி மண்டபம் கட்டி முடிக்கப்பட்டு நாட்டுக்கு அர்ப்பணிக்கும் விழாவும் நெருங்கியது. விழாவன்று திரு.வைத்தியநாத ஸ்தபதியுடன் கணபதியும் சென்றிருந்தார். இருவரையும் மேடையின் பின் வரிசையில் அமர வைத்திருந்தனர். அப்போது திரு. காமராஜ் அவர்கள் முதலமைச்சராக பதவி வகித்தார். திரு. இராஜாஜியும் விழாவிற்கு வந்திருந்தார். அவரது திருக்கரங்களால் கௌரவிக்கப்பட இருக் கிறோம் என்று இருவருக்கும் பெரும் எதிர்பார்ப்பும், மகிழ்ச்சியும்.

விழா தொடங்கி, அனைவரும் பேசி முடித்து, நாட்டுக்கு காந்தி மண்டபமும் அர்ப்பணிக்கப்பட்டது. விழா நிறைவு கட்டத்தை எய்தி, நாட்டுப்பண்ணும் இசைக்கப்பட்டது. வைத்தியநாத ஸ்தபதியை திரு.இராஜாஜி கௌரவிக்கும் நிகழ்ச்சி மட்டும் நடக்கவில்லை. மனதில் பெரும் ஏமாற்றம் இருவருக்கும்.

நாட்டுப்பண் முடிந்ததும் திரு.இராஜாஜி கூட்டத்தினரைப் பார்த்து, ''எல்லோரும் சற்று நேரம் பொறுத்திருங்கள். இப்போதுதான் மிகவும் முக்கியமானதொரு நிகழ்ச்சி நடைபெறப்போகிறது. இப்போது நான் இந்த மண்டபத்தைக் கட்டிய திரு. வைத்தியநாத ஸ்தபதியை கௌரவிக்க எண்ணியுள்ளேன். அவர் மிகவும் பாரம்பரியமான கலைக் குடும்பத்தில் பிறந்தவர். விசுவகர்மர். அரசாங்க மதிப்பீட்டின்படி இம்மண்டபம் கட்டி முடிக்க ரூபாய் ஏழு இலட்சம் ஆகும் என்று தீர்மானிக்கப்பட்டாலும் இவர் அதை வெறும் மூன்று இலட்ச ரூபாய்க்கு செய்து முடித்தவர். மிகவும் திறமைசாலி'' என்றெல்லாம் பாராட்டிப் பேசிவிட்டு, தன் கையால் சுமார் நான்கு பவுன் மதிப்புள்ள தோடா என்று அழைக்கப்படும் தங்கக் காப்பு ஒன்றை திரு.வைத்தியநாத ஸ்தபதிக்கு அணிவித்தார்.

அந்த நிகழ்ச்சியை நேரில் பார்த்த கணபதி ஸ்தபதி அவர்கள் இன்று வரை அதுதான் தன் தந்தைக்குக் கிடைத்த மிகப் பெரும் கௌரவம் என்றும் அதைத் தான் நேரில் காணக் கிடைக்கப் பெற்றதைப் பெரும் பேறாகவும் கருதுகிறார். இன்றும் திரு.இராஜாஜியின் திருக்கரங்களால் வழங்கப் பெற்ற அந்தக் காப்பு பொக்கிஷம் போல் ஸ்தபதியின் குடும்பத்தினரால் பாதுகாக்கப்பட்டு வருகிறது. அவர்கள் இல்லத் திருமணங்களில் மணமகன் கைகளில் அணிவிக்கப்படும் முக்கிய ஆபரணமாக இன்றுவரை அந்தக் காப்பு திகழ்கிறது.

சிற்பக்கலைக்கென்று ஒரு கல்லூரி அமைக்கப்பட வேண்டும் என்ற திரு.இராஜாஜியின் பேரவா 1957 ஆம் ஆண்டு நிறைவேறியது. அது சமயம் அகில இந்திய கைவினைப் பொருள்கள் கழகத்தின் நிறுவனராக இருந்த திருமதி கமலாதேவி சட்டோப்பாத்யாயா என்பவரது முயற்சியாலும் அக்கல்லூரி மாமல்லபுரத்தில் ஆரம்பிக்கப்பட்டது. அக்கல்லூரியின் முதல்வராக திரு.வைத்தியநாத ஸ்தபதியையே நியமிக்கப்பட்டார்.

அப்பணியில் மூன்று ஆண்டுகள் செவ்வனே பணியாற்றிய திரு.வைத்தியநாத ஸ்தபதி 'வாதம்' என்னும் கடும் நோயால் பாதிக்கப்பட்டார். அவரது புதல்வர்கள் அவரை சென்னை அரசு பொது மருத்துவமனையில் சேர்த்து இரவும் பகலும் துணையிருந்து அயராது கவனித்துக் கொண்டனர்.

திரு.இராஜாஜி அவர்கள் அப்போது திரு.வைத்தியநாத ஸ்தபதியை கவனித்துக் கொண்டிருந்த மருத்துவமனை மருத்துவருக்கு ஒரு கடிதம் எழுதினார். அதன் சாராம்சம் பின்வருமாறு:

''வைத்தியநாத ஸ்தபதிக்கு வந்த வாதம் சிற்பக்கலைக்கே வாதம் வந்தது போல. எனவே, அவரைக் காப்பாற்றுவதின் மூலம் சிற்பக்கலையையே காப்பாற்றி விடலாம். அவரை நன்கு கவனித்துக் காப்பாற்றவும்.''

ஒரு மாகாணத்திற்கே முதல்வராக இருந்தவர். மூதறிஞர். மாமேதை. அவர் தன் தந்தையைக் காப்பாற்றும் படி கடிதம் எழுதியமை கண்டு உள்ளம் நெகிழ்வார் திரு. கணபதி ஸ்தபதி அவர்கள்.

## பள்ளி ஆசிரியராக ....

கணிதத்தில் பட்டப்படிப்பு முடித்ததும் வேலை தேடத் தயாரானார் கணபதி. தட்டச்சுத் தேர்வு எழுதித் தேறினார். தபால் துறையில் வேலைக்குண்டான தேர்வை எழுதினார். அதிலும் முதல் ரேங்கில் தேர்ச்சி பெற்று விட்டார். [எதைப்படித்தாலும் அதைப் புரிந்து கொண்டு, அதை இரசித்துப் படித்தாலே தேர்வுக்கென்று தனியாகப் படிக்க வேண்டாம் என்பார் அவர். இந்த அறிவுரை எக்காலத்திலும் உள்ள மாணவர்களுக்குப் பொருந்துமன்றோ?]

தபால் துறையிலிருந்து வேலைக்குச் சேர்வதற்கான கடிதம் வந்து விட்டது. வடஇந்தியாவிலுள்ள ஆஜ்மீர் என்ற ஊரில் வந்து வேலையை ஒப்புக் கொள்ளும்படி. தமிழ்நாட்டைவிட்டு அவ்வளவு தொலைவு போக வேண்டுமா என்று யோசித்த கணபதி தபால் துறைக்கு விண்ணப்பித்து ''தென்னிந்தியாவிலேயே எங்கேயாவது பணி கிடைக்குமா'' என்று கேட்டார்.

உடனே மைசூரில் வந்து சேரும்படி அழைப்பு வந்தது. மறுபடி தபால்துறைக்குக் கடிதம் எழுதி ''தமிழ்நாட்டிலேயே, குறிப்பாகத் தான் வசிக்கும் காரைக்குடியிலேயே கிடைக்குமா'' என்று வினவினார். என்ன ஆச்சரியம்! உடனே காரைக் குடியிலேயே வந்து சேரும்படி தபால் வந்து விட்டது அந்தத் துறையிலிருந்து.

உடனே கணபதி, அவரது பெரிய தந்தையான திரு. செல்லக் கண்ணு ஸ்தபதியின் துணையோடு காரைக்குடி தபால்

நிலையத்தை அடைந்து, அங்கிருந்த அதிகாரியைப் பார்த்தார். அந்த அதிகாரியோ மிகவும் நல்லவர்.

இவர்களது குடும்பப் பின்னணியைக் கேட்டறிந்து, மிகவும் மகிழ்ந்து கணபதியிடம், ''தம்பி! நீயோ ஒரு பாரம்பரியம் மிக்க குடும்பம் ஒன்றிலிருந்து வந்திருக்கிறாய். உனக்கு ஏன் இந்தப் பணி? வெறும் முத்திரை குத்துவதிலேயே உனது வாழ்நாளில் பாதி கழிந்து விடும். போய் உன் குலத் தொழிலைச் செய். அதில் நீ பெரிய விந்தைகள் செய்யும் வித்தகனாய் வருவாய்'' என்று அறிவுரை கூறி அனுப்பி விட்டார்.

யோசித்துப் பார்த்த கணபதியும் அவரது கூற்றிலுள்ள நியாயத்தை உணர்ந்து, தபால் துறை வேலையை ஒத்துக் கொள்வதில்லை என்று முடிவு செய்து வந்து விட்டார். [அப்போதே அவர் அந்தப் பணியை ஒத்துக் கொண்டிருந்தால் தபால் துறை வேண்டுமானால் ஒரு மிகச் சிறந்த அதிகாரியை அடைந்திருக்கும். ஆனால் சிற்பத்துறை மிகச் சிறந்த ஒரு விற்பன்னரை இழந்திருக்கும்.]

தபால்துறை வேலை வேண்டாம் என்று வந்து விட்டாலும், குடும்பத்தில் நிலவும் வறுமையைப் போக்க ஏதாவது வேலை பார்த்தாக வேண்டும் என்ற நிலைக்குத் தள்ளப்பட்டார். அப்போது அவர் படித்த N.S.M.V.P.S.High School பள்ளியிலேயே கணிதம் கற்பிக்கும் ஆசிரியராகப் பணியாற்றும் வாய்ப்பு தேடி வந்தது. மகிழ்ச்சியுடன் அப்பணியை ஏற்றுக் கொண்டார் கணபதி. காரணம் ஆசிரியப் பணி அவருக்கு மிகவும் பிடித்ததொன்றாகும்.

[illegible] S.M.S.V. High School

பள்ளியில் படிக்கும் போதே, விடுமுறை நாட்களில் அருகாமையில் உள்ள கிராமத்தில் உள்ள சிறுவர் சிறுமியர்களை அழைத்து வந்து மரத்தடியில் உட்கார வைத்துப் பாடம் சொல்லித் தருவதில் மகிழ்ச்சி அடைவார். பாடம் நடத்துவது மட்டுமல்ல, இரண்டு நாள் வகுப்பு முடிந்ததும் அதில் தேர்வும் நடத்துவார். அதுவும் எப்படி தெரியுமா?

'ரப்பர் ஸ்டாம்ப்' எனப்படும் முத்திரைகளில் வீணாகிப் போன, கெட்டுப் போன முத்தரைகளை அங்கங்கே கிடைக்கும் போது சேர்த்து வைத்துக் கொள்வார். அதில் உள்ள நல்ல எழுத்துக்களை சேர்த்து வைத்து அதை அச்சுக் கோர்த்து வினாத்தாள் தயார் செய்வார். பார்த்தால், அச்சிடப்பட்ட வினாத்தாள் மாதிரியே இருக்கும் அது. அந்த வினாத்தாளை மாணவர்களுக்குக் கொடுத்துத் தேர்வை நடத்துவார் அவர். எந்த வேலையைச் செய்தாலும் கன கச்சிதமாகச் செய்தாக வேண்டுமே அவருக்கு!

இப்படியாக, மிகவும் பிடித்தமான பணியான ஆசிரியப் பணி கிடைத்தால் வேண்டாம் என்று சொல்வாரா என்ன? பள்ளியின் முதல்வர் திரு. ஆராவமுத ஐயங்கார் அவரை அழைத்து, ''கணபதி! இந்தப் பள்ளியில் இறுதி வகுப்பு படிக்கும் மாணவர்கள் கணிதத்தில்தான் மிகவும் பின்தங்கியுள்ளனர். அதனால், பல மாணவர்கள் பள்ளி இறுதித் தேர்வில் தேர்ச்சி பெறுவதில்லை. நீ பள்ளி இறுதி வகுப்பு பயிலும் மாணவர்களுக்குக் கணிதம் சொல்லிக் கொடுக்கப் போகிறாய். அதனால் நன்றாகக் கற்றுக் கொடு'' என்று கூறினார்.

அப்படியே செய்வதாக வாக்களித்து விட்டு கணிதம் பயிற்றுவிக்க ஆரம்பித்தார் கணபதி. கணிதத்தை ஒரு பாடமாகப் பயிற்றுவிக்காமல், அதை ஒரு கலையாக, கணிதமாக் கலையாக எண்ணி, ஆத்மார்த்தமாகக் கற்றுக் கொடுக்க ஆரம்பித்தார். விளைவு.... கணக்கென்றாலே காத தூரம் ஓடும் மாணவர்கள் இவர் வகுப்பிற்குத் தவறாமல் வரத் தொடங்கினார்கள்.

பள்ளியில் கணிதம் பயிற்றுவிக்கும் நாட்களில் முக்கியமான கணித சூத்திரங்களைத் தொகுத்து ஒரு புத்தகமாக வெளியிட்டார். அதன் விலை ரூபாய் ஒன்று. பிறகு, முக்கியமான வினா விடைகளை Multiple choice என்ற பாணியில் தொகுத்து வெளியிட்டார். அதன் விலை ரூபாய் இரண்டு.

புத்தகங்களை அச்சடிப்பதற்கு சென்னையிலுள்ள சுங்குராம் செட்டித் தெருவிற்கு வருவார். அச்சடித்த பின்னர் புத்தகங்களை விற்பதற்காக காரைக்குடிக்கு எடுத்துச் செல்வார். மொத்தம் ஆயிரம் பிரதிகள். அத்தனை புத்தகங்களும் மாணவர்களிடையே பெரும் வரவேற்பைப் பெற்று விற்றுத் தீர்ந்து விட்டன. ஏனெனில், தேர்வு எழுதும் மாணவன் என்னவெல்லாம் படித்துக் கொண்டு போக வேண்டுமோ அத்தனையும் அந்தப் புத்தகங்களில் இருக்கும்.

எதிர்பார்த்தபடியே 85 சதவீதம் மாணவர்கள் கணிதத்தில் தேர்ச்சி பெற்று, பள்ளியின் புகழை உயர்த்தி விட்டனர். மாணவர்களுக்கும், சக ஆசிரியர்களுக்கும், தலைமை ஆசிரியருக்கும் கணபதி கதாநாயகனாகவே தோற்றமளிக்கத் தொடங்கினார்.

இதற்கிடையில் பழனி அருள்மிகு தண்டாயுதபாணி திருக்கோயிலுக்கு ஆஸ்தான ஸ்தபதி பணிக்கான விளம்பரத்தைப் பார்த்து, தனது குலத் தொழிலை ஒட்டிய பணியாக இருக்கிறதே என்றுஅதற்கு விண்ணப்பித்திருந்தார் கணபதி. அதற்கான வேலையில் சேரும்படி உத்தரவு வந்து விட்டது.

ஒரு வருடமே பணியாற்றினாலும் அந்தப் பள்ளியின் மாபெரும் ஆசிரியராகி விட்டாரல்லவா அவர்? எனவே, அவரைப் பிரிய எவருக்கும் மனமில்லை. பள்ளி ஆசிரியர்கள் எல்லோரும் சேர்ந்து பழனியில் ஆஸ்தான ஸ்தபதி பணிக்காக செல்லவிருக்கும் கணபதிக்குப் பிரிவு உபசார விழா ஒன்றுக்கு ஏற்பாடு செய்திருந்தனர்.

விழாவில் எல்லோரும் அவரைப் பாராட்டிப் பேசினாலும் உள்ளுக்குள் இத்தகைய அருமையான ஆசிரியரை இழக்கின்றோமே என்ற வருத்தம்தான். தலைமை ஆசிரியர் திரு. ஆராவமுத ஐயங்கார் பேசும் போது வருத்தம்தாளாமல், அன்பின் மிகுதியில் என்ன சொன்னார் தெரியுமா?

''கணபதி! நீ ஆசிரியத் தொழிலுக்குக் கிடைத்த மாபெரும் வரப்பிரசாதம். அதை விடுத்து வேறு பணிக்குச் செல்கிறேன் என்கிறாயே. அதனால் நான் சாபமிடுகிறேன். நீ ஆசிரியர் வேலைதான் பார்ப்பாய்.'' என்றாராம்.

அன்பின் மிகுதியால் சொல்லப்பட்ட வார்த்தைகள் எனினும் நான்கு வருடங்கள் கழித்து ஒரு கல்லூரியின் மிகப் பெரிய ஆசிரியனாக, அதாவது அக்கல்லூரிக்கே முதல்வராக ஆகப்

போகிறார் என்று தீர்க்கதரிசனத்துடன் சொல்லப்பட்ட ஆசிகளாகவே இன்றுவரை கருதுகிறார்.

நான்கு வருடங்கள் கழித்து, மாமல்லபுரம் சிற்பம் மற்றும் கட்டிடக் கலைக் கல்லூரியில் முதல்வராகப் பணியேற்றபின், அவர் பணியாற்றிய பள்ளியின் தலைமை ஆசிரியர் திரு. ஆராவமுத ஐயங்காருக்கு எழுதிய கடிதத்தில் ''அவர் இட்ட அன்பான சாபம் பலித்து விட்டதாக'' மறக்காமல் எழுதினார் கணபதி.

## பழனி தேவஸ்தான ஸ்தபதியாக....

பள்ளியின் ஆசிரியப் பணியிலிருந்து திரு.கணபதி ஸ்தபதி பழனி தண்டாயுதபாணி திருக்கோயிலின் ஆஸ்தான ஸ்தபதி பதவி ஏற்பதற்காகச் சென்றார்.

ஸ்தபதியின் கூற்றுப்படி பழனி மலை அடிவாரத்தில் இருக்கும் திருவாவினன்குடி ஆலயம்தான் அறுபடை வீடுகளில் ஒன்றாகும். மலை மேலை உள்ள கோயில் 'குன்றிருக்கும் இடமெல்லாம் குமரனிருக்கும் இடம்' என்ற கூற்றிற்கொப்ப குன்றுதோராடல் என்ற வரிசையில் வருவதாகும்.

திருவாவினன்குடி தேவஸ்தானத்தில் கணபதி ஸ்தபதி 1957ல் வேலை ஏற்றுக் கொண்ட போது அவரது பெரிய தந்தையும், இத்தொழிலில் அவரது குருவுமான திரு. ம. செல்லக்கண்ணு ஸ்தபதி அவர்களும் அதே தேவஸ்தானத்தில் பணியாற்றிக் கொண்டிருந்தார். அவருக்கு அருகாமையில் அவரது நேரடி மேற்பார்வையில் வேலை செய்வது என்பதால் *'சர்க்கரைப் பந்தலில் தேன்மாரி பொழிந்தாற் போல்'* இருந்தது கணபதி ஸ்தபதிக்கு!

சென்றதும் முதல் வேலையாக, தன் தந்தைக்குத் தான் இப்பதவி ஏற்றதைப் பற்றி கடிதம் மூலம் தெரிவித்தார். அதற்கு அவர் தந்தையிடமிருந்து வந்த பதில் என்ன தெரியுமா?

"சிற்பத் துறையில் நீ செய்த பிரவேசம்
அதற்கு மாபெரும் அதிர்ஷ்டமாகும்."

ஒரு தந்தையிடமிருந்து மிகப் பெரிய பாராட்டைப் பெற்ற மகன்களில் ஒருவராக ஆகி விட்ட கணபதி ஸ்தபதி அவர்கள்,

இன்றளவும் அவ்வாக்கியத்தை வேத வாக்கியத்தைக் காட்டிலும் முக்கியம் வாய்ந்ததாகக் கருதி அதை, பொன்னேட்டில் பொறித்ததைப் போன்று, பொறித்துத் தனது அலுவலகத்தில் இப்போதும் மாட்டியுள்ளார்.

பழனி தேவஸ்தானத்தில் பணியாற்றிக் கொண்டிருக்கும் போது, மலைஅடிவாரம் திருவாவினன்குடியில்தான் இவர் பணி என்றாலும், மலை மேலே உள்ள தண்டாயுதபாணி ஆலயத்தையும், மற்றும் பழனியைச் சுற்றியுள்ள சுமார் 36 சிறிய கோவில்களுக்கும் அவர் பொறுப்பு என்பதால் வேலைப்பளு மிகவும் அதிகமாக இருக்கும். ஆனால், திரு.கணபதி ஸ்தபதியைப் பொறுத்த வரை எவ்வளவு வேலை இருந்தாலும் சலித்துக் கொள்ளவே மாட்டார். தொழிலில் அவ்வளவு ஆர்வம், பக்தி, ஏன் அளவு கடந்த வெறி என்று கூடச் சொல்லலாம். ஒரு வருடம் பணி புரிந்தார் என்றால் முடிக்கப்பட்ட பணி இரு வருடங்களில் செய்து முடிக்க வேண்டிய பணியாக இருக்கும்.

தினமும் காலை, மாலை இரு வேளையும் 480 படிகள் ஏறி தண்டாயுதபாணி ஆலயத்தைப் பார்வையிட்டு விட்டு வருவார். சுற்றி உள்ள மற்ற கோவில்களுக்கும் அடிக்கடி சென்று வருவார். எங்கும் நடந்து செல்வதற்குத் தயங்கவே மாட்டார். சிறிய வயதில் ஏராளமாக நடந்ததால்தான், இப்போதும், 78 வயதிலும், கால்கள் மிகவும் வலுவாக உள்ளனவோ?

இப்போதும் நடப்பதற்கு சுணங்கவே மாட்டார். 1999ல் 133 அடி திருவள்ளுவர் சிலைப் பணி கன்னியாகுமரியில் நடைபெற்றுக் கொண்டிருந்த போது அதற்காக

அமைக்கப்பட்டிருந்த சாரத்தில் [சவுக்குக் கம்புகளால் படிகள் போலவே அழகாக சாரத்தை அமைத்திருந்தார் திரு.ஸ்தபதி அவர்கள்] எல்லோரையும் விட விரைவில் ஏறி விடுவார்.

திருவாவினன்குடி தேவஸ்தானத்தில் 5 நிலை இராஜகோபுரம் அமைக்கும் பணி திரு.கணபதி ஸ்தபதி அங்கே பணியாற்றிக் கொண்டிருந்த காலத்தில்தான் கட்டி முடிக்கப்பட்டது. இராஜகோபுரமும், கோபுரத்திலிருந்து உள்ளே செல்லும் பாதை முழுவதும் கருங்கற்களால் ஆன மண்டபம் கட்டப்பட்டது. சுற்றிலும் உள்ள 36 சிறிய கோவில்களுக்கும் விமானம் அமைக்கப்பட்டது.

இத்தனை பணிகளை அவர் செய்தாலும் அவருக்கு அளிக்கப் பட்ட ஊதியம் மிகவும் குறைவு. மாதம் ரூபாய் 100 மட்டுமே. அதனாலேயே, ஸ்தபதி விரும்பினால் வெளி வேலைகளும் எடுத்துச் செய்யலாம் என்று அனுமதி அளிக்கப்பட்டிருந்தது.

திருவாவினன்குடி கோவில் பிரகாரத்தில் சனீஸ்வரனுக்கு ஒரு சந்நிதி அமைக்கப்பட்டிருந்தது. ஒரு முறை கோவிலைப் பார்வையிடுவதற்காக முன்னறிவிப்பின்றி அறநிலையத்துறை ஆணையர் வந்து விட்டார். அவர், ‘அந்த சனீஸ்வரன் சந்நிதியை எடுத்துவிட வேண்டும்’ என்று கூறி, அதற்காகப் பல வருடங்களுக்கு முன்பே அளிக்கப்பட்டிருந்த உத்தரவையும் காட்டினார். உடனடியாக அச்சந்நிதியை எடுப்பதற்கு வேண்டிய ஏற்பாடுகளைச் செய்ய வேண்டும் என்பதற்காக ‘‘ஸ்தபதியைக் கூப்பிடுங்கள்’’ என்று உத்தரவிட்டார்.

அந்த சமயத்தில் திரு.செல்லக் கண்ணு ஸ்தபதி அவர்கள் ஊரில் இல்லாத காரணத்தால் கணபதி ஸ்தபதி அவர்களையே அழைத்து வந்தனர் கோவில் நிர்வாகிகள். அவரிடம் ஆணையர் அவர்கள், சந்நிதியை உடனடியாக அகற்றுவதற்கு ஏற்பாடுகள் செய்யும்படி. கேட்டுக் கொண்டார்.

சற்று நேரத் தயக்கத்திற்குப் பின்னர் கணபதி ஸ்தபதி அவர்கள் ஆணையரை நோக்கி, ''ஐயா! நான் வயதில் மிகவும் இளையவன்தான். ஆனால் சிற்ப சாஸ்திரங்கள் பற்றியும், ஆகம சாஸ்திரங்கள் பற்றியும், கோவில் நிர்மாணம் பற்றியும் நிரம்பப் படித்த என் தந்தையாரிடமிருந்தும், இத்துறையில் பழுத்த அனுபவம் வாய்ந்த என் பெரிய தந்தையாரிடமிருந்தும் அநேக விஷயங்களைக் கற்றுத் தேர்ந்தவன். அதனால், நான் சொல்வதை நீங்கள் சற்று கேட்க வேண்டும்.'' என்ற பீடிகையுடன் தொடங்கினார்.

''சொல்லுங்கள் ஸ்தபதி'' என்று ஆணையர் ஊக்கப் படுத்தினார்.

''இந்த சனீஸ்வரன் சந்நிதி முருகனுக்குப் பரிவார தேவதை. இதனை அப்புறப்படுத்துதல் கூடாது. இங்கே ஒரு பிரகாரம் கட்டப்படாததால் இச்சந்நிதி தனியாகத் தெரிகிறது. இதை அப்புறப்படுத்தினால், கர்த்தாவாகிய உங்களுக்குத்தான் ஆபத்து ஏற்படும். அதனால் இங்கேயே இருக்கட்டும். ஆலயத்திற்கு மற்றொரு பிரகாரம் அமைத்து விட்டால் தனியாகத் தெரியாது'' என்று கூறி அதற்கான ஆதாரங்களாக குமாரதந்த்ரம் என்ற நூலிலிருந்து மேற்கோள்களைக் காட்டினார்.

அவரது ஆதாரப்பூர்வமான பேச்சைக் கேட்டு ஆணையர் அவர்கள் மிகவும் வியந்தார். ''ஸ்தபதி! ஒரு தவறு நடைபெறாமல் தடுத்து விட்டீர்கள். மறைமுகமாக, எனக்கு நேரவிருந்த ஆபத்திலிருந்தும் காப்பாற்றி விட்டீர்கள். மிகவும் நன்றி.'' என்று மனமுருகிக் கூறினார்.

அதன்படியே அந்த சனீஸ்வரன் சந்நிதி இன்றும் அக்கோவிலில் அருள் பாலித்துக் கொண்டிருக்கிறது.

மனமகிழ்ந்த ஆணையர் ஸ்தபதியிடம் அவருக்கு ஏதாவது செய்ய வேண்டுமென்று நினைத்து, என்ன வேண்டுமென்று கேட்க, ஸ்தபதியும் சமயோசிதமாக ''ஐயா! எனது பெயர் இன்னும் அறநிலையத்துறை வெளியிட்ட ஸ்தபதிகள் பட்டியலில் சேர்க்கப்படவில்லை. இதனால் எனது வேலையை இழக்க நேரிடும் அபாயமும் உள்ளது. அருள் கூர்ந்து எனது பெயரை ஸ்தபதிகள் பட்டியலில் உடனடியாக சேர்த்திட ஆவன செய்ய வேண்டும்.'' என்று கேட்டுக் கொண்டார்.

ஆணையர் அதற்கான உத்தரவை அங்கேயே, உடனடியாகப் பிறப்பித்தார். ஸ்தபதி மிகவும் மகிழ்ச்சியடைந்தார். சனீஸ்வரன் சந்நிதியை அப்புறப்படுத்தக் கூடாது என்று ஸ்தபதி அவர்கள் கூறியது ஆகம சாஸ்திரத்தில் உள்ளதுதான், அவராக தன்னிச்சையாக அதைச் சொல்லவில்லை என்பதற்கு மற்றுமொரு உதாரணம் பின்வருமாறு:

மலை மேலே உள்ள தண்டாயுதபாணி திருக்கோயில் பிரகாரங்கள் முழுவதும் சிறிய சிறிய கோவில்களாகவும், விக்கிரகங்கள் பிரதிஷ்டை செய்யப்பட்டும் இருந்தன. இதனால்,

பிரகாரத்தை வலம் வரும் பக்தர்களுக்கு இட நெருக்கடி போன்ற அசௌகர்யங்கள் இருந்தன. அவற்றையெல்லாம் எடுத்து விட்டால் பக்தர்களுக்கு தாராளமாக வலம் வருவதற்கு ஏதுவாக இடம் இருக்குமே என்று அறநிலையத் துறை நிர்வாக அதிகாரி திரு.ஆதிமூலம் என்பவர் ஸ்தபதியிடம் கேட்டார்.

ஸ்தபதி அவர்கள் உடனடியாக, சற்றும் தாமதிக்காமல் ''கண்டிப்பாக எடுத்து விடலாம். இந்த விக்கிரகங்கள் பக்தர்கள் தங்களது நேர்த்திக் கடனைச் செலுத்துவதற்காக அமைக்கப் பட்டவையே ஒழிய ஆகமப்படி இங்கே அமைக்கப்படவில்லை. தாராளமாக எடுத்து விடலாம், தடையேதும் இல்லை.'' என்று கூறினார்.

அப்பணி ஸ்தபதியிடமே ஒப்படைக்கப்பட அவர் ஒரு கட்டிடவேலை செய்யும் நிறுவனத்தை அணுகி ஒரே இரவில் அவர்களால் அத்தனையும் அகற்றப்பட்டன! பக்தர்களுக்கும் வலம் வருவதற்கும், புழங்குவதற்கும் தாராளமாக இடம் கிடைத்தது. [தற்போது தமிழ்நாட்டில், குறிப்பாக சென்னையில் ஆங்காங்கே நடைபாதையில் போக்குவரத்திற்கு இடைஞ்சலாக, புற்றீசல்கள் போல் கிளம்பி வரும் நடைபாதைக் கோவில்களை அகற்றுவதற்கு யாராவது, திரு. கணபதி ஸ்தபதி அவர்களை அணுகினால் நன்றாக இருக்குமே என்று எண்ணத் தோன்றுகிறது அல்லவா?]

மேற்சொன்ன இத்துணைப் பணிகளும் அவர் அங்கு பணியாற்றிய நான்கு வருடங்களில் முடிக்கப்பட்டன. அங்கிருந்து அவர் மகாபலிபுரம் சிற்பக் கல்லூரிக்கு முதல்வராகப் பணியேற்கச் சென்றார். செல்வதற்கு முன்னர் அவர் பழனி

தண்டாயுதபாணி நவபாஷாண சிலையைப் பற்றி ஒரு குறிப்பு எழுதி தேவஸ்தானத்திற்கு அளித்து விட்டு வந்தார்.

ஸ்தபதி எழுதிய அக்குறிப்பின்படி "தண்டாயுதபாணி விக்ரஹம் நவபாஷாணம் என்ற பொருளால் போகர் சித்தரால் உருவாக்கப்பட்டது. நவ என்றால் புதியது என்று பொருள். பாஷாணம் என்றால் கல் என்று பொருள். கருங்கல்லைத் தவிர்த்து கடுசர்க்கரை என்ற புதிய பொருளால் உருவாக்கப்பட்டது. சுக்காங்கல் எனப்படும் கல்லைப் பொடித்து, அதனுடன் எட்டு விதமான மூலிகைகளைக் கலந்து கிடைக்கும் பொருளான கடுசர்க்கரை என்ற பொருளைக் கொண்டு தண்டாயுதபாணி சிலை உருவாக்கப்பட்டது. அச்சிலையைத் தொடர்ந்து அபிஷேகம் செய்து வந்தால் சிலை பின்னமாகி விடும். எனவே, அதற்கு நேரிடையாக அபிஷேகம் செய்யப்படுவதைத் தடுக்க வேண்டும். எனவே, சிறியதாக மற்றொரு சிலையைச் செய்து, அதனருகில் வைத்து, அதற்கு அபிஷேகம் செய்வித்து, அந்த அபிஷேக நீரை சிறிதளவு மூலவருக்கு சமர்ப்பித்தால் போதுமானது" என்று சுமார் 45 வருடங்களுக்கு முன் அவர் எழுதியிருந்தார்.

அது அப்போதே கடைபிடிக்கப் பட்டிருந்தால் தற்போது பழனி தண்டாயுதபாணி சிலையைப் பற்றி எழுந்து வரும் பற்பல சர்ச்சைகள் தோன்றியிருக்காதோ?

இவ்வாறாக திருக்கோவில் பணிகளில் முதன் முதலில் செய்யப்பட்ட திருவாவினன்குடி முருகனைத்தான் தனது இஷ்ட தெய்வமாக திரு.கணபதி ஸ்தபதி அவர்கள் கருதுகிறார். வெகு

சமீபத்தில் திருவாவினன்குடி கோவிலுக்குச் சென்று தற்போது அடைந்துள்ள மேன்மைக்கும், புகழுக்கும் முருகனே காரணம் என்று நன்றி கூறி விட்டு வந்ததாக உணர்ச்சிப் பெருக்குடன் கூறினார்.

இதுவரையில், கணபதி ஸ்தபதி அவர்களைப் பள்ளி மற்றும் கல்லூரியில் படித்துப் பட்டம் பெற்றதாகத்தானே படித்து வந்தோம், 'சிற்பக்கலை பற்றி எப்போது அவர் படித்தார்? ஒரு புகழ் பெற்ற ஆலயத்திற்கே ஸ்தபதி ஆகும் அளவிற்கு அவருக்கு அத்துறை பற்றிய ஞானம் எங்கிருந்து வந்தது? அதற்குப் பிறகும் இன்று வரை எண்ணற்ற கோவில்களையும், சிற்பங்களையும், மாளிகைகளையும் அவர் உலகெங்கும் கட்டியுள்ளாரே எப்படிக் கட்டினார்? வாஸ்து சாஸ்திரம், மற்றும் சிற்ப சாஸ்திரம் பற்றி விளக்கமாக, ஆணித்தரமாகப் பேசுகிறாரே, இந்த ஞானத்தை எங்கிருந்து பெற்றார்?' போன்ற கேள்விகள் எழக்கூடும். வாசகர்கள் சார்பாக இக்கேள்வியை நான் அவரிடம் கேட்டேன். அதற்கு அவர் தன் கைப்பட எழுதித் தந்ததை அப்படியே அளிக்கிறேன்.

நான் படித்தறிந்த எல்லைக்குள் *(within my limited knowledge)* இருந்து கொண்டு இஃதென்ன விஞ்ஞானம் என்று சொல்ல வேண்டுமானால், இஃதொரு *super science* என்றும் *end of knowledge* என்றும் சொல்லிடலாம். இப்படிச் சொல்ல எனக்கு என்ன தகுதியுளது? இதனை முதலில் சமர்ப்பித்திட கடமைப்பட்டவனாகிறேன். நான் செல்வாக்கு மிகுந்த பாரம்பரிய ஸ்தபதியர் குடும்பத்தில் உதித்தவன். எங்கள் குடும்பமானது 1000 ஆண்டு தொடர்

வரலாறுகள் கண்டதாகும். படித்தது பின்வருமாறு: நான் *B.A.*,யில் *Pure mathematics*ம் [1947-49] *Intermediate*ல் *maths, physics and chemistry*யும் (1945-47) ஆழ்ந்து படித்ததோடு சம்ஸ்கிருதமும் வேது வகுப்பிலிருந்து *B.A* வரை படித்திருக்கிறேன். (வாஸ்து ஆகம சாஸ்திரங்கள் அத்தனையும் அப்போது சம்ஸ்கிருதத்திலேயே இருந்தன. தமிழில் இருந்தவை கடல் கோளினால் அழிந்து போயிற்று.) இந்த சம்ஸ்கிருதம் ஆனது இலக்கிய சம்ஸ்கிருதமே *(Literary Sanskrit)* ஆகும். இதற்கெல்லாம் மேலாக *Technical Sanskrit* ஆகிய வாஸ்து விஞ்ஞானப் படிப்பும் பயிற்சியும் எனது தந்தையிடம் 5 வயதிலிருந்தே கற்றறிந்திருக்கிறேன். இந்தப் பாடம் விடியற்காலை 5 மணிக்குத் தொடங்கும்; தினந்தோறும் 2 மணி நேரம் இந்தப் பாடம் நீடிக்கும். பல ஆண்டுகள் இப்புடிச் சென்றன. இப்படித் தான் இதனை வீட்டில் படித்திட்டேன். இதுவே மரபு வழிக்கல்வி எனப்பட்டது. *(Tradtional type of learning).*

இதோடு, எங்கள் வீட்டில் தொழிற் பட்டறையும் உண்டு. இங்கே தொடக்க நிலைப்பயிற்சியும் பெறலானேன். அது என் காலத்தில், இப்போதும் நீடித்துப் பெரிய கலைத்தொழில் நிறுவனமாக ஓங்கி விட்டது. அத்துடன் தக்க வயது வந்து, கலைப் பணியாற்றும் நிலையில் வாஸ்து விஞ்ஞானத்தையும் அதில் அடங்கிய தொழில் நுட்பத்தையும் தொடர் ஆய்வு செய்து எனது அன்றாடத் தொழிலில் புகுத்தி நல்ல பல சாதனைகளும் வெற்றிகளும் கண்டிருக்கிறேன். கட்டிடக் கலை பயிற்சிக்கான எனது *field experience*க்கு எனக்கு உதவிய குரு என் தந்தையின் அண்ணார் ஆவார். இது

1957 இல் பழனி தேவஸ்தான - திருவாவினன்குடி முருகன் கோவிலில் தொடங்கியது. அவருக்குப் பிறகு நானே எனக்கு குருவாகி விட்டேன். எனது ஆத்மாவே எனக்கு குருவாகி விட்டது என்று சொல்லுகிறேன். இந்தக் காலத்திலே ஆத்ம சிந்தனைகள், சோதனைகள், சாதனைகள் மிகுந்தன. இதன் காரணமாக சிறியன, பெரியன, பழையன, மற்றும் புதியன என்னுடைய தொழிலில் சிறிய பெரிய தோற்றங்களில் - அமைதிகளில் – forms – உருவங்களாக மிளிர்வதாயின. அத்தகைய படைப்புக்கள் நல்ல வரவேற்பைப் பெற்றன. ஓரளவு நல்ல பெயர்களையும் பட்டங்களையும் பெற்றிட்டேன். அடுத்து எனது பணிகள் உலகளாவிப் பரவின. எனது படைப்புக்களை அதனால் வந்த சிறப்புக்களை எல்லாம் தொய்வுற்றுக் கிடந்த எனது சிற்பக்கலை மரபுக்கே - அதன் பெருமைக்கே - ஆக்கத்திற்கே - உயர்நலத்திற்கே - உரித்தாக்கினேன். இப்போதும் பல திருப்பணிகளைச் செய்திடும் பேறும் பெற்று வருகிறேன்.

என்னை ஆதரித்த பெரியோர் பட்டியல் மிக நீளமானது. இந்தத் தொழிலுக்கு இணையாக பிறிதொரு தொழில் இந்த நிலவுலகில் இல்லை என்பது எனது முடிவு. காரணம், கண்களுக்குப் புலப்படாத ஓர் அருவப் பொருளுக்கு உருவம் கண்ட தொழில் அன்றோ! காணாத மூலப் பொருளைக் கண் முன் நிறுத்திக் காட்டிய ஆபூர்வ விஞ்ஞான மரபு என்றால் மிகையல்ல.

## ஸ்ரீ இரெட்டியப்பட்டி சுவாமி அவர்களுடன்...

இரெட்டியப்பட்டி என்று அழைக்கப்படும் ஊர் மதுரை மாவட்ட அருப்புக் கோட்டைக்கு அருகில் உள்ளது. அங்கு வாழ்ந்த ஒரு மகான்தான் இரெட்டியப்பட்டி சுவாமிகள். அனைவரையும் அன்பு வழி நடத்திச் சென்ற இவர் இரெட்டியப்பட்டியில் மிகவும் பிரபலமானவராக இருந்தார். அவர் வாழும் காலத்தில் கடவுளைக் கண்களால் கண்டவர். விநாயகப் பெருமானாகக் கடவுளைக் காணும் பேறு பெற்றவர்.

அவர் மகா சமாதியடைந்ததும் அவரது சீடர்கள் அவருக்கு ஒரு கோவில் கட்ட விரும்பினர். எனவே, கோயில் கட்டும் துறையில் சிறப்பாகப் பணியாற்றிக் கொண்டிருந்த திரு.வைத்தியநாத ஸ்தபதியைச் சந்திப்பதற்காக மகாபலி புரத்திலுள்ள அவரது இல்லத்திற்கு வந்தனர்.

அப்போது திரு.வைத்தியநாத ஸ்தபதி பக்கவாத நோய் வந்து படுக்கையில் விழுந்து விட்ட நேரம். எனவே அவரது துணைவியார், ''தன் கணவரால் எந்த விதமான வேலையும் செய்ய முடியாது'' என்று கூறினார். சீடர்கள் ''அப்படியானால், அவரது மகன் கணபதி ஸ்தபதி எங்கே?'' என்று வினவியதும், அவர் பழனி தேவஸ்தானத்தில் பணியாற்றிக் கொண்டிருப்பதாகவும் அவரை அணுகினால் ஆவன செய்வார் என்றும் கூறினார்.

எனவே, சீடர்கள் பழனி வந்தடைந்து திரு.கணபதி ஸ்தபதியைச் சந்தித்தனர். கணபதி ஸ்தபதி அவரது பெரிய தந்தையார் திரு.செல்லக் கண்ணு ஸ்தபதி வயதிலும், அனுபவத்திலும் மூத்தவராக இருப்பதினால் அவரையே அணுகும்படி கூறினார். வந்திருந்த சீடர்கள், அவர்தம் வழக்கப்படி

சுவாமிகளிடம் கேட்டு வருகிறோம் என்று சொல்லி சுவாமிகளின் சமாதியில் உத்தரவு கேட்டதில் சுவாமிகள் திரு.கணபதி ஸ்தபதி அவர்களையே கட்டித்தர அழைத்து வருமாறு உத்தரவு வந்ததாகக் கூறினர்.

எனவே, அதன்படி கணபதி ஸ்தபதி அவர்களே கட்டித் தருவதாக ஒப்புக் கொண்டு, தன் பெரிய தந்தையார் திரு.செல்லக் கண்ணு ஸ்தபதி அவர்களின் ஆசிகளுடனும் மற்றும் அவரது தொழில் நுட்ப ஆலோசனையின்படியும் அக்கோவிலுக்கான மாதிரி வரை படங்களைத் தயாரித்தார். மகாபலிபுரத்திலுள்ள தன் சகோதரர் இராமச்சந்திர ஸ்தபதியையும் வரவழைத்து இருவருமாக இரெட்டியப்பட்டி சென்றனர். இருவரும் அந்த ஊரில் காலெடுத்து வைத்ததும் மேளதாளத்துடன் வரவேற்று அழைத்துச் சென்றனர்.

ஊருக்குச் சென்று சுவாமிகளின் சமாதியைத் தரிசிக்கச் சென்றனர் இருவரும். திரு.கணபதி ஸ்தபதி அவர்களின் உள்ளத்தில் இனம் புரியாத மகிழ்ச்சியும், நிம்மதியும் அதிர்வலைகளாக (vibrations) ஏற்பட்டது. கோவிலைப் பார்வையிட்டதும், அதனைக் கருங்கல்லால் அமைக்கத் தேவையான ஆரம்பகட்ட வேலைகளைத் தொடங்கினார்.

கோவிலைக் கருங் கல்லால் கட்டித் தருவதாக ஒப்புக் கொண்டு திரு.கணபதி ஸ்தபதியும் அவருடைய சகோதரரும் ஊருக்குக் கிளம்பினர். அப்போது கோவில் திருப் பணிக் குழு உறுப்பினர்கள் இருவருக்கும் சன்மானமாக ஒரு தொகையைக் கவரில் வைத்து அளித்தனர். திரு. கணபதி ஸ்தபதி அவர்கள்

கோவில் கட்டுவதற்கு என்று பெற்ற முதல் சன்மானத் தொகை! [பின்னாளில் உலகம் முழுவதும் நம் கலாச்சாரத்தைப் பறைசாற்றுவதற்கு திரு.கணபதி ஸ்தபதி அவர்கள் எண்ணிலடங்கா கோவில்களைக் கட்டப் போகிறார் என்பதற்கு அச்சாரமாகக் கொடுக்கப்பட்டதுதான் அந்தத் தொகையோ?]

அதை வாங்கிக் கொண்டு பிரித்துக் கூடப் பார்க்காமல் இருவரும் மதுரை பேருந்து நிலையம் வந்தடைந்தனர். பேருந்து நிலையத்தில் பிரித்துப் பார்த்த போது, அதில் ரூபாய் நூற்றி ஒன்று இருந்தது கண்டு மகிழ்ந்தனர். காரணம், அக்காலத்தில் அது மிகப் பெரிய தொகை! பிறகு கணபதி ஸ்தபதி பழனிக்கும் அவரது சகோதரர் மகாபலிபுரத்திற்கும் வந்து சேர்ந்தனர்.

அன்று இரவு தூக்கத்தில் ஸ்தபதிக்கு ஒரு கனவு. அக்கனவில், ‘சுவாமிகளின் சமாதியிலிருந்து ஒரு சிறிய குழந்தை வருகிறது. அக்குழந்தை ஓயாமல் வீறிட்டு அழுகிறது. எல்லோருடைய மடியிலும் அக்குழந்தையை வைத்து அழுகையை நிறுத்த முயற்சிக்கின்றனர். ஆனால், அக்குழந்தை மேலும் மேலும் வீறிட்டு அழுகிறது. கோவில் பூசாரி அங்கு அமர்ந்திருக்கும் கணபதி ஸ்தபதியிடம் அக் குழந்தையைத் தருகிறார். அவரும் அக்குழந்தையை வாங்கியவுடன் அவரது நெஞ்சில் சாய்ந்து கொண்டு அழுகையை நிறுத்தி விட்டு மறைந்து விடுகிறது.’ இப்படியாக ஒரு கனவு ஸ்தபதிக்கு. அவரது அகத்தில் குடி கொண்டதொரு நிகழ்ச்சியாக அதை உணர்ந்தார் அவர். இதன் மூலம் அக்கோவிலை அவர்தான் கட்ட வேண்டும் என்று சுவாமிகளே உத்தரவிட்டதாக எண்ணினார்.

கனவில் வந்த அக்குழந்தையை இரெட்டியப்பட்டி சுவாமிகளாகவே கருதினார் திரு.கணபதி ஸ்தபதி அவர்கள். ''அன்று என் நெஞ்சில் குடியேறிய இரெட்டியப்பட்டி சுவாமிகள் இன்னும் என் நெஞ்சை விட்டு இறங்கவே இல்லை'' என்று ஸ்தபதி அவர்கள் அடிக்கடி கூறுவார்கள்.

கோவில் கட்டும் பணி ஆரம்பமாகியது. ஏற்கெனவே இருக்கின்ற சமாதியை ஒன்றும் செய்யாமல் அதைச் சுற்றிக் கோவில் கட்டுவதென்று தீர்மானிக்கப்பட்டது. சமாதியும் அதன் மேல் வீற்றிருக்கிற சுவாமிகளின் சிலையையும் அப்படியே மையமாக வைத்துக்கொண்டு பணிகள் தொடங்கப்பட்டன. அஸ்திவாரம் கருங்கற்களால் கட்டப்பட்டது. இப்போது சென்னையில் பிரபலமான மின்பொருள் விற்பனை செய்து வரும்



ஸ்ரீ இரெட்டியப்பட்டி ஸ்வாமிகள்

ரத்னா ஃபேன்ஸ் (Ratna Fans) அதிபர் திரு.கிருஷ்ண மூர்த்தி அவர்களின் தந்தையார்தான் அப்போது இப்பணியைத் தன் சொந்தப் பணத்தைக் கொண்டு முன்னின்று செய்தவர்.

அஸ்திவாரம் கட்டி முடித்ததும் முழுவதும் கருங்கற்களால் கட்டி முடிக்கத் தேவையான பணம் புரட்டுவது சிரமமாக இருக்கும் என்று தோன்றியதால், மேலே எழுப்பப்படும் கோவில் தற்சமயம் செங்கல்லால் கட்டி விடலாம் என்று முடிவெடுக்கப்பட்டு இரெட்டியப்பட்டி சுவாமிகளின் ஆசிகளினால் அவ்வாறே கட்டப்பட்டு முடிக்கப்பட்டது. இன்றுகூட புதிதாகக் கட்டிடப்பணி அல்லது கோவில்பணி எது தொடங்குவதாக இருந்தாலும் இரெட்டியப்பட்டி சுவாமிகளை வேண்டிக் கொண்டுதான் ஆரம்பிப்பார் திரு.ஸ்தபதி அவர்கள்.

திரு.கணபதி ஸ்தபதி அவர்கள் பழனி தேவஸ்தான ஸ்தபதியாக இருந்த போது நடந்த மற்றொரு சம்பவத்தை நெக்குருக அடிக்கடி கூறுவார்.

மதுரை அருள்மிகு மீனாட்சி அம்மன் திருக்கோவிலில் பக்தர்கள் வருவது வெகுவாகக் குறைந்து இருந்தது. எனவே, அப்போது முதலமைச்சராய் இருந்த திரு.பக்தவச்சலம் அவர்கள் ‘கோவில் சாந்நித்தியம் குறைந்து விட்டதால், திருப்பணிகள் மேற்கொண்டு கும்பாபிஷேகம் செய்தால் பக்தர்கள் வருவது அதிகரிக்குமே’ என்று எண்ணி அதற்கான ஏற்பாடுகளைச் செய்யத் தொடங்கினார்.

மதுரை மீனாட்சி அம்மன் திருக்கோவில் இந்து அறநிலையத் துறையின் கீழ் வருவதால், திரு. P.T.இராஜன்

அவர்களைக் கோவில் திருப்பணிக் கமிட்டிக்குத் தலைவராக நியமித்தார். திருப்பணிகள் முடிந்து, கும்பாபிஷேகம் நடைபெற்றது. பக்தர்கள் கூட்டம் கணிசமாக அதிகரித்தது. கிழக்குப் பக்கம் ஒன்று, தெற்குப் பக்கம் ஒன்று என்று மொத்தம் இரண்டு வாசல்கள் மட்டுமே கோவிலின் திருமதிலுக்கு உண்டு. இதனால் மக்கள் நெரிசல் அதிகரிக்க, வழிப்பறி போன்ற சமூக் குற்றங்களும் அடிக்கடி நடைபெறத் தொடங்கின.

அதனால் திரு. P.T. இராஜன் அவர்கள், 'வடக்குப் பக்கத்திலும் இன்னொரு வாசல் திறந்தால் மக்களுக்கு சௌகரியமாக இருக்குமே' என்று எண்ணினார். ஆனால் அவரது இந்த யோசனைக்கு ஆகம பண்டிதர்கள் மத்தியிலும், கோவில் அர்ச்சகர்கள் மத்தியிலும், சிற்பியர் மத்தியிலும் பலத்த எதிர்ப்பு. ஒவ்வொருவரும் ஒவ்வொரு கருத்தைக் கூறினர்.

இதனால் கோபமடைந்த திரு. P.T. இராஜன் அவர்கள் ''இந்த சர்ச்சையை சாஸ்திரங்களின் ஆதாரத்துடன் விளக்கிக் கூறித் தீர்க்கும் ஸ்தபதி எவருமே இல்லையா?'' என்று வினவ, அனைவரும் ஒரு முகமாக திரு.கணபதி ஸ்தபதி அவர்களையே கூறினர். உடனடியாக அவரை மதுரைக்கு வரவழைக்கும்படி திரு. P.T. இராஜன் கூறியதும், மறுநாளே ஸ்தபதி மதுரை வந்து சேர்ந்தார்.

தாமதம் ஏதுமின்றி, உடனடியாக அவரை திரு. P.T. இராஜன் அவர்களைக் காண்பதற்கு அழைத்துச் சென்றனர். அவர் ஸ்தபதியிடம், ''ஸ்தபதி! நீங்கள் சொல்லுங்கள், கோவிலுக்கு வடக்கே வாசல் வைக்கலாமா கூடாதா?'' என்று கேட்டார்.

''வைக்கலாம் ஐயா!'' என்றார் ஸ்தபதி.

''அப்படியா? மிகவும் மகிழ்ச்சி.'' என்று கூறிய அவர், அர்ச்சகர்கள் 46 பேர் அடங்கிய கூட்டத்திற்கு உடனடியாக ஏற்பாடு செய்தார்.

கூட்டத்தில் அவர், ''இவர் திரு.கணபதி ஸ்தபதி. அரசாங்க ஸ்தபதி. இவர் வடக்கே வாசல் வைக்கலாம் என்று கூறுகிறார். உங்களில் எவர் வேண்டுமானாலும் இவரிடம் சந்தேக நிவர்த்தி செய்து கொள்ளலாம்.'' என்று கூறினார்.

ஸ்தபதிக்கு உள்ளூர நடுக்கம். அவர் வயதில் மிகவும் இளையவர். சுற்றி உள்ளவர்களோ வயதிலும், அனுபவத்திலும் மூத்தவர்கள். ஆனால், அவருக்கு அவரது அறிவின் மேல் இருந்த நம்பிக்கையாலும், 'கடவுள் தன்னை வழிநடத்துவார்' என்ற தைரியத்திலும் மௌனமாக நின்றார்.

அர்ச்சகர்களில் தலைமை அர்ச்சகரான திரு. சுந்தரேச பட்டர் என்பவர் ஸ்தபதியை நோக்கி, ''வடக்கே வாசல் வைக்கலாம் என்று எப்படி சொல்கிறீர்கள்?'' என்று வினவினார்.

''*சதுர் திக்கு சதுர் துவாரம்: உபத்துவாரம் எதேஷ்டகம்*' என்று ஸ்லோகமே உள்ளது. நான்கு திசைகளிலும் நான்கு துவாரங்களும், உபவாசல்கள் நம் இஷ்டம் போல் எத்தனை வேண்டுமானாலும் வைத்துக் கொள்ளலாம் என்பது அதன் பொருள்.'' என்று ஸ்தபதி கூறினார்.

''நீங்கள் கூறும் விளக்கம் ஈஸ்வரன் கோவிலுக்குப் பொருந்தும், அம்மன் கோவிலுக்குப் பொருந்துமா?'' என்று அவர் மறுபடி கேட்க, ஸ்தபதி, ''தெய்வத்திற்குத்தான் கோவிலே தவிர,

ஆண் கடவுளுக்கு ஒரு கோவில் பெண்கடவுளுக்கு ஒரு கோவில் என்ற பாகு பாடெல்லாம் கிடையாது.'' என்று கூறினார்.

வேறு யாரும் கேள்விகள் எதுவும் கேட்காதலால், திரு. P.T. இராஜன் அவர்கள், ''ஸ்தபதி சொல்வதை அனைவரும் ஒப்புக் கொள்கிறீர்களா?'' என்று வினவினார்.

அனைவரும் ஒப்புக் கொண்டதாக அறிவித்ததும், ''ஸ்தபதி! இதை எழுத்து மூலம் எழுதிக் கொடுங்கள். அனைவரும் இதில் கையொப்பம் இட்டுக் கொடுங்கள்.'' என்று அவரது வழக்கறிஞர் பணிக்கே உரிய பாணியில் ஆணித்தரமாகக் கூறினார்.

உடனடியாக அவ்வாறே செய்யப்பட்டது. கூட்டம் முடிந்த பின்னர், திரு. P.T. இராஜன் அவர்களுடன் கோவிலைச் சுற்றிப் பார்த்த ஸ்தபதி அவர்கள், வடக்கே எந்த இடத்தில் வாசல் வைக்கலாம் என்று குறித்துக் கொடுத்தார்.

இதில் வியப்பு என்னவெனில், ஸ்தபதி காட்டிய இடத்தில் உள்ள மதில் சுவரில் ஒரு வாசல் வைக்கக் கூடிய அமைப்பில் உத்தரமும், முன்புறமுள்ள பிராகாரத் தூண்களில் சுவரில் செதுக்கப்பட்டிருந்த சித்திரம் தெற்கு வாசலில் உள்ள சித்திரத்திற்கு ஒத்துப் போவதாகவும் இருந்தது.

வாசல் வைக்க வேண்டிய இடம் குறிக்கப்பட்டது. ஸ்தபதி விடைபெற்றுக் கொண்டு கிளம்பினார். அவருக்கு உரிய சன்மானம் வழங்கப்பட்டது.

மதுரை இரயில் நிலையம் வந்து, இரயிலில் ஏறி அமர்ந்தார் திரு.கணபதி ஸ்தபதி அவர்கள். அப்போதுதான் அதே இரயிலில்,

மேல் படுக்கையில் அவரது குருவும், பெரிய தந்தையுமான திரு.செல்லக்கண்ணு ஸ்தபதி அவர்களும் இருப்பதைப் பார்த்தார். [திரு.செல்லக் கண்ணு ஸ்தபதி அவர்களும் வடக்கே வாசல் இருக்கக் கூடாது என்று கூறியவர் என்பது குறிப்பிடத்தக்கது.]

தனது கருத்தை தம்பி மகன் மறுத்துப் பேசியதில் அவருக்கு சற்று மன வருத்தம். ''வடக்கே வாசல் வைக்கலாம் என்று கூறி விட்டாயே? இதனால் என்ன விளைவுகள் வரும் தெரியுமா?'' என்று கோபமாக அவரிடம் வினவினார்.

கணபதி ஸ்தபதிக்கோ ஒன்றை ஆதாரப் பூர்வமாகத் தெரிந்து கொண்டால் எவரையும் மறுத்துப் பேசவோ, எதிர்க்கவோ தயங்க மாட்டார். எனவே, ''கெட்ட விளைவுகள் எதுவும் நிகழாது. நல்ல விளைவுகள்தான் ஏற்படும்.'' என்று கூறி விட்டுப் பேசாமல் இருந்து விட்டார்.

தனது இருப்பிடத்திற்குத் திரும்பியும் கூட ''தன் பெரிய தந்தையாரை எப்படி சமாதானம் செய்வது? வடக்குப் பக்கத்தில் வாசல் வைக்கலாம் என்று தான் கூறியதில் தவறேதும் செய்து விட்டோமோ'' என்று மனக் கலக்கம் அடைந்தார். தன் குருநாதனாகிய இரெட்டயப்பட்டி சுவாமிகளை வேண்டிக் கொண்டு படுத்தார். உறங்கிப் போனார்.

உறக்கத்தில் ஒரு கனவு. இரண்டு கைகள், வளையல் எதுவும் அணியாமல் இருக்கின்ற ஆண் கைகள்! மானசாரம் என்ற புத்தகத்தை இரண்டாகப் பிரித்துக் காட்டியபடி ஸ்தபதியிடம், 'நீ கூறியதில் தவறேதும் இல்லை. அதற்கு ஆதாரமாக இந்த நூலில் உள்ள ஸ்லோகத்தைப் படி' என்று கூறி மறைந்து விட்டது.

திடுக்குற்றுத் தூக்கத்தில் விழித்த திரு.கணபதி ஸ்தபதி உடனே, இரவு ஒரு மணிக்கு, மானசாரம் என்ற புத்தகத்தை அவரது அலமாரியில் இருந்து எடுத்தார். கனவில் கண்டபடி, அந்தக் கைகளில் உள்ள புத்தகத்தைப் பிரித்துப் பிடித்திருந்த போது தோராயமாக எவ்வளவு பிரிக்கப்பட்டு இருந்ததோ அதே அளவு விட்டுப் புத்தகத்தைப் பிரித்தார்.

என்ன ஆச்சரியம்! அவருக்குத் தேவையான விளக்கங்களுடன் கூடிய ஸ்லோகம் அந்தப் பக்கத்தில் வீற்றிருந்தது. மகிழ்ச்சியில் திளைத்த அவர், தன் குருநாதனாகிய இரெட்டியப்பட்டி சுவாமிகளை வணங்கி, தன்னை வழிநடத்தியதற்காக நன்றி கூறினார்.

அவர் அடிக்கடி, ''கடவுளை நேரில் கண்டவர்கள் மூன்று பேர். ஒருவர் இரமண மகரிஷிகள், மற்றொருவர் இரத்தினகிரி சுவாமிகள், மற்றொருவர் இரெட்டியப்பட்டி சுவாமிகள். அதிர்ஷ்டவசமாக இந்த மூன்று பேரிடமும் பணியாற்றி அவர்களது பரிபூரண ஆசிகளையும் பெற்றவன் நான்.'' என்று கூறி மகிழ்வார்.

சமீபத்தில், இரெட்டியப்பட்டி சுவாமிகளுக்குத் தொண்டு செய்வதையே குறிக்கோளாகக் கொண்டவரான திருமதி மங்கையர்க்கரசி அம்மையார் [இவர் பள்ளியில் தமிழாசிரியையாகப் பணியாற்றியவர். இரெட்டியப்பட்டி சுவாமிகளிடம் மிகுந்த பக்தி கொண்டவர்.] திரு.கணபதி ஸ்தபதி அவர்களை அணுகி, 'சுவாமிகள் அவரது கோவிலைக் கருங்கற்களால் கட்டுவதற்கு உத்தரவு கொடுத்திருப்பதாகவும், அதையும் திரு.கணபதி ஸ்தபதிதான் கட்டித் தர வேண்டும்' என்றும் வேண்டுகோள் விடுத்தார்.

அன்னார் திரு.கணபதி ஸ்தபதி அவர்களை விட ஒரு வயது மூத்தவர். தனது மூப்பையும் பொருட்படுத்தாது அக்கோவிலைக் கட்டுவதற்கு அரும்பாடு பட்டு வருபவர். தள்ளாத வயதிலும் தளராத நோக்கமுடையவர்!

ஏறக்குறைய 48 ஆண்டுகளுக்குப் பிறகு அப்போது விட்ட அதே பணி திரும்பவும் அவரைத் தேடி வருகின்றதென்றால் அதைத் தெய்வாதீனம் என்று சொல்லாமல் வேறென்ன சொல்வது? அதற்கு ஸ்தபதி அவர்கள் கூறும் காரணம் மிகவும் அற்புதமானது, தன்னடக்கம் வாய்ந்தது.

அவர், ''அப்போது சுவாமிகள் எனக்கு அனுபவம் போதவில்லை என்று நினைத்திருக்கலாம். இப்போது, 48 ஆண்டுகளுக்குப் பிறகு, எண்ணிலடங்கா கோவில்களை நான் கட்டி முடித்திருப்பதால் அனுபவம் வந்திருக்கும் என்று சுவாமிகள் எண்ணி மறுபடி எனக்கு இப்பணியை அளித்திருக்கிறார்'' என்று கூறுவார். தற்போது கருங்கற்களால் கோவில் அமைக்கும் பணி மும்முரமாக நடைபெற்று வருகின்றது.

எண்ணிலடங்கா சீடர்களைக் கொண்டவர் இரெட்டியப்பட்டி சுவாமிகள். ஒவ்வொருவரையும் வழிகாட்டும் வான்பொருளாக இருந்து அவர் வழிநடத்தி வருகின்றார் என்றே அவர்கள் நினைக்கின்றனர்.

ஆதனூரைச் சேர்ந்த திரு.பாலகவி வெங்கட்ராமன் ஐயா அவர்கள் இக்கோவில் கட்டுவதற்கு எடுத்துக் கொண்ட முயற்சிகள் ஏராளம். அவரது சொத்து அனைத்தையும் விற்று கோவில் அஸ்திவாரம் கட்டுவதற்குக் கொடுத்தவர். இரெட்டியப்பட்டி சுவாமிகளிடம் மிகுந்த பக்தியும் அன்பும் கொண்டவர். அன்னார்

இப்போது உயிருடன் இருந்திருந்தால், தனது குருநாதரின் கோவில், ஸ்தபதியின் கைவண்ணத்தில் கவினுற மறுபடிக் கட்டப்பட்டு வருகின்றது என்பதைப் பார்க்கும் போது மிகவும் மகிழ்ந்திருப்பார்.

எப்படி அன்று விட்ட வேலையை அதே ஸ்தபதி எடுத்துச் செய்கிறாரோ, அதே போல் அன்று இரெட்டியப்பட்டி சுவாமிகளுடன் மிகுந்த பக்தியும் பிரேமையும் கொண்ட தன் தகப்பனார் விட்ட பணியை இன்று ரத்னா ஃபேன்ஸ் அதிபர் திரு.கிருஷ்ணமூர்த்தி அவர்கள் எடுத்துச்செய்கிறார். இதுவும் தெய்வாதீனமான ஒன்றுதானே!

## ஓவியர் திரு. சில்பி அவர்களுடன்...

கணபதியார் பழனி தேவஸ்தானத்தில் ஆஸ்தான ஸ்தபதியாகப் பணிபுரிந்து கொண்டிருந்த நேரம். அப்போது அவருக்கு வயது 28.

ஓவியர் திரு.சில்பியை தமிழ்நாட்டில் உள்ள ஆன்மிக அன்பர்கள் அனைவரும் அறிவர். இறைவனைத் தொட்டு உணரக்கூடிய முப்பரிமாண உருவமாக ஸ்தபதிகள் செய்கின்றனர் என்றால், அதைக் கண்ணால் கண்டு மகிழக்கூடிய ஓவியமாகத் தீட்டுபவர்கள் ஓவியர்கள் அல்லவா?அதில் ஓவியர் சில்பி அவர்களைத் தலையாய ஓவியர் எனலாம்.

கோயில்களிலும் உள்ள மூலவர்களை அப்படியே வரைந்து நம் கண்முன் நிறுத்துபவர் அவர்! பெரும்பாலும் தமிழ் நாட்டிலுள்ள அனைத்து கோயில்களிலும் விற்கப்படும் மூலவரின் படம் திரு.சில்பி அவர்கள் வரைந்ததாகத்தான் இருக்க முடியும்.

அப்படிப்பட்ட மாபெரும் புகழ் வாய்ந்த ஓவியர் திரு.சில்பி அவர்கள், பழனிக்கு வருகை தந்திருந்தார். பழனி அருள்மிகு தண்டாயுத பாணியை ஓவியமாகத் தீட்டுவதற்காக, அவர் அங்கு வருகை தந்திருந்தார். சுமார் மூன்றுமாத காலம் அங்கு தங்கி யிருந்து, பழனி முருகனை ஓவியமாகத் தீட்டிக் கொண்டிருந்தார்.





அமரர் திரு.சில்பி வரைந்த சில ஓவியங்கள்

எடுத்துக் கொண்ட பணி நிறைவடைந்ததும், அவர் வரைந்த ஓவியத்தை ஆலயத்தில் சமர்ப்பித்தார். அந்த ஓவியத்தைப் பற்றி விவாதிப்பதற்காக ஆலயத்தின் நிர்வாக அதிகாரியான திரு. ஆதிமூலம் ஒரு கூட்டத்திற்கு ஏற்பாடு செய்திருந்தார்.



பழனி தேவஸ்தானத்தில் பணிபுரிந்த போது
திரு.கணபதி ஸ்தபதி அவர்கள்

அதில் ஆலயத்தின் முக்கிய அதிகாரிகள், ஓவியர் திரு.சில்பி அவர்கள், கணபதியின் பெரியப்பா திரு. ம. செல்லக்கண்ணு ஸ்தபதி அவர்கள் மற்றும் ஆஸ்தான ஸ்தபதி என்ற முறையில் திரு.கணபதியார் என்று பலர் கலந்து கொண்டனர். அதில் கலந்து கொண்டவர்களிலேயே வயதில் மிகவும் இளையவர் திரு.கணபதி ஸ்தபதியார்தான்.

அனைவரும் ஓவியத்தைப் பார்த்தனர். மிகவும் அழகாக தத்ரூபமாக வரையப்பட்டிருந்த ஓவியம் அது. அனைவரும் ஓவியர் திரு. சில்பியைப் புகழ்ந்தனர்.ஆஸ்தான ஸ்தபதி மட்டும் எதுவுமே பேசவில்லை.

இதை கவனித்த தலைமை அதிகாரி ''என்னகணபதி! நீங்கள் ஒன்றுமே கருத்துச் சொல்ல வில்லையே'' என்றார்.

''ஓவியம் நன்றாகத்தான் இருக்கிறது. ஆனால்,பழனி ஆண்டவரின் முகத்தில்உள்ளதேஜஸ் இந்த படத்தில் காண

முடியவில்லையே. ஒரு சிற்பியாகிய எனக்கு இது நன்கு புலப்படுகிறது.'' என்றார் கணபதியார்.

அவரது அந்த ஒளிவு மறைவு இல்லாத பேச்சைக் கேட்டதும் கூட்டத்தில் பெரும் அமைதி. 'அனுபவம் வாயந்த ஓவியரை இவர் இப்படிப் பேசி விட்டாரே அவர் கோபித்துக் கொள்வாரோ' என்று அனைவரும் பயந்தனர்.

அப்போது திரு.சில்பி அவர்கள் ''எனக்கு இயலவில்லை. அவரது முகத்தில் உள்ள தேஜஸைக் கொண்டு வருவதற்கு எவ்வளவோ முயற்சி செய்தும் முடியவில்லை. சிற்பியாகிய உன்னால்தான் அதைச் சரியாகக் கண்டுபிடிக்க முடிந்தது. மிகவும் சந்தோஷம்.'' என்றார்.

அதைக் கேட்டவுடன் அனைவருக்கும் பெரும் வியப்பு. அனுபவம் வாய்ந்த மூத்த ஓவியர், வயதில் இளையவராய் இருப்பினும் இவர் சுட்டிக் காட்டிய தவறை உடனே ஏற்றுக் கொண்ட பாங்கைக் கண்டு ஓவியர் சில்பியிடம் கொண்டிருந்த மதிப்பு பன்மடங்காயிற்று.

கணபதியாரும் ''மன்னித்துக் கொள்ளுங்கள். எனக்குத் தோன்றியதைச் சொன்னேன்.'' என்றார்.

இன்றைக்கும் கூட ''அவ்வளவு பெரிய ஓவியர்! பொடியனான நான் சொன்ன கருத்துக்கு செவி மடுத்து அதை ஏற்றுக் கொண்டாரே. எவ்வளவு பெரிய உள்ளம் அவருக்கு'' என்று திரு. கணபதி ஸ்தபதி அவர்கள் கூறுவார்.

## கம்பன்அடிப்பொடி திரு. சா.கணேசன் அவர்களுடன்...

திரு.வைத்தியநாத ஸ்தபதி அவர்கள் பிள்ளையார்பட்டி ஸ்ரீகற்பக விநாயகர் கோவிலின் இராஜ கோபுரத் திருப்பணியில் ஈடுபட்டு, அக்கோபுரத்தைக் கட்டிக் கொண்டிருந்த காலகட்டத்தில் பிறந்தவர்தான் திரு.கணபதி ஸ்தபதி அவர்கள் என்று முன்பே தெரிவித்தோம். அக்கோபுரத்தின் உபயதாரர் நாட்டுக்கோட்டை சமூகத்தைச் சேர்ந்த திரு.சாமிநாத செட்டியார் அவர்கள்.

இவ்விடம் நாட்டுக் கோட்டை சமூகத்து மக்களைப் பற்றி சிறிது சொல்ல வேண்டும். கோவில்களைக் கட்டுவதிலும், சத்திரங்களைக் கட்டுவதிலும், பழைய கோவில்களைப் புதுப்பிப்பதிலும் அவர்களுக்கு உள்ள ஈடுபாடு அளப்பறிய முடியாத ஒன்றாகும். இன்றும் இந்தியா முழுவதும் காசி முதல் இராமேஸ்வரம் வரை எந்த கோவிலுக்குச் சென்றாலும் பொதுமக்கள் தங்குவதற்கு சத்திரம் கட்டி வைத்திருப்பர் அச்சமூகத்தினர்.

அப்படிப்பட்ட சமூகத்தில் பிறந்த திரு.சாமிநாத செட்டியார் அவர்களின் புதல்வர்தான் தமிழ் மீது தீராத காதல் கொண்டு, பிற்காலத்தில் ''கம்பன் அடிப்பொடி'' என்ற அன்பான அடைமொழியுடன் அழைக்கப்பட்ட திரு.சா.கணேசன் அய்யா அவர்கள். பிள்ளையார்பட்டி கோவில் இராஜகோபுரத் திருப்பணி நடைபெற்றுக் கொண்டிருக்கும் போது அடிக்கடி கோவிலுக்கு வரும் அவர் திரு.வைத்தியநாத ஸ்தபதி மீது அளவு கடந்த


கம்பன் அடிப்பொடி
திரு.சா.கணேசன் அவர்கள்

அன்பும், மரியாதையும் வைத்திருந்தார். அவர்களது கலையான சிற்பம் மற்றும் வாஸ்து மீது மிகவும் மதிப்பு உடையவர். திரு.வைத்தியநாத ஸ்தபதியை ''அண்ணா'' என்று தான் அன்போடு அழைப்பார். அப்போது குழந்தையாக இருந்த கணபதியைப் பார்ப்பதுடன் சரி. அவரிடம் அதிகமாகப் பேசியதில்லை.

சிறுவன் கணபதி பள்ளி செல்லும் பருவம் வந்ததும் பயின்ற **S.M.S. School,** என்ற பள்ளி வழியாகச் செல்லும் வாய்ப்பு ஏற்பட்டால் கூட, பள்ளியில் இருந்து கணபதியை வரவழைத்து, அன்புடன் அரவணைத்து, ''இவன் யார் தெரியுமா? மயன் மகன்'' என்று எல்லோரிடமும் பெருமையாக அறிமுகப்படுத்தும் வழக்கம் உடையவர் திரு.சா.கணேசன் அய்யா அவர்கள்.

[அண்மையில் திரு.கணபதி ஸ்தபதி அவர்கள் பயின்ற காரைக்குடி அழகப்பா கல்லூரி அவரை ஒரு விழாவிற்குத் தலைமை தாங்க வரவழைத்து, அவருக்கு தென்னக மயன் என்ற பட்டத்தை அளித்தது இங்கே குறிப்பிடத்தக்கது.]

அந்த கணபதி வளர்ந்து, காரைக்குடி அழகப்பா கல்லூரியில் **B.A. Maths** படிப்பதற்குச் சேர்ந்தும் விட்டார். கல்லூரியில் படிக்கும் பொழுது சிவகங்கை மாவட்டத்திலுள்ள காளையார்

கோவில் அருகில் உள்ள திருவாடானை என்ற கோவிலின் கோபுரத்தைப் பற்றி Free India என்ற ஆங்கில இதழில் The tallest Tower of our Times என்ற பெயரில் ஒரு கட்டுரை எழுதினார்.

அக்கோவில் நாட்டுக் கோட்டை செட்டியார்கள் சமூகத்தவரின் உபயத்தில் திரு.அமிர்தலிங்க ஸ்தபதி மற்றும் அவரது சகோதரர் திரு.மாரியப்ப ஸ்தபதி ஆகியோரால் கட்டப்பட்டது. அந்தக் கட்டுரையில் திரு.கணபதி அவர்கள் நாட்டுக் கோட்டை சமூகத்து மக்களைப் பற்றியும், அவர்கள் கோவில் மற்றும் தமிழ் இலக்கியத்திற்காக ஆற்றிய தொண்டுகளைப் பற்றியும், திருவாடானை கோபுரம் பற்றியும் அழகிய ஆங்கிலத்தில் எழுதியிருந்தார்.

அக்கட்டுரையைப் படித்த திரு.சா.கணேசன் அவர்கள், ''யார் இவ்வளவு அழகாக நாட்டுக் கோட்டை சமூகத்தாரைப் பற்றி எழுதியிருப்பது?'' என்ற ஆவலில் பெயரைப்பார்த்தார். V. கணபதி என்று இருந்தது. அவர்தான் திரு.வைத்தியநாத ஸ்தபதியின் மகன் என்றும் தெரிந்து கொண்டார். உடனடியாக திரு.வைத்தியநாத ஸ்தபதியைத் தொடர்பு கொண்டு, தான் படித்த கட்டுரையைப் பற்றிப் பாராட்டிக் கூறினார்.

பிறகு, அவரை சந்தித்த திரு.வைத்தியநாத ஸ்தபதி மானசாரம் என்ற நூலுக்கு முன்னுரையாக அமையப் பெற்ற ஆங்கிலக் கட்டுரையைத் தமிழில் மொழி பெயர்த்த, தனது மகன் எழுதிய கட்டுரையையும் அவரிடம் அளித்தார். அதைப் படித்துப் பார்த்துப் பெரிதும் மகிழ்ந்தார் திரு.சா.கணேசன் அவர்கள். அதிலிருந்து அடிக்கடி திரு.கணபதியைக் காரைக்குடிக்கு

வரவழைத்து அவரிடம் சிற்பம் மற்றும் வாஸ்து பற்றிய பல தகவல்களைக் கேட்டறிவார். அக்கலைமீது பெரும் ஈடுபாடு உடையவர் அவர்.

கோவில்கள் பற்றிய பல செய்திகளை ஆர்வமுடன் கேட்டறிவார். ஸ்தபதியர் வைத்திருக்கும் காந்தமானி எனப்படும் **Magnetic Compass** அளவுகோல் ஆகியவற்றை அவர் எப்பொழுதும் வைத்திருப்பார். [இதனைக் குறிக்கும் வகையில் திரு.சா.கணேசன் அவர்களின் அறுபதாவது பிறந்தநாள் விழாவினைக் கொண்டாடும் பொழுது அப்போது வெளியிடப்பட்ட விழா மலரில் திரு.கணபதி ஸ்தபதி எழுதிய ஒரு கட்டுரையின் தலைப்பாக 'தந்தை திரு.சா.கணேச ஸ்தபதியார்' என்று குறிப்பிட்டார்.]

திரு.கணபதி ஸ்தபதி பழனி தேவஸ்தான ஸ்தபதியாகச் சேர்ந்ததில் திரு.சா.கணேசன் அய்யா அவர்களுக்குப் பெரும் மகிழ்ச்சி. பாரம்பரியம் மிக்க குலத் தொழிலைச் செய்கிறாரே என்று பாராட்டிப் பேசுவார்.

திரு.சா.கணேசன் அவர்களை திரு.கணபதி ஸ்தபதி எப்பொழுது பார்க்கச் சென்றாலும், அவரிடம் சிற்பக்கலை தொடர்பான செய்திகளைக் கேட்டறிவார். ''அய்யா! நேரமாகிறது, நான் கிளம்ப வேண்டும்'' என்று திரு.கணபதி ஸ்தபதி கூறினாலும், ''உன்னைப் போகச் சொல்லவே மனம் வரவில்லை, இன்னும் கொஞ்ச நேரம் இரு.'' என்று அன்பொழுகக் கூறுவாராம்.

''என்னைப் பெற்ற தந்தை வைத்தியநாத ஸ்தபதி என்றால் என்னை வாஸ்து மரபிலேயே வளர்த்த தந்தை திரு.சா.கணேசன் அய்யா அவர்கள்'' என்று ஸ்தபதி அவர்கள் அடிக்கடி குறிப்பிடுவார்.

தமிழக முதலமைச்சராய் இருந்த மூதறிஞர் இராஜாஜி அவர்கள் தஞ்சையில் நடைபெற்ற கலைக்கூடத் திறப்பு விழாவிற்கு வருகை தந்த போது அங்கு வைக்கப்பட்டிருந்த திரு.வைத்தியநாத ஸ்தபதியின் ஓவியத்தைப் பார்த்து, மகிழ்ந்து, அவரைப் பார்க்க வேண்டும் என்று விரும்பி, அவர் தனது மகன் கணபதி ஸ்தபதியுடன் பிரகதீஸ்வரர் கோவிலுக்குச் சென்றிருந்ததால், அங்கிருந்த திரு. சா.கணேசன் அவர்களிடம் இருவரையும் சென்னைக்கு வந்து அவரைப் பார்க்கும்படி பணித்து விட்டுச் சென்றார்.

மாநில முதல்வரைக் காணப் போகிறோம் என்று மகிழ்ச்சியாக இருந்தாலும், எவ்வாறு அவரைச் சந்திப்பது, அதற்குத் தேவைப்படும் பயணச் செலவு மற்றும் இதர செலவுகளுக்கு என்ன செய்வது என்று ஒரே குழப்பத்திலிருந்தார் திரு.கணபதி.

அவருக்குக் கிடைத்த ஒரே வழி, அவரது தந்தைக்குக் கிடைத்த பதக்கங்களை விற்பதுதான். அவ்வாறு இரண்டு பதக்கங்களை விற்று பணத்திற்கு ஏற்பாடு செய்து விட்டு, சென்னை செல்வதற்குக் காத்திருந்தார்.

பயண தினத்தன்று அவர்களை அழைத்துச் செல்வதற்காக வந்த திரு. சா.கணேசன் அவர்கள், திரு.வைத்தியநாத

ஸ்தபதியிடம், ''அண்ணா! சென்னைக்குச் சென்று, முதல்வரைப் பார்த்து விட்டுத் திரும்பி ஊருக்கு வந்து உங்களை வீட்டில் விடும் வரை ஆகும் எல்லா செலவுகளுக்கும் நான்தான் பொறுப்பு. ஆகவே, உங்கள் கையில் இருக்கும் பணம் எல்லாவற்றையும் வீட்டிலேயே வைத்து விட்டு வந்து விடுங்கள்.'' என்றார்.

இதைக் கேட்ட தந்தையும் மகனும் அவரது உயரிய இந்த பண்பிலே நெக்குருகிப் போயினர். முதல்வரை சந்தித்தால், அவர் மூலமாகப் பாரம்பரியம் மிக்க வாஸ்து மற்றும் சிற்பக்கலை மரபு மக்களுக்குச் சென்றடைவதற்கு வழி ஏற்படும் என்ற அளப்பறிய ஆவல் அவருக்கு இருப்பது கண்டு பெரு மகிழ்ச்சி அடைந்தனர்.

திரு.இராஜாஜி அவர்களை சந்தித்தப் பின்னர்தான் சென்னையில் காந்தி மண்டபம் கட்டப்படுவதற்கு அன்றுதான் எண்ணம் வேரூன்றப்பட்டது எனலாம். அது அழகுறக் கட்டப்பட்ட பின்னணியில்தான் மகாபலிபுரத்தில் உள்ள அரசினர் சிற்பம் மற்றும் கட்டிடக் கலைக் கல்லூரி தொடங்கப் பெற்றது எனலாம்.

கல்லூரி தொடங்கப் பெற்று, திரு.வைத்தியநாத ஸ்தபதி அக்கல்லூரியின் முதல்வராகப் பொறுப்பேற்று, மூன்று ஆண்டுகள் பணியாற்றிய பின்னர் பக்கவாதம் வந்து அவர் அப்பதவியைத் துறக்க நேர்ந்தது. அதன் பின் திரு.கணபதி ஸ்தபதி அவர்கள் அப்பதவியேற்றார். அப்பொறுப்பை ஏற்பதற்கு முன்தினம் திரு.சா.கணேசன் அவர்களை சந்தித்து ஆசி பெறச் சென்றார்.

திரு.சா.கணேசன் அவர்கள் அவரை வரவேற்று, அவருடைய அறைக்கு அழைத்துச் சென்றார். அறையில் ஒரு அலமாரியில் மிகவும் பத்திரமாகப் பொதிந்து வைக்கப்பட்டிருந்த

ஒரு பதக்கத்தை அவருக்குக் காண்பித்தார். ''கணபதி! உனது தந்தையார் சென்னையிலுள்ள காந்தி மண்டபத்தைக் கவினுறக் கட்டி முடித்ததும் அவருக்கு 'சிற்பக் கலாசாகரம்' என்ற விருதினைக் கம்பன் கழகம் மூலமாக வழங்கிட எண்ணி அவரது விருப்பத்தைக் கேட்டேன். ஆனால், அவ்விருதினைத் தனக்குத் தருவது தகுதியானது அல்ல என்று அவர் அதை வாங்க மறுத்து விட்டார். மிகவும் வற்புறுத்தியும் மறுத்து விட்டார். எனவே, இவ்விருதினைப் பெறுவதற்குத் தகுதியான நபர் கிடைத்ததும், அதை அவருக்கு அளிப்பேன்'' என்று கூறி விட்டு பதக்கத்தை மறுபடி உள்ளே வைத்து விட்டார்.

பின்னர், சில வருடங்கள் கழிந்த பின்னர் திரு.கலைஞர் கருணாநிதி தலைமையில் காரைக்குடியில் கம்பன் மணி மண்டபத்திற்கு அருகே தமிழன்னை திருக்கோயில் அமைப்பதற்கு அடிக்கல் நாட்டப்பட்டது.

அப்போது நடைபெற்ற விழாவில், அவரிடம் திரு.சா.கணேசன் அவர்கள், ''ஐயா! சிற்பக் கலாசாகரம் என்ற இவ்விருதினை கணபதியின் தந்தை திரு.வைத்தியநாத ஸ்தபதிக்கு அளிக்க விரும்பினேன். ஆனால், அது இயலவில்லை. தமிழன்னைக்குத் திருக்கோயில் கட்டப் போகும் கணபதிக்கு இவ்விருதினை அளிக்க விரும்புகிறேன். அவர் இதனை, அவரது தந்தையைப் போலவே நன்கு கட்டி முடிப்பார் என்ற நம்பிக்கை எனக்குள்ளது. மணிமண்டபம் கட்டி முடிக்கும் தறுவாயில் நான் இருப்பேனோ என்று தெரியாது. எனவே, அவ்விருதினை கணபதிக்குத் தங்கள் கரங்களால் இப்போழுதே வழங்க வேண்டும் என்று வேண்டிக் கொள்கிறேன்.'' என்றார்.

அதற்கு அன்புடன் சம்மதித்த கலைஞர் அவர்கள், தனக்கே உரிய நகைச்சுவை உணர்வுடன், ''பொதுவாக ஒருவருக்கு இடப்பட்டிருக்கும் பணியை முடித்த பின்னரே விருது வழங்கப்படும். ஆனால், திரு.கணபதி ஸ்தபதிக்கோ அடிக்கல் நாட்டு விழாவிலேயே விருது வழங்கப்படுகிறது.'' என்று பலத்த சிரிப்பலைகளுக்கிடையில் கூறினார். அன்றே திரு.கணபதி ஸ்தபதிக்கு 'சிற்பக் கலாசாகரம்' விருது வழங்கப்பட்டது.



சிற்பக் கலாசாகரம் விருது வழங்கிய போது

திரு.சா.கணேசன் அவர்கள் தமிழ் மொழி மீதும், கம்பன் மீதும் அளப்பறிய பக்தியும், காதலும் கொண்டவர். தன் பெயரையே கம்பன் அடிப்பொடி என்று மாற்றிக் கொண்டு, ஒவ்வொரு வருடமும் கம்பன் விழா நடத்துவார். ஒவ்வொரு வருடமும் தமிழ் அறிஞர்களை வரவழைத்து, பட்டிமன்றம் வைத்து, அவர்களை சொற்பொழிவாற்ற வைத்து மகிழ்வார்.

திரு.கணபதி ஸ்தபதி சிற்பக்கலைக்கல்லூரியில் முதல்வராக இருந்த போது, தமிழக அரசு தொழில் நுட்பக் கழகம்

அவரை 'சிற்பச் செந்நூல்' என்ற நூலை எழுதும்படியும், அந்நூல் சிற்பக் கலை நுட்பத்தைத் துல்லியமாக விளக்குவதாக இருத்தல் வேண்டும் என்றும் பணித்தது. அதனை ஏற்றுக் கொண்ட திரு.கணபதி ஸ்தபதி உடனே அந்நூல் எழுதும் பணியினைத் தொடங்கினார்.

அந்நூல் எழுதப் பெறும் போது அதை சரி பார்க்கும் கமிட்டியின் தலைவராக திரு.சா.கணேசன் அய்யா அவர்களை அரசாங்கம் நியமித்தது. ஒவ்வொரு அத்தியாயம் எழுதி முடித்ததும் அதை அவருக்குக் காண்பிப்பதற்காக கணபதி ஸ்தபதி எடுத்துச் செல்வார்.

பொறுமையாக முழுவதும் படித்து விட்டு, ''கணபதி நீ எழுதியதிலேயே இந்த அத்தியாயம்தான் மிகவும் அருமையாக இருக்கிறது.'' என்பார். [ஒவ்வொரு அத்தியாயம் படித்த பின்னரும் இதையேதான் சொல்வார் என்பது தனிக்கதை. சிற்பக்கலை மீதும், அதில் வல்லுநரான திரு.கணபதி ஸ்தபதி மீதும் அவருக்கு இருந்த ஈடுபாட்டின் வெளிப்பாடே இது.]

இவ்வாறு, கண்ணும் கருத்துமாக வடிவமைக்கப்பட்ட அந்நூல் இன்றும் சிற்பியரின் கையேடாக, ஓர் ஆசானைப் போல் விளங்குகிறது.

திரு. சா.கணேசன் அவர்கள் மிகவும் எளிமையானவர். வெறும் வேட்டி மட்டுமே அணிவார். மேல் சட்டை அணிய மாட்டார். நேரம் தவறாமையில் பெரும் ஈடுபாடு உடையவர். நேரந்தவறாமையை ஒரு கொள்கையாகக் மிகவும் கடுமையாகக் கடைபிடிப்பார். அவரது இந்த உயரிய பண்பிற்கு அனைவரும்

தலைவணங்குவர். திரு.கணேசன் அய்யா நடத்தும் விழா என்றால் அதற்கு வருகை தரும் அனைத்து தலைவர்களும், மக்களும் குறிப்பிட்ட நேரத்திற்கு வந்து விடுவர்.

ஒரு முறை திரு.கலைஞர் கருணாநிதி அவர்கள், திரு.சா.கணேசன் அய்யா அவர்களின் அழைப்பின் பேரில் ஒரு விழாவிற்குத் தலைமை தாங்குவதற்காக, சென்னையிலிருந்து காரைக்குடிக்கு இரயிலில் சென்று கொண்டிருந்தார். இரயில் குறிப்பிட்ட நேரத்திற்குச் சென்றிருந்தால் கலைஞர் அவர்களால் விழாவிற்குக் குறிப்பிட்ட நேரத்திற்குச் சென்றிருக்க முடியும்.

ஆனால், அன்று இரயில் மிகவும் தாமதமாகச் சென்று கொண்டிருந்தது. நேரம் நெருங்க, நெருங்க திரு.கலைஞர் அவர்கள் பதட்டமடையத் தொடங்கினார். ‘கணேசன் அய்யா யாருக்காகவும் காத்திருக்க மாட்டாரே, விழாவைத் தொடங்கி விடுவாரே’ என்று எண்ணி, இரயிலிலேயே குளியல் போன்ற காலைக் கடன்களை முடித்து விட்டு, இறங்கியதும் நேராக விழாவிற்குச் செல்லத் தயாராக இருந்தாராம்.

இவ்வாறு பல உயரிய பண்புகளுக்கு உரியவராய் இருந்த திரு.சா.கணேசன் அய்யா அவர்களைத் தனது வளர்ப்புத் தந்தையாக அடைந்தது தன் வாழ்நாளில் பெற்ற பெரும்பேறு என்று திரு.கணபதி ஸ்தபதி அவர்கள் கருதுகிறார். அவரது பேத்தி திருமதி கண்ணகியும் அவரது கணவரும் இப்பொழுதும் ஸ்தபதியாரை வீட்டிற்கு வந்து பார்த்து, அன்புடன் பேசி, ஆசி பெற்றுச் செல்வர்.

## காஞ்சி பரமாச்சாரியார் அவர்களுடன்...

கணபதி ஸ்தபதி அவர்களின் தந்தையார் பக்கவாத நோயினால் பாதிக்கப்பட்டார். அப்போது கணபதி ஸ்தபதி அவர்கள் பழனி தேவஸ்தானத்தில் பணியாற்றிக் கொண்டிருந்தார்.

தந்தையாரின் நோயைக் குணப்படுத்துவதற்கு அவரும், அவரது சகோதரர்களும் பெரும் முயற்சி எடுத்துக் கொண்டனர். சென்னை அரசாங்க பொது மருத்துவமனையில் அவரை அனுமதித்து தம்மால் முடிந்த அளவிற்கும் மேலே உழைத்து அவரைக் காப்பாற்ற முயன்றனர்.

கணபதி ஸ்தபதி, தன் வளர்ப்புத் தந்தையான கம்பன் அடிப்பொடி திரு.சா.கணேசன் அவர்களை அணுகி ஆலோசனை கேட்டார். அவரது ஆலோசனையின் பேரில் பிள்ளையார் பட்டியில் உள்ள ஆயுர்வேத சிகிச்சைக்கு அழைத்து வந்தனர். அங்கு தங்கி சிகிச்சை அளித்தனர். ஆனால், நோய் முற்றி விட்ட காரணத்தினால், அவரைக் குணப்படுத்துவது கடினம் என்று கூறி விட்டனர்.

அப்போது திரு.சா.கணேசன் அவர்கள், காஞ்சி பரமாச்சாரியார் இளையாத்தங்குடி என்ற ஊரில் முகாமிட்டிருப் பதாகவும், அங்கு அவரைச் சந்தித்து, ஆசி பெற்று, தந்தையார் பற்றி கேட்டுவரும்படியும் கணபதி ஸ்தபதி அவர்களிடம் கூறினார். இளையாத்தங்குடி என்ற ஊர், காரைக்குடியில் பிள்ளையார்பட்டி அருகில் உள்ளது. அந்த ஊரில் பரமாச்சாரியாரின் குருவினுடைய மகாசமாதி உள்ளது.

திரு.சா.கணேசன் அவர்களது ஆலோசனையை ஏற்று, பரமாச்சாரியாரைச் சந்திக்க இளையாத்தங்குடி வந்தார் கணபதி ஸ்தபதி. அவர் அங்கு வரும்போதே இரவு 9 மணி அளவில் ஆகி விட்டது.

ஊரில் இறங்கியதும், நேராக சுவாமிகள் தங்கியிருந்த முகாமுக்கு விரைந்து, மடத்து மேலாளரை சந்தித்து, தான் திரு.வைத்தியநாத ஸ்தபதியின் மகன் என்றும் அவரது தற்போதைய நிலை பற்றியும் விளக்கிக் கூறினார்.

திரு.வைத்தியநாத ஸ்தபதிக்கும் காஞ்சி பரமாச்சாரியார் அவர்களுக்கும் உள்ள தொடர்பை இங்கே சற்று விளக்க வேண்டும்.

திரு. வைத்தியநாத ஸ்தபதி அவர்கள் மிகுந்த புலமையுடையவர். தமிழ், சம்ஸ்கிருதம், தெலுங்கு, மலையாளம் போன்ற பல மொழிகளைக் கற்றுத் தேர்ந்தவர். சில்ப சாஸ்திரங்களிலும், வாஸ்து சாஸ்திரங்களிலும் மிகுந்த பாண்டித்யம் உள்ளவர்.

எனவே, அவர் மீது காஞ்சி பரமாச்சாரியார் அவர்களுக்கு மிகுந்த அன்பும், மதிப்பும் இருந்தன. காஞ்சி மடத்திலுள்ள தினசரி பூஜை நடைபெறும் பூஜா மண்டபத்தைக் கருங்கல்லால் கட்டியவர் திரு.வைத்தியநாத ஸ்தபதி அவர்கள்.

இவ்வாறு தன் தந்தையாரைப் பற்றி நன்கு அறிந்த ஒரு மகானிடம் சென்றால் அவரது உடல்நிலை குறித்துக் கேட்கலாமே என்றுதான் திரு.கணபதி ஸ்தபதி அவர்கள் காஞ்சி பராமாச்சாரியாரைச் சந்திக்க இளையாத்தங்குடி சென்றார். மடத்து

மேலாளரிடம் [மேனேஜர்] தகவல் தெரிவித்ததும், அவர் இத்தகவல்லை பரமாச்சாரியாரிடம் தெரிவிக்க விரைந்தார். உடனடியாக கணபதி ஸ்தபதியை அழைத்து வரும்படி பெரியவர் உத்தரவிட்டார்.

ஸ்தபதி அங்கு சென்ற போது பரமாச்சாரியாரைச் சுற்றி கடல் போல் ஜன வெள்ளம். அக்கூட்டத்தை இரண்டாக விலக்கி வழி அமைத்து ஸ்தபதியை அழைத்துச் சென்றனர். காஞ்சி சுவாமிகளை முதல் முதலாக சந்திக்கும் திரு.கணபதி ஸ்தபதி, அவரை வணங்கி ஆசி பெற்றுத் தந்தையைப் பற்றிக் கூறத் தொடங்கியதும் சுவாமிகள் தடுத்து நிறுத்தி, ''வா என்னுடன்'' என்று கூட்டத்தைப் பிளந்து நடக்கத் தொடங் கினார். ஸ்தபதியும் அவரைப் பின்தொடர்ந்து நடக்கத் தொடங்கினார்.

அப்போதே இரவு 10 மணி. இவர்களைப் பின்தொடர்ந்த மக்கள் வெள்ளமும் சிறிது தூரம் நடந்த பின்னர் ஒரு குறிப்பிட்ட எல்லைக்குள் நின்று விட்டது. சுவாமிகள் நடந்து கொண்டிருக்கும் பொழுது ஸ்தபதியின் படிப்பு, வேலை போன்றவைகளைப் பற்றியே கேட்டுக் கொண்டு வந்தார். அவரது தந்தையாரைப் பற்றி எதுவுமே கேட்கவில்லை. இது அவருக்குப் பெருங்குறையாக இருந்தது.

கூட்டத்தை விட்டு வெகு தூரம் நடந்த பின்னர், ஒரு சமாதி கோவில் தென்பட்டது. [அச்சமாதி காஞ்சி மடத்தைச் சேர்ந்த மூத்த சுவாமிகளான ஒரு மகானுடையது] அதன் அருகில் வந்ததும் சுவாமிகள் நின்றுவிட்டார். பிறகு உள்ளே சென்று விட்டார்.

ஸ்தபதி கோவிலுக்கு வெளியே நின்று கொண்டே இருந்தார். சுவாமிகள் தம்மை சோதிப்பதற்காகவே எதுவும் சொல்லாமல் உள்ளே சென்று விட்டார் என்றும் அவர் வரும் வரை காத்திருப்பதென்றும் முடிவு செய்தார். வெளியே கடும் இருட்டு. இரவு மணி பன்னிரண்டையும் கடந்து விட்டது. தொலைவில் காத்துக் கிடந்த கூட்டமும் சிறிது சிறிதாகக் கலைந்து உறங்கச் சென்று விட்டது. ஸ்தபதி மட்டும் கோவில் வாசலில் இருட்டில் நின்று கொண்டிருந்தார்.

சுமார் 12.30 மணியளவில் சுவாமிகள் கோவிலில் இருந்து வெளியே வந்தார். ''எங்கே அந்தப் பையன்?'' என்று கேட்டுக் கொண்டே வந்தார்.

''இங்கே இருக்கிறேன் சுவாமி'' என்று ஸ்தபதி கூறியதும், அவரை அழைத்துக் கொண்டு, கோவிலினுள் சென்று பிரகாரத்தின் ஒரு மூலையில் நின்று கொண்டார். அவர் கைகளில் இரண்டு தேங்காய் மூடிகள். 'அவர் உள்ளே நுழையும் போது வெறும் கையுடன்தானே நுழைந்தார், தேங்காய் மூடிகள் எங்கிருந்து வந்தன' என்று ஸ்தபதி வியந்தார்.

சற்று நேரம் ஸ்தபதியையே உற்று நோக்கிய சுவாமிகள், அவரது தந்தையாருக்கு வந்திருக்கும் நோயைப் பற்றி விவரமாகக் கேட்டுத் தெரிந்து கொண்டார்.

சுமார் 15 நிமிடங்கள் ஸ்தபதி விளக்கியதும், சுவாமிகள் ''வைத்தியநாத ஸ்தபதிக்குப் ப்ராரப்த கர்மா [முன்வினைப் பயன்].'' என்று கூறி கணபதி ஸ்தபதியைப் பார்த்து ''நீ மிகவும் அமோகமாய் இருப்பாய். போ. போகும்போது மேனேஜரைப் பார்த்து

விட்டுப்போ'' என்று கூறி, தேங்காய் மூடிகளை அவரிடம் அளித்தார்.

ஸ்தபதிக்கு மிகவும் வருத்தம், தந்தையாரைப் பற்றி ஒன்றுமே கூறவில்லையே என்று. ஆயினும் முன்வினைப் பயன் என்று கூறி விட்டதால், இனி அவர் பிழைக்கவே முடியாது என்றுதான் நாசூக்காகக் கூறி விட்டாரோ என்று நினைத்து வருந்திக் கொண்டே நடக்கத் தொடங்கினார்.

வெளியே கடும் இருட்டு. 'எப்படி வந்தோம், எப்படி அலுவலகத்தை அணுகி மேனேஜரைப் பார்க்கப் போகிறோம்?' என்று சற்று மலைப்பாக இருந்தது அவருக்கு.

அப்போது ஒரு சிறுவன், சுமார் எட்டு வயதிருக்கும், பார்ப்பதற்கு அந்தணச் சிறுவன் போல் குடுமி வைத்துக் கொண்டு இருந்தான். முகத்தில் தெய்வீகக் களை. ஸ்தபதியிடம் வந்து ''வாருங்கள் நான் அழைத்துச் செல்கிறேன்'' என்று கூறி நடக்கத் தொடங்கினான். 'அவன் யார்? இவ்வளவு நேரம் எங்கிருந்தான்?' என்றெல்லாம் பல வினாக்கள் ஸ்தபதியின் மனதில்.

இருவரும் நடந்து சென்று மேனேஜரை அடைந்ததும், அவரிடம் ஏதோ கூறிவிட்டு, ஸ்தபதியை விட்டு விட்டு இருட்டில் நடந்து சென்று மறைந்து விட்டான் அச்சிறுவன்.

அச்சிறுவனைப் பார்க்கும் பொழுது சிறுவயதில் தீபாவளி மலர் புத்தகமொன்றில் திரு.கோபுலு வரைந்திருந்த ஆதிசங்கரரின் உருவம் ஸ்தபதிக்கு ஏனோ நினைவுக்கு வந்தது. அப்போது பார்த்த ஆதிசங்கரரின் படத்தை இப்போது நேரில் பார்ப்பது போன்று தோன்றியது ஸ்தபதிக்கு!

மடத்து மேனேஜர் ஸ்தபதியிடம் ஒரு ரசீதில் கையெழுத்திட்டு 50 ரூபாய் பெற்றுக் கொள்ளும்படி ஸ்தபதியிடம் கூறினார். ஸ்தபதி உடனே அவரிடம் ''ஐயா! நான் எனது தந்தையாரின் உடல்நிலை பற்றி சுவாமிகளிடம் தெரிவித்து விட்டு அவர் ஏதும் கூறுகிறாரா என்று கேட்கத்தான் வந்தேனே ஒழிய பணம் எதுவும் வேண்டாம்'' என்று பவ்யமாக மறுத்தார்.

''சுவாமிகள் உத்தரவு. வாங்கிக் கொள்ள வேண்டும்'' என்று அவர் வற்புறுத்தியதும் வேறு வழியின்றி பணத்தைப் பெற்றுக் கொண்டார். சாப்பாட்டு அறைக்குச் சென்று சாப்பிட்டு விட்டுப் போகும்படி அவர் பணித்ததும் நல்ல பசியில் இருந்த ஸ்தபதியும் அதனை மறுக்காமல் சாப்பாட்டு அறைக்குச் சென்றார்.

அந்த அகால வேளையிலும் ருசியான குழம்பு, ரசம், பொறியல், சூடான சாதம் என்று அருமையான சாப்பாடு. ருசித்துச் சாப்பிட்ட ஸ்தபதி இரவு அங்கேயே தங்கி விட்டு மறுநாள் ஊர் திரும்பி விட்டார். சிறிது நாட்களில் அவரது தந்தையார் இறந்து விட்டார். மேற்கூறிய அத்தனை நிகழ்ச்சிகளும் நடந்தது 1960ல்.

அதற்குப் பிறகு ஸ்தபதி காஞ்சி மடத்திற்கு அடிக்கடி விஜயம் செய்து பரமாச்சாரியரைத் தரிசிப்பது வழக்கமாயிற்று. அவ்வாறு ஒருமுறை தரிசிக்கச் சென்ற போது சுவாமிகளை முதன்முதலில் சந்தித்த போது இருட்டில் ஸ்தபதியை வழிநடத்திச் சென்ற அந்தச் சிறுவனைப் பற்றி சுவாமிகளிடம் கூறி, அச்சிறுவன் ஆதிசங்கரரைப் போல் இருந்ததாகக் கூறினார். அதற்கு சுவாமிகள் ''ஆஹா! எங்களுக்கெல்லாம் கிடைக்காத பாக்கியம் கணபதி

உனக்குக் கிடைத்திருக்கிறது. நாங்கள் யாரும் ஆதிசங்கரரை நேரில் பார்க்க முடியவில்லை. உனக்கு அந்த பாக்கியம் சிலாகித்ததே'' என்று மகிழ்ந்தார்.

ஸ்தபதியிடம் இருந்த அபிரிதமான சிற்பம் மற்றும் வாஸ்து சாஸ்திரங்களைப் பற்றிய அறிவாற்றலை சரிவரப் புரிந்து கொண்டு ஸ்தபதியைப் பலமுறை பல அறிஞர்கள் நிரம்பியுள்ள கூட்டங்களில் பேசச் செய்வார் சுவாமிகள்.

1965 ல் 'வேத ஆகம சில்ப வித்வத் சதஸ்' ஒன்றை ஏற்பாடு செய்து அதில் ஸ்தபதியை சில்ப சாஸ்திரங்களைப் பற்றிப் பேசுவதற்கு வாய்ப்பளித்தார்.

ஸ்தபதி அவர்கள் விஷய ஞானம் நிரம்பப் பெற்றவராய் இருந்ததாலும், எதையும் தெளிவுற, ஆணித்தரமாக, சாஸ்திரங் களிலுள்ள கோட்பாடுகளை உதாரணங்களாகக் காட்டி விளக்க வல்லவராயும் இருந்தமையால் அவரது உரை பலரையும் கவர்ந்தது. சுவாமிகளின் உத்திரவின் பேரில் மறுநாள் தினசரிகளில் சதஸ் பற்றிய செய்திகள் வெளிவந்தன. அதில், 'இளம் சிற்பியின் புலமை' என்ற தலைப்பில் ஸ்தபதி அவர்களின் உரை வெளி வந்தது.

இவ்வாறு, கணபதி ஸ்தபதி அவர்களின் அறிவாற்றலை உணர்ந்து, அவர் அறிந்திருந்த சாஸ்திரத்தின் பாரம்பரியத்தை உணர்ந்து ஒவ்வொரு கட்டத்திலும் ஊக்குவித்தவர் சுவாமிகள் அவர்கள். சில்ப மற்றும் வாஸ்து சாஸ்திரங்களைப் பற்றி யார் பேசினாலும், பேச விட்டு விட்டு, கடைசியில் ''நீ சொல்லுடா

கணபதி'' என்று இவரைப் பார்த்துக் கேட்பாராம் அவர். இவர் சொல்லும் விளக்கங்களைக் கூர்மையாகக் கேட்டு மகிழ்வாராம்.

ஒரு முறை ஸ்தபதியிடம் ''கணபதி! கோயில் கருவறையின் மேல் கட்டுவதும் விமானம் என்கிறீர்கள். பயணம் செய்வதும் விமானம். இரண்டுக்கும் என்ன ஒற்றுமை?'' என்று பரமாச்சாரியார் கேட்க, அதற்குச் சற்றும் தாமதியாமல் ஸ்தபதி அவர்கள், ''சுவாமி அந்த விமானம் நமது உடல்களை மேலே எடுத்துச் செல்லும். இந்த விமானம் நமது ஆன்மாவை மேலே, பரவெளிக்கு எடுத்துச் செல்லும்.'' என்று கூற, சுவாமிகள் மறுபடியும் ''அப்படியானால் கோபுரம் என்பதற்கு என்ன அர்த்தம்?'' என்று கேட்டார்.

''கோ என்றால் பசு. புரம் என்றால் வசிக்கும் இடம். எனவே, கோபுரம் என்றால் பசுக்கள் வசிக்கும் இடம். ஆன்மாவாகிய பசுக்கள் உள்ளே சென்றிட வழி விடும் இடம்'' என்றார் ஸ்தபதி. சமயோசிதமாகக் கூறப்பட்ட அந்த பதிலை மிகவும் ரசித்தார் பரமாச்சாரியார் அவர்கள்.

ஸ்தபதி பழனி வேதஸ்தான வேலையிலிருந்து மகாபலிபுரம் சிற்பக் கலைக் கல்லூரிக்கு முதல்வராகி விட்ட பிறகும் அடிக்கடி காஞ்சி சென்று அவரைத்தரிசிப்பார். அவசரமாக சில சமயம் கல்லூரியிலிருந்து அப்படியே காஞ்சி சென்று விடுவதும் உண்டு.

அவரைச் சுற்றி உள்ளவர்கள் எல்லாம் வேட்டி உடுத்திக் கொண்டு மேலே மேல் வேட்டி மட்டும் அணிந்து நின்று கொண்டிருக்க, அலுவலக உடையுடன் எப்படி உள்ளே போவது என்று ஸ்தபதி தயங்கி நின்றாலும் அவரை உடனே உள்ளே

வரும்படி சுவாமிகள் கூறுவாராம். ''நீ பிரின்ஸ்பால்டா! நீ இப்படியே வந்தால் தப்பில்லை. வா வா!'' என்று அன்போடு, பாசத்தோடு, ஆர்வத்தோடு அவரை வரவேற்பாராம் சுவாமிகள். இன்றளவும் அந்த பாசத்தை நினைவு கூர்ந்து கண்கலங்குவார் ஸ்தபதி அவர்கள்.

புதுடில்லி சுவாமிநாத சுவாமி திருக்கோயிலை ஸ்தபதி அவர்கள் கட்டும் பொழுது சுவாமிகளின் பங்கேற்பு அதில் ஏராளம். நிதி பற்றாக்குறை வந்த போது அப்போது மத்திய அமைச்சரவையில் இருந்த திரு.ஆர்.வெங்கட்ராமன் அவர்களிடம் பேசி நன்கொடைக்கு ஏற்பாடு செய்தார்.

அக்கோவிலில் நமது பாரம்பரிய சிற்பக் கலாச்சாரத்தை எடுத்துக் கூறும் வகையில் விஸ்வகர்ம மண்டபம் ஒன்று கட்டப்பட வேண்டும் என்றும், அதில் சிற்பங்கள் அதிக அளவில் இடம் பெற வேண்டும் என்று ஆலோசனை கூறினார்.

அதன்படி ஸ்தபதி அவர்களும் கல்லால் ஆன கற்சங்கிலி, சப்தஸ்வரங்கள் வரும் தூண்கள், சிலையின் காதில் ஒரு குச்சியை விட்டால் அக்குச்சி சிலையின் மூக்கின் வழியே வெளிவரும்படியான தொழில்நுட்பம் பொருந்திய சிலை என்று பலவிதங்களில் விஸ்வகர்ம மண்டபத்தை அலங்கரித்தார்.

கோவிலுக்கு வரும் எவரையும் கவரும் வண்ணம் அம்மண்டபம் திகழ்ந்தது. சமீப காலமாக ஏனோ, அம்மண்டபத்தைப் பூட்டி வைத்துள்ளனர். தலைநகர் டில்லியில் நமது கலாச்சாரத்தைப் பிரதிபலிக்கும் அம்மண்டபத்தைப்

பொதுமக்கள் பார்ப்பதற்கு கோவில் நிர்வாகம் ஆவன செய்ய வேண்டும்.

இன்று வாழ்க்கையில் மேன்மையான நிலைக்கு வந்து விட்ட திரு.கணபதி ஸ்தபதி அவர்கள் 'காஞ்சி சுவாமிகள் உள்ளிட்ட பல பெரியோர்கள், மகான்கள் தன்னை மனதார வாழ்த்தியதுதான் தற்போதைய மேன்மைக்குக் காரணம்' என்று கூறுவார்.

## கல்லூரி முதல்வராக ( I ) ....

தந்தையார் கடும் பக்கவாத நோயில் விழுந்த போது, கணபதி ஸ்தபதி அருள்மிகு பழனி தேவஸ்தானத்தின் ஆஸ்தான ஸ்தபதி. அங்கேயே வீடு எடுத்து, குடும்பத்துடன் தங்கி இருந்தார்.

ஒருநாள்.. திரு.ரெங்கசாமி ஐயங்கார் என்ற பெயருடையஒருவர் கோயிலுக்கு வந்திருந்தார். [அவர் திரு.வைத்திய நாத ஸ்தபதியின் பழைய நண்பர்.]

அவர் ஸ்தபதியிடம், ''உன் தந்தையார் முதல்வராக இருந்த சிற்பக் கலைக் கல்லூரிக்குப் புது முதல்வரைத் தேர்ந்தெடுப்பதற்குப் பத்திரிகையில் விளம்பரம் வந்ததே. பார்த்தாயா? விண்ணப்பம் அனுப்ப இன்றுதான் கடைசி நாள்.'' என்றார்.

அதைக் கேட்ட கணபதி மிகவும் மகிழ்ச்சியடைந்தார். காரணம், தந்தையார் ஆரம்பித்து வைத்த கல்லூரி, அதுவும் அரசாங்க உத்தியோகம், சிற்பக் கலையையே கற்பிக்கும் அருமையான பணி..

இத்தகைய நல்லதொரு சந்தர்ப்பத்தை விட்டு விடக் கூடாது என்று உடனே, தானே தட்டச்சு இயந்திரத்தின் முன் அமர்ந்து, விண்ணப்பப் படிவம் தயாரித்து, அன்றைய தபாலிலேயே அனுப்பியும் விட்டார். கண்டிப்பாக அந்தப் பணி தனக்குக் கிடைக்கும் என்று மனம் முழுவதும் நம்பிக்கை.

நினைத்தது போலவே நேர்முகத் தேர்விற்கு அழைப்பு வந்தது. சென்னைக்கு வந்தால் இவரைப் போலவே எட்டு பேருக்கு

அரசாங்கம் அழைப்பு அனுப்பியிருந்தது தெரிய வந்தது. 'எத்தனை பேரானால் என்ன, யாரானாலும் என்ன, தகுதியுள்ளவருக்குக் கிடைக்கப் போகிறது' என்று மிகவும் சாதாரணமாக எடுத்துக் கொண்டு நேர்முகத் தேர்வை எதிர்நோக்கத் தயாரானார்.

தந்தையாரால் தொடங்கப்பட்ட அக்கல்லூரி நிலைத்து நிற்க வேண்டும் என்பதே அவர் இலட்சியம். எவர் மீதும் எதற்காகவும், அசூயையோ, பொறாமையோ படவே தெரியாது அவருக்கு. அப்போது அவருக்கு வயது 29. இன்றளவும், 77 வயதான பிறகும் கூட, ஸ்தபதியாரின் அருமையான குணங்களில் அனைவரும் மதிக்கும் குணங்களில் இதுவும் ஒன்று.

நேர்முகத் தேர்வில் முதல்நாள் ஓவியம், அடுத்த நாள் சிற்பம், அடுத்தநாள் கதவு ஒன்றின் அழகான பரிமாணங்களை க் கட்டிடக் கலை (Architecture) மூலம் காட்ட வேண்டும், இறுதி நாள் வாய்மொழியாகக் கேட்கப்படும் தேர்வு என்று அடுக்கடுக்காகக் கடுமையான தேர்வுகள்.

முதல் நாள் ஓவியம் (Drawing) தேர்வு முடிந்ததுமே, கணபதி வரைந்த நேர்த்தியையும், அழகையும் கண்டு, தேர்வை நடத்திய திரு. பணிக்கர் [முதல்வர், அரசு கலைக் கல்லூரி, எழும்பூர், சென்னை] என்ற அரசு அதிகாரி அவரிடத்தில் வந்து, ''நீ யார்? உன் தகப்பனார் பெயர் என்ன?'' என்று கேட்டார்.

''நான் திரு. வைத்தியநாத ஸ்தபதியின் மகன்'' என்றதும் அந்த அதிகாரி மிகவும் மகிழ்ந்து ''நீ வரைந்த விதத்திலிருந்தும்

அழகிலிருந்துமே அது கண்கூடாகத் தெரிகிறதே. தந்தைக்கேற்ற மகன்'' என்று பாராட்டி விட்டுச் சென்றார்.

இப்படி, ஒவ்வொரு நாள் தேர்வின் போதும் இவரது திறமை பளிச்சிட, தேர்விற்கு வந்த மற்றவர்கள் தங்களுக்கு இந்தப் பணி கிடைக்கவே கிடைக்காது என்று முடிவே கட்டி விட்டார்கள் . ஆயினும் கடைசி நாள் வாய்மொழித் தேர்வு (Vaiva) இருக்கிறதே என்று அதற்கான ஆயத்தங்களைச் செய்யத் தொடங்கினார்கள்.

அனைவரும் கணபதியிடம் வந்து 'என்ன மாதிரியான கேள்விகள் வரும்?' என்று கேட்க, இவரும் இந்த மாதிரியான கேள்விகள் கேட்கப்படலாம் என்று யோசித்துத் தனக்குத் தெரிந்த வற்றையெல்லாம் சொல்லிக் கொடுக்கத் தொடங்கினார். சிறிதும் கர்வமே இல்லாத உயரிய பண்பு அதுவன்றோ? தனக்குத் தெரிந்த எவற்றையும் மறைக்காமல் அடுத்தவருக்கு சொல்லிக் கொடுப்பதில் அவருக்கு நிகர் அவரே.

மறுநாள் தேர்வில் அனைவரும் நன்றாகவே பதில் கூறினாலும், கணபதிக்கு உள்ளதிலேயே கடினமான கேள்வி கேட்கப்பட்டது.

*ஓம்காரம் மூலமந்த்ரம் முனிஜன சகிதம்*
*வேதசாரம் சிவாக்யம்*
*வந்தே கைலாச நாதம் சகல சுரகுரும்*
*தக்ஷிணாமூர்த்திமீடே*

– என்ற ஸ்லோகத்தின் அர்த்தம் கேட்கப்பட்டது. மிகவும் அழகாக, தனக்கே உரிய உயரிய நடையில் அதற்கான

பொருளைக் கூறினார் கணபதி. ''மூலமந்த்ரம் என்பது ஓம்தான் என்றும், வேதத்தின் சாரம் சிவ என்பதே'' என்பதுதான் அவர் கூறிய பதில். [இன்றளவிலும் அவர் ஒன்றைப் பற்றி விவரிக்கும் போது அதற்கான ஆதாரங்களையும், சம்ஸ்கிருத ஸ்லோகங்களையும் சொல்லிக் கேட்பவர்களை மயங்க வைத்து விடுவார்.]

மற்றொரு கடினமான கேள்வியும் கேட்கப்பட்டது. ''தாளப் பிரமாணங்களைக் கணக்கில் கொள்ளும் போது அஷ்ட தாளம், நவதாளம் என்றுதானே வருகிறது. அர்த்தத் தாளங்கள் உண்டா [அரைத்தாளங்கள்]?'' என்று கேட்டனர் நேர்முகத் தேர்வை நடத்தும் பண்டிதர்கள்.

அதற்கு கணபதியார், ''இதுவரை இல்லை. ஆனால், இப்போது சமீபத்தில் வெளியான 'சாரஸ்வதீய சித்ரகர்ம சாஸ்திரம்' என்ற நூலில் அஷ்டார்த்த தாளம், நவார்த்த தாளம் என்பது பற்றி சொல்லப்பட்டிருக்கிறது'' என்று பதிலளித்தார். பண்டிதர்கள் வியப்பின் உச்சிக்கே சென்று விட்டனர்.

ஏனெனில், அவர் குறிப்பிட்ட அந்த புத்தகம் இரண்டு தினங்களுக்கு முன்புதான் வெளியிடப்பட்டுள்ளது. அதையும் அவர் படித்துத் தேர்ந்திருக்கிறாரே என்றுதான்.

நேர்முகத் தேர்வை முடித்துக் கொண்டு, தனது பணியிடமாகிய பழனி திரும்பியும் விட்டார் கணபதி. தனது வழக்கமான பணிகளைப் பார்க்கத் தொடங்கினார்.

இரண்டு மாதம் கழித்து, தபால்காரர் கொண்டு வந்து கொடுத்த கடிதத்தைப் பார்த்ததுமே, அது தனது வேலைக்கான உத்தரவுதான் என்று தெரிந்து கொண்டு விட்டார். உடனிருந்த கோயில் குருக்கள் ''அது நிச்சயம் உனது வேலைக்கான உத்தரவுதான். பிரிக்காதே. அப்படியே கொடு. சுப்ரமணியர் பாதத்தில் வைத்துப் பூஜை செய்து எடுத்துத் தருகிறேன். அதற்குள் கோயிலை ஒரு பிரதட்சிணம் வைத்து விட்டு வா'' என்றார்.

அதே போல், கோயிலை ஒரு முறை பிரதட்சிணம் செய்து விட்டு வந்ததும், சுவாமி பாதத்தில் வைத்து பூஜிக்கப்பட்டுத் தயாராக இருந்தது பணி நியமன உத்தரவு. பிரித்துப் படித்தார். எல்லையில்லாத மகிழ்ச்சி.

கோயில் அதிகாரியிடம் போய் உத்தரவைக் காட்ட, அவர் பெரிதும் மகிழ்ந்து, ''அருமையான சந்தர்ப்பம், உடனே சேர்ந்து விடு. இன்றே இந்தப் பணியிலிருந்து விடுவிக்கிறேன்'' என்று வாழ்த்தி விடை கொடுத்தார்.

அன்று பணியில் சேர்ந்து, வெறும் கல்பட்டறையாக இருந்த பள்ளியை, கல்லூரியாக மாற்ற அயராது உழைத்து, சென்னைப் பல்கலைக் கழகத்தின் கீழ் இந்தக் கல்லூரியைக் கொண்டு வந்து, அந்தக் கல்லூரியில் பணியாற்றிய 27 வருடங்களில் 54 வருட உழைப்பு உழைத்து, இன்று ஒரு மிகப் பெரும் கல்லூரியாக பரிமளிக்க கணபதி ஸ்தபதியார் மேற்கொண்ட முயற்சிகள் ஏராளம்... ஏராளம்.

எதற்காக அவர் கல்லூரி முதல்வராகப் பணியேற்றதை இத்தனை விவரமாகச் சொல்லப்பட்டது என்றால், 'தந்தையார் முதல்வராக இருந்ததால், அவரது வாரிசாக இவருக்கு இந்தப் பதவி கிடைத்தது' என்று எவரும் தவறாக எண்ணி விடக் கூடாதே என்றுதான்.

தகுதி ஒன்றையே கணக்கில் கொண்டு தகுதியானவருக்கு வழங்கப்பட்ட பதவி அது! அதற்கு சிறிதும் குந்தகம் விளையாமல் பதவிக்காலம் முழுவதும் அந்தக் கல்லூரிக்காகவே பாடுபட்ட பெருந்தகை அவர்!



## கல்லூரி முதல்வராக (II) ....

1952 ம் ஆண்டு மூதறிஞர் திரு. இராஜாஜி அவர்களால் 'அனைவரும் சிற்பக்கலை கற்க வேண்டும், இந்த பாரம்பரியம் மிக்க கலை வருங்கால சந்ததியினருக்குத் தெரியாமல் போய் விடக் கூடாது' என்ற தொலை நோக்குடன் மகாபலிபுரத்தில் உள்ள 'அரசினர் சிற்பம் மற்றும் கட்டிடக் கலைக் கல்லூரி' தொடங்குவதற்கு விதை தூவப்பட்டது என்றால், இந்தியக் கைத்தொழில் வாரியத்தின் முதல் இயக்குநராகப் பொறுப்பேற்றுக் கொண்ட திருமதி கமலாதேவி சட்டோப்பாத்யாயா **(Mrs. Kamala Devi Chatopadyaya)** மற்றும் அவர்களது உதவியாளர் திருமதி ஜாஸ்லின் தமீஜா **(Mrs. Jasleen Dhameja)** ஆகியோரது பெரும் முயற்சியினால் தமிழ்நாட்டிலுள்ள மகாபலிபுரத்தில் 65 சென்ட் நிலத்தில் அரசு சிற்பப் பட்டறை என்ற பெயரில் 1957 மார்ச் மாதம் தொடங்கப்பட்டது.



11.03.1957 அன்று திரு.பக்தவச்சலம் அவர்களால் மாமல்லபுரம் அரசினர் சிற்பக் கலைக்கல்லூரி தொடக்கம். திரு.வைத்தியநாத ஸ்தபதி (முதல்வரிசை, நடு)

அப்போது பெருந்தலைவர் காமராஜர் அவர்கள் முதலமைச்சராக இருந்தார். செங்கல்பட்டு தொகுதியிலிருந்து தேர்ந்தெடுக்கப்பட்டு உணவுத் துறைஅமைச்சராய் இருந்த திரு.பக்தவச்சலம் அவர்களால் திரு.கணபதி ஸ்தபதியின் தந்தையார் திரு.வைத்தியநாத ஸ்தபதியை முதல்வராகக் கொண்டு தொடங்கப்பட்டது.

இதன் பின்னணியில் இருந்து செயல்பட்ட அரசாங்க அதிகாரிகளை இப்போது நினைவு கூர்வது சாலப் பொருந்தும். திருமதி கமலாதேவி சட்டோப்பாத்யாயாவிற்குப் பிறகு இந்தியக் கைத்தொழில் வாரியத்தின் இயக்குநரான திரு. N.K.விநாயகம் B.A. B.L. அவர்கள், அதன் துணை இயக்குநராக இருந்த திரு. D. ஸ்ரீனிவாசன் M.Sc. அவர்கள் மற்றும் மத்தியத் தொழில் துறையின் செயலாளராக இருந்த திரு. T.K. பழனியப்பன் I.A.S. அவர்கள் ஆகிய மூவரும் இக்கல்லூரி தொடங்கப்படுவதற்குப் பெரும் தூண்களாக நின்று செயல்பட்டிருக்கிறார்கள்.

இவர்களைத் தவிர கைவினைஞர் பெருமக்கள் அனைவருமே நன்றி செலுத்த வேண்டிய மேலும் மூவர் யாவரெனில் கம்பன் இலக்கியக் கழகத்தின் தலைவரான கம்பன் அடிப்பொடி திரு.சா.கணேசன் அய்யா அவர்கள், பிரபல எழுத்தாளரும் கல்கி பத்திரிகையின் நிறுவனருமான திரு.கல்கி கிருஷ்ணமூர்த்தி அவர்கள், மற்றும் சிறந்த பேச்சாளரும் கம்பன் இலக்கியக் கழகத்தின் ஆராய்ச்சியாளருமான திரு.பாஸ்கரத் தொண்டைமான் I.A.S. அவர்கள் ஆகியோராகும். அவர்கள் மூவரும் இக்கல்லூரி தொடங்குவதற்கு அரும்பாடு பட்டவர்கள்.



மாமல்லபுரம் அரசினர் சிற்பக் கலைக்கல்லூரி தொடங்கியதும் முதன்முதலில் சேர்க்கப்பட்ட மாணவர்களுடன் முதல்வர் திரு.வைத்தியநாத ஸ்தபதி

கல்லூரி தொடங்கப் பெற்று திரு.வைத்தியநாத ஸ்தபதி அவர்கள் முதல்வராகப் பொறுப்பேற்றுக் கொள்ளும் பொழுது திரு.கணபதி ஸ்தபதி அவர்கள் பழனி தேவஸ்தான ஸ்தபதியாகப் பணியாற்றிக் கொண்டிருந்தார். ஆயினும், தந்தைக்கு உதவும் பொருட்டும், இக்கலை மீதுள்ள தீராத காதலினாலும், அக்கலை மாணவர்களுக்குத் தகுந்த முறையில் சென்றடைய வேண்டுமே என்ற நல்லெண்ணத்தினாலும் அக்கல்லூரியின் நான்கு வருட படிப்பிற்கானப் பாடமுறையை வகுத்துக் கொடுத்தார்.

1957 மார்ச் மாதத்திலிருந்து 1960 ம் ஆண்டு வரை திரு.வைத்தியநாத ஸ்தபதி அவர்கள் முதல்வராகப் பணியாற்றினார். அப்போது அவரது உதவியாளராகப் பணியாற்றியவர் திரு.வேலாயுதம் ஸ்தபதி என்பவர். பின்னர் திரு.குமரேச ஸ்தபதி என்பவர் அப்பதவியை ஏற்றார். [இவரே திரு.கணபதி ஸ்தபதி முதல்வராக ஆனபின்னரும் உதவியாளராக சுமார் 15 ஆண்டுகள் பணியாற்றினார்.] இந்நால்வரும் கல்லூரியின் முன்னேற்றத்திற்காக அரும்பாடு பட்டனர்.

1960 ம் ஆண்டு பக்கவாதம் தாக்கியதால் திரு.வைத்தியநாத ஸ்தபதி அவர்கள் தம் முதல்வர் பணியிலிருந்து விலகினார். அதன் பின்னர் பதவி ஏற்ற திரு.கணபதி ஸ்தபதி அவர்கள், அதாவது 1961 ம் ஆண்டு முதல், சுமார் 27 ஆண்டுகள் அப்பதவியில் சிறப்பாகப் பணியாற்றி 1988ல் ஓய்வு பெற்றார்.

'தமது தந்தை பக்கவாத நோயால் பாதிக்கப்படாமல் இருந்திருந்தால் இன்னும் சிறிது காலம் கல்லூரி முதல்வராகப் பணி புரிந்து மாணவர்களுக்குப் பல விஷயங்கள் கற்றுக் கொடுத்திருப்பாரே' என்ற ஏக்கம் திரு.கணபதி ஸ்தபதி அவர்களுக்கு அதிகம் உண்டு. தந்தையின் நோய் தீர பல முயற்சிகள் செய்தும் பலனளிக்கவில்லை. எனவே, அவர் கல்லூரி முதல்வராகப் பணியேற்றார்.

முதல்மாத ஊதியம் வாங்கியவுடன், வீட்டிற்கு வந்து, தந்தை படுத்திருந்த கட்டிலில் அமர்ந்து, ''நீங்கள் வாங்கியிருக்க வேண்டிய ஊதியம் இது. என் மூலம் உங்களுக்கு அரசாங்கம் தொடர்ந்து வழங்குகிறது. எனவே, உங்கள் பணியைத் தொடர்ந்து செய்வேன்.'' என்று கூறி தந்தையின் கையைப் பற்றி ஊதியக் கவரை அளித்தார்.

ஒரு கை மற்றும் ஒரு பக்க உடம்பு மட்டுமே சுவாதீனமாக இருந்த அவரது தந்தை, கைநடுங்க, வாய் குழற அதைப் பெற்றுக் கொண்டு, தலையணை அடியில் வைத்து விட்டு, மகனைப் பாசத்துடன் தோளிலிருந்து விரல்கள் வரை அன்பாகத் தடவி விட்டார்.

அந்த அன்பான தொடுகையைப்பற்றி திரு.கணபதி ஸ்தபதியாரின் வார்த்தைகளிலேயே கேட்பதுதான் சிறப்பாக இருக்கும். '' எனது தந்தையார் அவரது அறிவு, சாஸ்திர ஞானம், கலைத்திறமை, பாசம் ஆகிய அத்துணை விஷயங்களையும் அந்தத் தொடுகையின் மூலம் எனக்கு மாற்றி விட்டது (transfer) போன்ற உணர்வு. அந்த உணர்வை இன்றும் கூட என்னால் உணர முடிகிறது. ஒரு மின்சாரம் பாய்ந்தது போன்று அதிர்வலைகளை உண்டாக்கிய உணர்வு அது'' என்று கண்கள் பனிக்கக் கூறுவார்.

என்று மாமல்லபுரம் சிற்பக் கலைக் கல்லூரியில் முதல்வராக சேர்ந்தாரோ அன்றிலிருந்து திரு.கணபதி ஸ்தபதி அவர்களின் வாழ்க்கையில் அக்கல்லூரிக்காக உழைப்பது ஒன்றே தனது



மாமல்லபுரம் அரசினர் சிற்பக் கலைக்கல்லூரி

தலையாய குறிக்கோளாகக் கொண்டு விட்டார். வெறும் பட்டறையாக இருந்த அக்கல்லூரியை சென்னைப் பல்கலைக் கழகத்துடன் இணைத்து பட்டப் படிப்பு வழங்கும்படி செய்தார். சுருங்கச் சொன்னால், பட்டறையிலிருந்து பல்கலைக் கழகத்திற்கு மாற்றியவர்! வெறும் 65 சென்ட் நிலத்தில் தொடங்கப்பட்டு இவர் முதல்வராக இருக்கும் போதே கல்லூரி பெருமளவு விஸ்தீரணம் செய்யப்பட்டு இன்று சுமார் 26 ஏக்கர் பரப்பளவில் அழகு மிளிர அமைந்துள்ளது.

சிற்பக் கலையில் சான்றிதழ் மட்டுமே அளிக்கக் கூடிய வகையில் சிறியதொரு பட்டறையாகத் தொடங்கப்பட்டு, பின்னர் சென்னை பல்கலைக் கழகத்தின் கீழ் 4 வருட பட்டப்படிப்பே படிக்கக் கூடிய வகையில் உயர்ந்தது. இதற்குப் பெருமளவு திரு. கணபதி ஸ்தபதிக்கு உதவியவர் அப்போது சென்னைப் பல்கலைக்கழகத்தின் துணைவேந்தராய் இருந்த பேராசிரியர் திரு.ஞானம் அவர்கள். இவர் நமது பாரதத்தின் பாரம்பரிய கலைகளில் பெரும் ஈடுபாடு கொண்டவர். அவரது பெரும் ஒத்துழைப்பால்தான் சென்னைப் பல்கலைக் கழகத்தின் கீழ் பட்டப்படிப்பு அளிக்கும் வசதி செய்யப்பட்டது என்று ஸ்தபதி கூறுவார்கள்.



மாமல்லபுரம் அரசினர் சிற்பக் கலைக் கல்லூரியில் திரு.கணபதி ஸ்தபதி

பல்வேறு துறைகளிலும் விற்பன்னர்களாய் இருந்த பல பெரியோர்களையும், பேராசிரியர்களையும் அழைத்துத் தமது கல்லூரியில் மாணவர்களுக்காக சொற்பொழிவு ஆற்றச் செய்வார் திரு.கணபதி ஸ்தபதி அவர்கள்.

அவ்வாறு அழைக்கப் பட்டவர்களில் குறிப்பிடத் தக்கவர்கள் பேராசிரியர் K.R. ஸ்ரீனிவாசன் அவர்கள் [இயக்குநர்: இந்தியத் தொல்லியல் துறை], பேராசிரியர் K.V. சுந்தர் இராஜன் அவர்கள்[தலைமை கட்டிடக் கலைஞர், இந்தியத் தொல்லியல் துறை], டாக்டர் K.K.A. வெங்கடாச்சாரி அவர்கள் [ஆகமப் பண்டிதர்], டாக்டர் S.P. சபாரத்தினம் அவர்கள் [ஆகமப் பண்டிதர்], பேராசிரியர் K.V. இராமன் அவர்கள் [சென்னைப் பல்கலைக் கழகத்தின் சரித்திரம் மற்றும் தொல்லியல் துறையின் தலைவர்], பேராசிரியர் R. குருமூர்த்தி அவர்கள்[சரித்திரப் பேராசிரியர், சென்னைப் பல்கலைக் கழகம்], டாக்டர் R. நாகசாமி அவர்கள் [இயக்குநர் : தொல்லியல் துறை, தமிழ்நாடு], திரு.நடன காசிநாதன் அவர்கள் [இயக்குநர் : தொல்லியல் துறை, தமிழ்நாடு], டாக்டர் பத்மா சுப்ரமணியம் அவர்கள் [பிரபல பரதநாட்டிய விற்பன்னர்], திருமதி லீலா கணபதி அவர்கள் [சரித்திரம் மற்றும் நுண்கலை அறிஞர்] போன்றவர்கள் குறிப்பிடத் தக்கவர்கள்.

இவர்கள் கல்லூரிக்கு அடிக்கடி வந்து மாணவர்களுக்காக ஆற்றிய சொற்பொழிவுகள் அவர்களுக்குப் பெரிதும் பயனுடையதாக இருந்தது. இப்பெருமக்களே அக்கல்லூரிக்கு வந்து உரையாற்றுவதில் பெருமிதமும் மகிழ்ச்சியும் அடைந்தனர் என்றால் மிகையாகாது.

பேராசிரியர் K.R. ஸ்ரீனிவாசன் அவர்கள் ஸ்தபதி எழுதிய *'சிற்பச் செந்நூல்'* படித்து விட்டு அவரை மகிழ்சியுடன் பாராட்டினார். ''நாங்கள் தொல்லியல் துறையில் பணிபுரிந்தாலும் இந்த நூலைப் படித்ததால்தான் எங்களுக்கே பல செய்திகள் புரிகின்றன'' என்று ஸ்தபதியை மனமார பாராட்டினார். அவரது பதவிக்காலம் முடிந்து வீட்டில் இருக்கும் போது அவரை மரியாதை நிமித்தம் சென்று பார்த்தார் ஸ்தபதி. அன்புடன் அவரை வரவேற்ற திரு.ஸ்ரீனிவாசன் அவர்கள் கல்லூரி தொடர்பாக ஸ்தபதிக்கு ஏதேனும் உதவி வேண்டுமா என்று கேட்டார்.

அதற்கு ஸ்தபதி அவர்களும், ஒரு குறிப்பிட்ட சாஸ்திரம் தொடர்பாக, ''ஏதேனும் புத்தகம் உள்ளதா?'' என்று வினவினார்.

''ஒரே ஒரு புத்தகம்தான் உள்ளது கணபதி! இராமானுஜர் எழுதிய பாரமேஸ்வர சம்ஹிதா என்ற நூல். ஆனால், அது கிரந்த மொழியில் உள்ளதே. உனக்கு கிரந்தம் தெரியுமா?''



மாமல்லபுரம் அரசினர் சிற்பக் கலைக்கல்லூரியில் மாணவர்களுடன் மாணவராக ஆசிரியர்

''தெரியும்!'' என்று ஸ்தபதி கூறியதும்உடனடியாக அப்புத்தகத்தை அவரிடம் அளித்தார்.

இவ்விதம் கல்லூரிக்குத் தேவையான புத்தகங்களை எங்கு கிடைத்தாலும் சேகரித்து விடுவார். அதற்கு உறுதுணையாக திரு.ஸ்ரீனிவாசனைப் போல் பலர் உதவியுள்ளனர்.

இதைத்தவிர மாணவர்களை அழைத்துக் கொண்டு சரித்திரப் புகழ் பெற்ற இடங்களுக்கு கல்விச் சுற்றுலா செல்வார் ஸ்தபதி. தஞ்சை பிரகதீஸ்வரர் ஆலயம், அஜந்தா, எல்லோரா குகை ஓவியங்கள், காஞ்சி கைலாசநாதர் கோவில் போன்ற பல இடங்களுக்கு மாணவர்களை அழைத்துச் சென்று அங்குள்ள சிற்பங்களையும் கோவில் கோபுரம் மற்றும் கட்டுமானப் பணிகள் பற்றியும் விளக்கிக் கூறுவார்.

மாணவர்கள் சிற்பக்கலையையும், கட்டிடக்கலையை மட்டும் படித்தால் போதாது, மொழியிலும் தேர்ச்சி பெற வேண்டும் என்பதற்காக ஆங்கிலம் மற்றும் தமிழ் மொழியைக் கற்பிப்பதற்காக இரண்டு ஆசிரியர்களை அரசாங்கத்தின் ஒப்புதல் பேரில் நியமித்தார்.

சிற்பம் மற்றும் வாஸ்து சாஸ்திரங்கள் சமஸ்கிருத மொழியில் இருந்ததால் மாணவர்கள் புரிந்து கொள்வதற்கு உதவியாய் இருப்பதற்காக சம்ஸ்கிருதம் போதிக்க ஒரு பண்டிதரையும் நியமித்தார். அவர்தான் திரு.ஸ்ரீனிவாச இராகவன் அவர்கள். இவர் ஓர் எளிமையான மனிதர். சம்ஸ்கிருத மொழியில் விற்பன்னர்.

அவரை நியமிக்கும் போது நடந்த நேர்முகத் தேர்வில் ஸ்தபதி அவரிடம், ''சம்ஸ்கிருத மொழி இரண்டு வகையாகப் பிரிக்கலாம். இலக்கிய சம்ஸ்கிருதம் (Literary Sanskrit) மற்றும் தொழில் நுட்ப சம்ஸ்கிருதம் (Technical Sanskrit). நீங்கள் இலக்கிய சம்ஸ்கிருதத்தில் விற்பன்னர். ஆனால், எங்களது சிற்ப, வாஸ்து சாஸ்திரங்கள் தொழில் நுட்ப சம்ஸ்கிருதத்தில் இருக்கும். அதை உங்களால் பயிற்றுவிப்பது கடினமாக இருக்குமே'' என்று கேட்டார்.



மாமல்லபுரம் அரசினர் சிற்பக் கலைக்கல்லூரிக்கு திரு.சீனிவாச இராகவன் மற்றும் டாக்டர் பத்மா சுப்ரமணியம்ஆகியோர் வருகை தந்தபோது

அதற்கு அவர், ''ஸ்தபதி! நீங்கள் கூறியபடி எனக்குத் தொழில்நுட்ப சம்ஸ்கிருதம் தெரியாதுதான். ஆனால், அதை உங்களிடம் கற்றுக் கொள்கிறேன். முதலில் மாணவர்களுக்கு எழுத்துப் பயிற்சி தருகிறேன். அதற்குள் உங்களிடம் கற்றுக் கொண்டு விடுவேன்.'' என்று கூறினார்.

'மிகப் பெரிய சம்ஸ்கிருத வித்வான். எவ்வளவு எளிமையாக தெரியாததைக் கற்றுக் கொள்கிறேன் என்கிறார். எத்துணை உயரிய பண்பு!' என்று ஸ்தபதியின் மதிப்பில் உயர்ந்து போனார் திரு.ஸ்ரீனிவாச இராகவன் அவர்கள். அவரது உண்மையையும், எளிமையையும் கண்டு மயங்கி அவரிடம் தொடங்கிய அவர்களது நட்பு பல வருடங்கள் நீடித்தது.

இரு குடும்பங்களும் நட்பு முறையில் இணைந்து, அவரது குழந்கைள் ஸ்தபதியாரின் வீட்டிலேயே வளரத் தொடங்கினர். இன்று வரை திரு.ஸ்ரீனிவாச இராகவன் அவர்களின் புதல்விகள் மூவரும் மாதம் இரண்டு முறையாவது ஸ்தபதியாரையும் அவரது துணைவியாரையும் வீட்டிற்கே வந்து பார்த்து, அன்புடன் பேசி மகிழ்ந்து, உணவருந்தி விட்டுதான் செல்வர். இவர்களும் பெற்ற மகள்களைப் போலவே பாசத்தைக் கொட்டுவர். திரு.ஸ்ரீனிவாச இராகவன் மறைந்து விட்டாலும், அவரது குடும்பத்தாருடன் பல வருடங்களாகத் தொடரும் பாசப் பிணைப்பு அது!

இவ்வாறு அலுவலகத் தொடர்பாகவோ, அல்லது நட்புத் தொடர்பாகவோ எவரிடம் பழகினாலும் ஆத்மார்த்தமான அன்போடு, பாசத்தோடு பழகுவது திரு.கணபதி ஸ்தபதியாரின் தனிப்பண்பு.

1973ம் ஆண்டு முதல் தொழில் நுட்பக் கல்வித் துறையின் (Directorate of Technical Eduaction) கல்லூரி இணைக்கப்பட்டது. [முதலில் தொழில் மற்றும் வணிகத் துறையுடன், Department of Industries & Commerce இணைக்கப்பட்டிருந்தது.] அதன் பிறகு, ஸ்தபதியார் பணியாற்றிய 1988 ம் ஆண்டு வரை அக்கல்லூரிக்குத்

தேவையான அனைத்து வசதிகளையும் பல்வேறு பெருமக்கள் உதவியுள்ளனர். அவர்களில் குறிப்பிடத் தகுந்தவர்கள் பொறியாளர் திரு. P. சிவலிங்கம் [தலைமைப் பொறி யாளர், தமிழ்நாடு பொதுப்பணித்துறை], திரு.V. சீனிவாசன், டாக்டர் V.C. குழந்தைசாமி, திரு.S. வையாபுரி [இவர்கள் மூவரும் தொழில்நுட்பக் கல்வித் துறையின் இயக்குநர்களாக இருந்தவர்கள்] மற்றும் திரு. V. இராமமூர்த்தி [இணை இயக்குநர், Planning & Development, தொழில் நுட்பக் கல்வி] ஆகியோராவர்.




மாமல்லபுரம் அரசினர் சிற்பக் கலைக்கல்லூரிக்கு
ஜனாதிபதி திரு.ஜைல்சிங் வருகை தந்தபோது

கல்லூரிக்குத் தேவையான எல்லாவித வசதிகளையும் ஸ்தபதி கேட்டவுடன் உடனடியாக நிறைவேற்றியதில்

இவர்களுக்குப் பெரும்பங்கு உண்டு. அதைப் போல், அரசாங்கம் கல்லூரிக்கு ஒதுக்கீடு செய்யும் உதவி அனைத்தை யும் தவறாமல் உபயோகித்துக் கொண்டு கல்லூரியை முன்னுக்குக் கொண்டு வந்ததில் ஸ்தபதியாருக்கும் பெரும்பங்கு உண்டு.

திரு.இராமமூர்த்தி அவர்களோடு திரு.கணபதி ஸ்தபதியாரது நட்பு பற்றி தனியாக ஓர் அத்தியாயத்தில் விளக்கப்பட்டுள்ளது.

இவர்களைத் தவிர அப்போது வெவ்வேறு காலகட்டங்களில் தமிழகத்தை ஆண்ட முதல்வர்கள் டாக்டர் மு.கருணாநிதி, டாக்டர் எம்.ஜி.இராமச்சந்திரன் மற்றும் கல்விஅமைச்சராய் இருந்த திரு.அரங்கநாயகம் அவர்களும் கல்லூரி முன்னேற்றத்திற்குப் பெரும் பங்கு வகிக்கின்றனர். அரசாங்கத்திற்குத் தேவைப்படும் கட்டிட மற்றும் சிற்பப் பணிகளைத் திரு.கணபதி ஸ்தபதி அவர்களின் தலைமையில் கல்லூரி மாணவர்களைக் கொண்டே முடித்துக் கொண்டனர்.

இதனால், ஸ்தபதியாருக்கும் மாபெரும் கலைப்பணிகளை நாட்டிற்கு அளித்த பெருமை, மாணவர்களுக்கும் செய்முறைப் பயிற்சி ஆகிய இரட்டை நன்மை விளைந்தது. இதற்குக் காரணமாக இருந்தவர்கள் கலை ஆர்வம் மிகுந்த தமிழக முதல்வர்கள்தான்.

அவர்களது கலை ஆர்வத்தின் விளைவாகவும், ஸ்தபதியின் கைவண்ணத்தினாலும், மாணவர்களின் திறமையினாலும் உருவான கலைப் பொக்கிஷங்கள் பல.

சென்னையில் வள்ளுவர் கோட்டம், அண்ணாநகர் அலங்கார வளைவு, பூம்புகார் கலைக்கூடமும் அங்குள்ள அழகுமிகு மாதவி சிற்பம், சிலப்பதிகாரத்தை முன்நிறுத்தும் புடைப்புச் சிற்பங்கள், தஞ்சையில் தமிழ்ப் பல்கலைக் கழகத்தின் நிர்வாகக் கட்டிடம், வட்ட வடிவமான நூலகக் கட்டிடம், உலகத்தமிழ் மாநாட்டை ஒட்டி மதுரை மாநகரில் எட்டு திக்கிலும் அமைக்கப் பெற்ற அழகிய தோரண வாயில்கள், மதுரை தமுக்கம் மைதானத்தில் நிறுவப் பெற்ற தமிழ்த்தாய்ச் சிலை, தலைநகர் டில்லியில் கட்டப்பட்ட சுவாமி நாத ஸ்வாமி திருக்கோவில் போன்றவை சிறந்த உதாரணங் களாகும்.

தற்போது கல்லூரியில் நான்கு வருடப் பட்டப் படிப்பாக பாரம்பரிய கட்டிடக் கலையும் (B.Tech in Traditional Architecture), மூன்று வருடப் படிப்பாக நுண்கலைப் பட்டப்படிப்பும் (B.F.A. - Bachelor in Fine Arts in stone, metal, wood and stucco sculpture) வழங்கப்படுகிறது. பொறியியல் கல்லூரிகளில் வழங்கப்படும் கட்டிடக் கலைப் பட்டப்படிப்பிற்கு (B.Arch) ஈடாக சிற்பக் கலைக்கல்லூரியில் வழங்கப்படும் பட்டப்படிப்பும் மதிப்பு வாய்ந்ததாகக் கருதப்படுகிறது.

வெறும் பட்டறையாகத் தொடங்கப் பெற்ற அக்கல்லூரியை இன்று வானளாவ உயர்த்திய பெருமை திரு.கணபதி ஸ்தபதி அவர்களையே சாரும் என்று ஐயமின்றிக் கூறிடலாம் அல்லவா?

## திரு. ஆர். வெங்கட்ராமன் அவர்களுடன்...

திரு. கணபதி ஸ்தபதி அவர்களின் சிற்பத்திறமை பற்றி தமிழகத்தில் தெரிந்திருந்தாலும் இந்தியத் தலைநகர் புதுடில்லியில் பணி ஒன்றும் செய்யவில்லையே என்று எண்ணி, அக்கருத்தைக் கல்லூரி நண்பர்களிடம் ஒருநாள் பகிர்ந்து கொண்டார். அப்போது அவர் சிற்பக்கலைக் கல்லூரி முதல்வர்.

சில நாட்களுக்குப் பின்னர், சென்னைக்கு இந்து அறநிலையத் துறை அலுவலகத்திற்கு, கல்லூரி தொடர்பான பணி காரணமாக சென்றிருந்தார். அப்போது திரு.பக்தவச்சலம் அவர்கள் தமிழக முதல்வர். திரு.சாரங்கபாணி முதலியார் என்பவர் இந்து அறநிலையத் துறை ஆணையாளராக இருந்தார்.

ஸ்தபதி அவரைக் காண்பதற்காக அவரது அறையில் நுழைந்ததும் அவர், ''வாங்க ஸ்தபதி! இப்போதுதான் உங்களைப் பற்றி நினைத்துக் கொண்டிருந்தோம். தலைநகர் டில்லியில் ஒரு முருகன் கோயில் கட்ட வேண்டுமாம். முதலமைச்சர் உங்களிடம் இது பற்றிக் கேட்டுக் கொண்டு தகவல் அனுப்பச் சொல்லி இருக்கிறார். பணியை ஏற்றுக் கொள்ளச் சம்மதமா?'' என்று கேட்டார்.

இதைக் கேட்டதும் ஸ்தபதி அவர்களின் உள்ளத்திலே ஆனந்தச் சிலிர்ப்பு. 'இது பற்றித்தானே சமீபத்தில் பேசிக் கொண்டிருந்தோம். அந்த முருகனே கேட்டு விட்டு அதற்கான வாய்ப்பினைத் தந்து விட்டாரோ' என்று மனம் மகிழ்ந்தார். உடனே அவரது சம்மதத்தினைத் தெரிவித்து விட்டார்.

புது டில்லி வாழ் தமிழர்கள் அனைவரும் ஒரு சங்கம் அமைத்து, அங்கு தமிழ்க் கடவுள் முருகனுக்கு ஓர் ஆலயம் அமைக்க நினைத்து, அப்போது மத்திய இரயில்வே அமைச்சராக இருந்த திரு.ஓ.வி.அளகேசன் அவர்களை அணுகி அவரது ஆலோசனையின் பேரில் தமிழக முதல்வர் திரு.பக்தவச்சலம் அவர்களைக் கேட்டனர். அதன் விளைவுதான் ஸ்தபதி புதுடில்லி ஆலயத்தைக் கட்டித் தருவதென்று முடிவானது.

அதன்படி சில தினங்களில் திரு.கணபதி ஸ்தபதி அவர்கள் இரயில் மூலம் புதுடில்லி புறப்பட்டுச் சென்றார். விடியற்காலையில் அங்கு இறங்கிய அவருக்குப் பெரும் வியப்பு. காரணம்! ஆலயத் திருப்பணியில் பங்கேற்கும் அனைவரும் ஸ்தபதியை வரவேற்க இரயில் நிலையம் வந்திருந்தனர். அதுவும் எப்படி தெரியுமா? மேளதாளம் மற்றும் மாலை சகிதமாக! ஸ்தபதிக்கு மகிழ்ச்சியும் வியப்பும் கலந்த உணர்வு.

அங்கிருந்து ஆலயம் அமையவிருக்கும் இராம கிருஷ்ணாபுரம் சென்று இடத்தைப் பார்வையிட்ட ஸ்தபதி, உடனடியாக அதற்கான வரைபடங்களைத் தயாரிப்பதற்கான ஆயத்தங்களைச் செய்யத் தொடங்கினார். வரைபடம் தயாராக இருப்பினும், புதுடில்லியின் தலைமை கட்டிட நிபுணர் **(Chief Architect)** திரு. ஜோக்ளேக்கர் அவர்களின் அனுமதி பெற்ற பின்புதான் கோவில் பணி தொடங்க முடியும். ஆனால், அவர் பெரும் கோபக்காரர் என்றும், அவரிடம் பேசுவதற்கே அனைவரும் பயப்படுவர் என்றும் திருப்பணி உறுப்பினர்கள் கூறினர்.

ஸ்தபதி ‘‘எவ்வளவு கோப்க்காரராய் இருந்தால் என்ன, நமக்கு வேண்டியது கட்டிட அனுமதிதானே, நேர்மையான

முறையில்தான் செல்கிறோம்? ஒரு வில்லங்கமும் வராது, போகலாம்'' என்று கூறி அவர் அறைக்குள் நுழைந்தனர்.

எதிர்பார்த்தபடியே ''என்ன?'' என்று மிகவும் கடுமையாகக் கேட்டார் திரு.ஜோக்ளேக்கர். ஸ்தபதி உடனே ''இந்த வரைபடத்தைப் பார்வையிட்டு அனுமதி வழங்க வேண்டும்''என்று அவர் மேஜையில் வரைபடத்தை வைத்தார். வரைபடத்தை சற்று நேரம் உற்றுப் பார்த்த அவர் கூறிய முதல்வார்த்தை, ''மிகவும் அருமை. இது போன்ற ஓர் அழகான, நேர்த்தியான வரைபடத்தை இதுவரை பார்த்ததேயில்லை.'' என்று கூறி, மேலும் சில தொழில் நுட்ப சந்தேகங்களைக் கேட்டு விட்டு, உடனே அனுமதி அளித்தும் விட்டார். அனைவருக்கும் பெரும் ஆச்சரியம்.

ஸ்தபதி அவர்கள் ''எதையும் திருந்தச் செய்து விட்டால் திருத்தங்களுக்கு இடமே இல்லையே'' என்பார். 'செய்வனத் திருந்தச் செய்' என்பது அவரது குறிக்கோள்.

அப்படி உருவானதுதான் இப்போது புதுடில்லியில் புகழ் பெற்று விளங்கும் மலைமந்திர் என்றழைக்கப்படும் சுவாமிநாத சுவாமி ஆலயம்.

அந்த ஆலயம் கட்ட முடிவெடுத்ததும் திரு.ஓ.வி. அளகேசன் அவர்களின் வேண்டுகோளின்படி ஆலயத் திருப்பணி அன்பர்கள் திருப்பனந்தாள் ஆதீனம் அவர்களைச் சென்று பார்த்தனர். திரு.ஆதீனம் அவர்கள் இவ்வன்பர்களிடம் திருச்செந்தூர் முருகன் சிலையைச் செய்திட்ட ஸ்தபதி அந்த நாளில் கல் எடுத்துச் செய்ததின் பிறிதொரு பகுதி, பாதிக்கல், தாமிரபரணி ஆற்றுப் பள்ளத்தில் இருப்தாகவும், அந்தப்

பாறையை எடுத்து வந்து முருகன் உருவச்சிலையைச் செய்வதற்கு உபயோகப்படுத்திக் கொள்ளும்படியும் கூறினார்.

அவரது யோசனையை ஏற்று, தாமிரபரணி ஆற்றில் அப்பாறையைக் கண்டுபிடித்து, ஸ்தபதி அவர்களின் மகாபலிபுர இல்லத்திலே வைத்து, சிலையைச் செதுக்கும் பணி தொடங்கப்பட்டது. இரண்டு வரிகளில் இச்செய்தியை சுலபமாக எழுதி விட்டாலும் இப்பணியை முடிக்க மேற்கொண்ட சிரமங்களும், நேரமும் எழுத்தில் வடிக்க முடியாதவை.

ஆலயம் அமைக்கும் பணியை ஆரம்பித்து விட்டாலும், நிதிப் பற்றாக்குறை காரணமாகப் பணியை நிறுத்த வேண்டிய நிலை ஏற்பட்டது. அப்போது ஸ்தபதி அவர்கள் காஞ்சி மடாதிபதி திரு.சந்திரசேகரேந்திர சரஸ்வதி சுவாமிகளைச் [பரமாச்சாரியார்] சென்று பார்த்து, ஆலயத்தின் தற்போதைய நிதித் தட்டுப்பாடு பற்றி விளக்கினார். சுவாமிகள் அப்போது மாமல்லபுரத்தில் உள்ள பஞ்ச ரதங்கள் என்ற கற்கோவில்கள் உள்ள இடத்தில் முகாமிட்டிருந்தார்.

சுவாமிகள் உடனே, திரு.ஆர்.வெங்கட்ராமன் அவர்களைச் சந்தித்துப் பேசி காஞ்சி மடத்திற்கு அழைத்து வந்தால், அவருடன் பேசி வேண்டிய ஏற்பாடுகள் செய்வதாகக் கூறினார். அப்போது திரு.ஆர்.வெங்கட்ராமன் அவர்கள் மத்திய அரசாங்கத்தில் தொழில் அமைச்சராக இருந்தார். தொழிலதிபர்கள் பலரை அவருக்குத் தெரியும். 'அவர்களை அணுகினால் ஆலயத்திற்கு நன்கொடை வசூலித்துக் கொள்ளலாமே' என்று சுவாமிகள் நினைத்தார் போலும்.

அதன்படி திரு.ஸ்தபதி அவர்கள் திரு.ஆர்.வெங்கட்ராமன் அவர்களைச் சந்திக்கச் சென்றார். அமைச்சராக இருந்தவர். அதுவும் அரசியலில் தீவிரமாக ஈடுபட்டிருந்தவர். அரசியல் மற்றும் அமைச்சர் பணியின் பளு காரணமாக அவர் அதுவரை காஞ்சி பரமாச்சாரிய சுவாமிகளைச் சந்தித்ததே இல்லை. எனவே, முதல் முதலில் அவரைப் பார்க்கப் போகும் போது எப்படிப் போக வேண்டும் என்பது உள்பட ஸ்தபதியைக் கேட்டுத் தெரிந்து கொண்டார் திரு.ஆர்.வெங்கட்ராமன் அவர்கள். அவரது எளிமையை ஸ்தபதி அவர்கள் பெரிதும் பாராட்டுவார்.

ஸ்தபதி எப்போது திரு.ஆர். வெங்கட்ராமன் அவர்கள் இல்லத்திற்குச் சென்றாலும் வாசல் வரை வந்து ஸ்தபதியை வரவேற்பார். அவரும் அவரது துணைவியார் திருமதி ஜானகி அம்மையாரும் ஸ்தபதியை அன்புடன் உபசரித்து உணவருந்தச் செய்வார்கள். ‘அவர்கள் இல்லத்தில் தயாராகும் உணவு மிகவும் சுவையாக இருக்கும்’ என்று ஸ்தபதி அவர்கள் கூறுவார்.



சிலை முகூர்த்தம் ஸ்தபதி அவர்களால் நடத்தப்படுகிறது. (உடன் திரு.ஜோக்ளேக்கர் அவர்களும் இருக்கிறார்.)

திரு. ஆர்.வெங்கட்ராமன் அவர்களும் ஸ்தபதி அவர்களும் பரமாச்சாரியார் அவர்களைச் சந்திப்பதற்குக் காஞ்சிக்கு விரைந்தனர். சாஷ்டாங்கமாக

நமஸ்கரித்த அவர்களை ஆசிர்வதித்த சுவாமிகள், திரு.ஆர். வெங்கட்ராமன் அவர்களிடம் ஆலயத்தின் நிதி நிலமையை எடுத்துச் சொல்லி, நிதிக்கு நன்கொடை யாளர்களை ஏற்பாடு செய்து தரும்படி கூறினார். 'அதன்படி செய்வதாக' வாக்களித்தார் திரு.வெங்கட்ராமன் அவர்கள் .

பிறகு, அவர் ஸ்தபதியிடம் காஞ்சி சங்கராச்சாரியார் அவர்களைக் காண்பதற்குத் தன்னை அழைத்து வந்தமைக்காக நன்றி கூறினார். இது போன்ற அவரது பண்புகளை ஸ்தபதி அவர்கள் மிகவும் பாராட்டிப் பேசுவார்.

வாக்களித்தபடியே நன்கொடையாளர்களை ஏற்பாடு செய்தும் கொடுத் தார். நிதி வசூலானதும் மறுபடி ஆலயத் திருப்பணி தொடங்கியது. ஒவ்வொரு கட்டத்திலும் திரு.ஆர். வெங்கட்ராமன் அவர்கள் ஆற்றிய பங்கு மகத்தானது என்பார் ஸ்தபதிஅவர்கள்.

ஆலயத்தின் கட்டுமானப் பணி புதுடெல்லியில் நடைபெற்றுக் கொண்டிருக்கும் போதே, மூலவர் விக்ரகத்தை செதுக்கும் பணி மகாபலிபுரத்தில் திரு.கணபதி ஸ்தபதியாரின் இல்லத்தில் நடைபெற்று வந்தது. திருப்பனந்தாள் ஆதீனம் கூறி தாமிரபரணி ஆற்றிலிருந்து பாறையை எடுத்து வந்து செதுக்கத் தொடங்கினாலும், ஸ்தபதி அவர்களுக்கு அந்தப் பாறையின் மீது முழு திருப்தி ஏற்படவில்லை.

சிலைகள் செய்யப் பயன்படும் கற்களைப் பற்றி ஒரு முக்கியமான தகவலை வாசகர்கள் அறிந்து கொள்ள வேண்டியது இங்கே அவசியமாகிறது. சிற்பிகள் சிலை செய்வதற்கு முன்

அக்கல்லைத் தட்டிப் பார்த்து வரும் ஓசையை வைத்தே அது ஆண்கல்லா, பெண்கல்லா, அல்லது நபும்சக் கல்லா [அலிக் கல்] என்று கண்டுபிடித்து விடுவார்கள். ஆண்கல் எனில் ஆண் சிலைகள் செய்யவும், பெண் கல் எனில் பெண் சிலைகள் செய்யவும், அலிக்கல் எனில் மண்டபம் கட்டுவது போன்ற வேறு பணிகளுக்கும் பயன்படுத்திக் கொள்வார்கள். ஆண்கல் எனில் உலோகத்தை அடித்தது போல கணீரென்று இருக்கும்.

ஸ்தபதி புதுடில்லி சுவாமிநாத சுவாமி திருக்கோயிலின் மூலவரான சுவாமிநாதரை [தமிழகத்திலுள்ள சுவாமி மலை சுவாமிநாத சுவாமியைப் போன்ற அமைப்புடன் செய்ய வேண்டும் என்ற எண்ணத்துடன் செய்யப்பட்டது] செதுக்கத் தொடங்கினதும் அப்பாறையை சோதித்துப் பார்த்ததில் அதிலிருந்து எந்த விதமான சப்தமும் வரவில்லை. எனவே, அது அலிக்கல் என்று தீர்மானித்தார். ஆனால் அக்கல்லில் ஆண்கடவுளான முருகனை எப்படிச் செதுக்குவது என்று ஸ்தபதி அவர்களுக்குப் பெரும் குழப்பம்.

இதனை திரு.ஆர். வெங்கட்ராமனிடம் கூறும் போது அவர், 'திருப்பனந்தாள் ஆதீனம் சொல்லி எடுத்து வந்த கல் இது. அவர் கூறினால் சரியாகத்தான் இருக்கும். எனவே, அதிலேயே செய்யும்படி' பணித்தார்.

ஸ்தபதிக்கு அக்கல்லில் முருகன் சிலையை வடிப்பதற்கு சிறிது கூட விருப்பம் இல்லை. வேறு வழியின்றி, தினமும் சுவாமிநாதனை வழிபட்டு விட்டு செதுக்கத் தொடங்குவார். அநேகமாக எல்லாப் பணிகளும் முடிந்து விட்ட நிலையில்,

இன்னும் இரண்டு நாட்கள் வேலைதான் பாக்கி, 'சிலையை புது டில்லி எடுத்துச் சென்று விடலாம்' என்று எண்ணி இருந்த நிலையில், அன்று காலை சிலைப்பணியை ஸ்தபதி அவர்கள் தொடங்கி உளியை சிலையின் மீது தட்டியதுதான் தாமதம், எங்கிருந்துதான் வந்ததோ அந்த ஒலி கணீரென்று! சிலையிலிருந்து எழும்பிய அந்த உலோக ஒலியைக் கேட்டு ஸ்தபதியைச் சுற்றி பணி செய்து கொண்டிருந்த அனைவரும் ஓடி வந்து விட்டனர்.

'இது என்ன அதிசயம்! இத்தனை நாள் வராத ஒலி திடீரென்று எப்படி வருகிறது' என்று எல்லோருக்கும் மிகவும் ஆச்சரியம். காட்டுத்தீ போல விஷயம் பரவி அண்டை அயலார் அனைவரும் அக்காட்சியைக் காண, அந்த தெய்வீக ஒலியைக் கேட்க ஓடி வந்து விட்டனர். இந்நாள் வரை இந்த நிகழ்ச்சியை ஓர் அதிசயமான, அமானுஷ்யமான சக்திதான் என்பார் ஸ்தபதி.

இந்தத் தகவலை காஞ்சி பரமாச்சாரியாரிடம் ஓடோடிச் சென்று தெரிவித்தார் ஸ்தபதி. உடனே அவர் அச்சிலையை பார்க்க விரும்புவதாகத் தெரிவித்தார். ஸ்தபதியும் அதற்கான ஏற்பாடுகளைச் செய்வதாகக் கூறி விட்டு இரண்டொரு நாட்களில் சிலையை முடித்து காஞ்சிக்கு எடுத்துக் கொண்டு சென்று விட்டார்.

சிலையைக் காஞ்சி மடத்தில் வைத்ததும், சுவாமிகள் உடனே விபூதி கொண்டு வரச் சொன்னார். விபூதி எடுத்து வந்தனர் மடத்து ஊழியர்கள். [ அந்த விபூதி, சுவாமி மலையின் சுவாமிநாத சுவாமி விபூதி என்பது குறிப்பிடத்தக்கது. ] விபூதியை வாங்கி, அந்த

ஆறு அடி முருகன் சிலைக்குத் தன் கையால் அபிஷேகம் செய்யத் தொடங்கினார் சுவாமிகள். சுவாமி மலை முருகனுக்கு விபூதி



சுவாமிநாத ஸ்வாமி சிலை காஞ்சி பரமாச்சாரியார் முன்னிலையில்

அபிஷேகம் செய்தால், முகத்தில் விபூதி பட்டதும் சுவாமி சிரிப்பது போல் தெரியும்.



சுவாமிநாத ஸ்வாமியுடன் ஸ்தபதி

அதே போல், இந்த முருகனுக்கும் விபூதி அபிஷேகம் முடிந்ததும் முருகன் சிரிப்பது போல் முகம் மாறியது. அதைப் பார்த்து மிகவும் ரசித்த சுவாமிகள் ஸ்தபதியைப் பாராட்டி ஆசி வழங்கினார். முருகன் சிலையைத் தொட்டுத் தடவிப் பார்த்து மகிழ்ந்த சுவாமிகள் முருகன் கழுத்தில் செதுக்கப்பட்டிருந்த உத்திராட்ச மாலையை மிகவும் ரசித்தார்.

ஊரில் தண்டோரா போட்டு 'அச்சிலை ஒரு மண்டபத்தில் மூன்று நாட்கள் வைக்கப்பட்டிருக்கும். புதுடில்லி போவதற்கு முன் முருகனைத் தரிசனம் செய்து கொள்பவர்கள் வரலாம்' என்று அனைவருக்கும் தெரிவிக்கும்படி கூறினார் சுவாமிகள்.

அதன்படி அந்த முருகன் மூன்று நாட்கள் காஞ்சி மக்களுக்கு அருள் பாலித்து விட்டுத்தான் புதுடில்லி சென்றான். இதில் இன்னொரு விந்தை என்னவென்றால், பொதுவாக சிலை செய்யும் திருப்பணி முடிந்ததும் அது நிறுவப்பட வேண்டிய கோவிலுக்கு எடுத்துச் சென்று கும்பாபிஷேகம் என்னும் சடங்கைச் செய்து, அந்தப் புனித நீரால் சிலைக்கு அபிஷேகம் செய்யப்பட்ட உடன்தான், சிலை சாநித்தியம் பெற்று வழிபடும் கடவுளாக மாறுகிறது. அதுவரை அது வெறும் சிலைதான். கும்பாபிஷேகத்திற்கு முந்தைய தினம் சிலையைச் செய்த ஸ்தபதி அதற்குக் கண்திறப்பு செய்வார். அந்த நிகழ்ச்சிக்கு நயனோன்மீலனம் என்பர்.

ஆக, மேற்கூறிய எந்தச் சடங்கும் செய்யப் படாமலேயே பரமாச்சாரியார் திருக்கரங்களால் விபூதி அபிஷேகம் செய்யப்பட்டு, ஊர்மக்கள் அனைவராலும் பூஜிக்கப்பட்ட அதிசய முருகன் அவன்! தற்போது டில்லி வாழ் மக்களுக்கு அருள்பாலித்துக் கொண்டு இருக்கிறான்.

சிலையப் புதுடில்லிக்கு அனுப்பும் நாளும் குறிக்கப்பட்டு விட்டது. சிலையின் மகிமையைப் பற்றி ஏற்கெனவே அறிந்திருந்த டில்லி வாழ் தமிழ் மக்கள் மிகவும் ஆவலுடன் எதிர்பார்த்துக் கொண்டிருந்தனர். ஜோதிர்மட சுவாமிகள் சிலையை வரவேற்றுப் பெற்றுக் கொள்வதற்குப் பெரும்

ஏற்பாடுகள் செய்திருந்தார். திரு.ஆர்.வெங்கட்ராமன் அவர்களும் காத்துக் கொண்டிருந்தார்.




ஆலயத் திருப்பணிக் குழுவுடன் திரு.ஆர்.வெங்கட்ராமன் அவர்கள். (நடு வரிசை, மூன்றாவதாக அமர்ந்திருப்பவர்)

சிலை அங்கு சென்று இறங்கியதும் அதன் மகாத்மியத்தைப் பற்றி ஸ்தபதியை ஓர் உரை நிகழ்த்த வேண்டும் என்று அனைவரும் கேட்டுக் கொண்டனர். அதன்படி ஸ்தபதி ஏறக்குறைய மூன்று மணிநேரம் ஆங்கிலத்தில் அழகாகப் பேசினார். 'எங்கிருந்துதான் அந்த சக்தி எனக்கு வந்ததோ தெரியாது' என்று ஸ்தபதி சொல்லிச் சொல்லி மகிழ்வார்.

ஆலயத் திருப்பணிகள் அனைத்தும் முடிவுற்றதும் கும்பாபிஷேகத்திற்கு நாள் குறிக்கப்பட்டது. ஸ்தபதி ''அப்போதைய பிரதமர் திருமதி இந்திரா காந்தி அம்மையார் அவர்களைக் கும்பாபிஷேகத்திற்கு அழைக்க வேண்டும்'' என்று

திரு.ஆர். வெங்கட்ராமன் அவர்களிடம் கூறினார். அவரும் அதற்கு ஒப்புக் கொண்டு, பிரதமரைப் பார்ப்பதற்குச் சென்றனர். அப்போது நாடெங்கும் அவசர நிலைப் பிரகடனம் அறிவிக்கப் பட்டிருந்த நேரம். பாதுகாப்பு காரணங்களுக்காக, அவர் கும்பாபிஷேகம் அன்று வர இயலாது என்றும், ஆனால் கோவிலைக் காண்பதற்காக முந்தைய தினம் வருவதாகவும் பிரதமர் அவர்கள் கூறினார்கள்.

அதன்படி, கும்பாபிஷேகத்திற்கு முந்தைய தினம் காலை ஆறு மணிக்கு அவர் வருவதாகத் தெரிவிக்கப்பட்டிருந்ததால், பாதுகாப்பு அதிகாரிகள் முன்பே வந்திருந்து சோதனைகள் செய்து முடித்த பின்னர், குறிப்பிட்ட சிலர் மட்டும்தான் கோவிலில் இருக்க வேண்டும் என்று கூறப்பட்டது. அதன்படி திரு.ஆர். வெங்கட்ராமன், ஸ்தபதி மற்றும் திருப்பணி உறுப்பினர்கள் சிலர் என்று குறிப்பிட்ட சிலரே கோவிலின் உள்ளே இருந்தனர்.





திருமதி இந்திராகாந்தி அம்மையார் ஆலயத்தைப் பார்வையிடல்

திருமதி இந்திராகாந்தி அம்மையார் காலை ஆறு மணிக்கு ஆலயத்தின் உள்ளே பிரவேசித்தார். திரு.ஆர்.வெங்கட்ராமன் அனைவரையும் அம்மையாருக்கு அறிமுகம் செய்து வைத்தார். கடைசியில் நின்றிருந்த ஸ்தபதியை அறிமுகம் செய்து வைத்ததும், அம்மையார் உடனடியாக ''ஸ்தபதி வாருங்கள்! என்னுடன் வந்து இந்த ஆலயத்தைப் பற்றி விளக்கிச் சொல்லுங்கள்'' என்று ஸ்தபதியை மட்டும் அழைத்துக் கொண்டு, ஆலயத்தைச் சுற்றிப் பார்க்கக் கிளம்பி விட்டார்.

ஸ்தபதியும் மகிழ்ச்சியோடு, ஆலயத்தைச் சுற்றிக் காண்பித்து, அதன் தொழில்நுட்ப மற்றும் சாஸ்திர விளக்கங்களை அவரிடம் தெளிவாகக் கூறினார். மொத்த ஆலயத்தையும் பார்த்து முடித்தவுடன் திருமதி இந்திராகாந்தி அம்மையார், தனது அலுவலகத்திற்குக் கிளம்பி விட்டார். 'ஆலயத்தைப் பற்றி ஒன்றுமே கூறாமல் போய் விட்டாரே' என்று திரு.ஆர்.வெங்கட்ராமன் வருத்தப்பட்டார். உடனே, ஸ்தபதி 'அம்மையார் தனது அலுவலகத்திற்குச் சென்றதும் தொலைபேசி மூலம் தெரிவிப்பார்' என்று தனது ஊகத்தைத் தெரிவித்தார்.



புதுடெல்லி சுவாமிநாத ஸ்வாமி ஆலயம்

அதன்படி திரு.ஆர்.வெங்கட்ராமன் அவர்கள் அவரது வீட்டினுள் ஸ்தபதியுடன் நுழைந்ததும் தொலைபேசி ஒலித்தது. அனைவரும் எதிர்பார்த்தது போல் தொலைபேசி திருமதி இந்திராகாந்தி அம்மையாரிடமிருந்துதான். 'கோவிலின் கட்டிட நுணுக்கங்களையும், முருகனது அழகைப் பற்றியும் மிகவும் பாராட்டிப் பேசிய அம்மையார், கோவிலுக்கு ஒரு மணி செய்து மாட்டி விடும்படியும், அது ஒலித்தால் புது டில்லி முழுவதும் கேட்க வேண்டும்' என்றும் வேண்டுகோள் விடுத்ததாகவும் திரு.ஆர்.வெங்கட்ராமன் பேசி முடித்ததும் தெரிவித்தார்.

அம்மையாரின் வேண்டுகோளைப் பெரிதும் ரசித்த ஸ்தபதி, 'மணியை திருமதி இந்திராகாந்தி அம்மையாரே நன்கொடையாகத் தரும்படி கேட்கலாமே' என்று யோசனை தெரிவித்தார். அந்த நல்ல யோசனையை ஏற்றுக் கொண்ட திரு.ஆர்.வெங்கட்ராமன், அதற்கான ஏற்பாடுகளைச் செய்யத் தொடங்கினார்.

'மணி செய்வதற்கு நன்கொடை தருவதாக' உடனே ஒப்புக் கொண்ட அம்மையார் மத்திய அமைச்சர் திரு.சி.சுப்பிரமணியம் அவர்கள் மூலமாக உடனடியாகப் பணத்தைக் கொடுத்துனுப்பி விட்டார். அதன்படி மிகப் பெரிய மணி கோவிலில் மாட்டப்பட்டது. அதன் முதல் ஒலித்தலை (First stroke) திருமதி இந்திராகாந்தி அம்மையாரே செய்தால் நன்றாக இருக்குமே என்று தீர்மானித்து அவரை அணுகியபோது சில சொந்த காரணங்களுக்காக அந்த வேண்டுகோளை அன்போடு மறுத்த அம்மையார், திரு.சி. 'சுப்பிரமணியம் அவர்கள் முதல் ஒலித்தலைச்செய்வார்' என்றும் அறிவித்து விட்டார். அதன்படி

மணியின் முதல் ஒலியை திரு.சி.சுப்பிரமணியம் அவர்களே செய்தார்.

இவ்வாறு பல முக்கிய அரசியல் பிரமுகர்களின் ஆசிகளோடும், ஒத்துழைப்போடும், முயற்சியோடும் புதுடில்லி சுவாமிநாத சுவாமி ஆலயம் கட்டி முடிக்கப்பட்டது. ஆலயத்தின் பணிகளில் ஈடுபட்ட அனைவருக்கும சன்மானம் செய்ய வேண்டுமே! கடுமையான நிதிப் பற்றாக்குறையினால் 'ஸ்தபதிக்கு மட்டும் சிறிது காலம் தாழ்த்தி சன்மானம் அளிப்பதாக' திருப்பணி நிர்வாகிகள் கூறினர். ஸ்தபதியும் அதனை ஏற்றுக் கொண்டு சென்னை திரும்பி விட்டார். [இன்று வரை அவர் செய்யும் எந்தப் பணிகளுக்கும் சன்மானம் கண்டிப்பாக இவ்வளவு வர வேண்டும், இப்போதைக்குள் வர வேண்டும் என்று எந்த விதமான நிபந்தனைகளும் விதிக்கத் தெரியாதவர் திரு. கணபதி ஸ்தபதி அவர்கள். அதனால்தான் அவருக்குப் பணிகள் தேடி வருகின்றன. அதற்கான சன்மானங்களும் ஸ்தபதியின் ஒரு விதமான முயற்சியும் இல்லாமலேயே வந்து விடும்.]

ஸ்தபதியுடன் சென்னைக்குப் பயணித்த கும்பாபிஷேகத்தை நடத்தி வைத்த சிவாச்சாரியார் அவர்கள் ஸ்தபதியிடம் 'அவருக்கு ஒருபோதும் சன்மானம் திரும்பி வரப் போவதில்லை என்றும் ஸ்தபதி நன்றாக ஏமாந்து விட்டார்' என்றும் வேடிக்கையாகக் கூறினார்.

அதற்கு ஸ்தபதி அவரிடம் ''நான் செய்து இப்போது அனைவராலும் வணங்கப்படுகின்ற இந்த முருகன் உண்மையான கடவுள் என்றால் எனக்குத்தான் முதலில் அருள் பாலிப்பான்'' என்று உணர்ச்சி வசப்பட்டுக் கூறினார்.

அவர் கூறியதைப் போலவே அந்த வருடம் சிறந்த கைவினைஞர் விருது **(Master Craftsmanship Award)** அக்கோவிலைக் கட்டியதற்காகவே ஸ்தபதி அவர்களுக்கு ஜனாதிபதி திரு.வி.வி.கிரி அவர்களால் வழங்கப்பட்டது.



ஜனாதிபதி திரு.வி.வி.கிரி அவர்கள் ஸ்தபதிக்கு விருது வழங்குதல்



Reception at Uttara Swamimalai to Silpa Kala Ratnam Shri V. Ganapathi Sthapathi, Superintendent, Sculpture Training Centre, Mahabalipuram on the occassion of President's award of Master Craftsman—1973 for designing and execution of Shri Swaminatha Swami Temple, New Delhi in Chola Architectural Style Shri D. Sreenivasan, Director of All India Handicrafts Board addressing the gathering.

அது மட்டுமல்ல, ஸ்தபதியாரது கலைப்பணிகளால் பெரிதும் கவரப்பட்ட திருமதி இந்திராகாந்தி அம்மையார், அவரை ஒரு வருடத்திற்கு, சின்டிகேட் வங்கியின் கௌரவத் தலைவராக **(Honrary Director)** நியமித்தார். மிகவும் பெருமைக்குரிய பதவி அது! இதில் ஒரு விந்தை என்னவெனில், வங்கியின் தலைவராக இருந்த அவருக்கு அப்போது வங்கிக் கணக்கே இல்லை!

ஸ்தபதி அவர்கள் சமீப காலம் வரை, கணக்கிலடங்கா ஆலயங்களைக் கட்டி முடித்து விட்டாலும், புதுடில்லி சுவாமிநாத சுவாமி ஆலயத்தைச் செய்தது தன் வாழ்நாள் பாக்கியம், சாதனை என்று மகிழ்வார்.

## கலைஞர் திரு. மு. கருணாநிதி அவர்களுடன் ...

திரு.கணபதி ஸ்தபதி அவர்கள் சிற்பக் கலைக் கல்லூரியில் முதல்வராகப் பணியாற்றிக் கொண்டிருந்த போது அப்போது பொதுப்பணித்துறை அமைச்சராகப் பணியாற்றிக் கொண்டிருந்த கலைஞர் அவர்கள் கல்லூரியைப் பார்வையிடுவதற்காக ஒரு நாள் வந்திருந்தார்.

மாணவர்கள் அனைவரும் அவரைக் காண்பதற்காகச் சுற்றி நின்றனர். அனைவருடனும் வெகு இயல்பாகப் பேசும் இயல்புடைய கலைஞர் அவர்கள் மாணவர்களை வெகுவாகக் கவர்ந்து விட்டார். அவரது சகஜமான பழகுதலைக் கண்டு மாணவர் ஒருவர் துணிச்சலுடன் ''அய்யா! கலைஞராகிய உங்களுக்குத்தான் கலைத் தொழில் புரியும் எங்களது நிலமை புரியும். நாங்கள் படித்து முடித்ததும் எங்களுக்குத் தகுந்த பணி கிடைப்பதில்லை. கலைஞராகிய தாங்கள் எங்கள் கலைத்திறமையை வெளிப்படுத்தும் வகையில் வேலைகள் கொடுத்தால் மகிழ்வோம்'' என்றார்.

கலைஞர் சற்று யோசித்து விட்டு ''சரி பார்க்கலாம்'' என்று பதில் அளித்து விட்டுச் சென்று விட்டார். அதுதான் கலைஞருடன் திரு. கணபதி ஸ்தபதி அவர்களுக்கு முதல் சந்திப்பு.

சீர்காழிக்கு அருகிலுள்ள பூம்புகார் நகரில், தாசில் பண்ணை என்ற ஊரைச் சேர்ந்த திருமதி கௌரி அம்மாள் என்பவர் வசித்து வந்தார். அவர் கண்ணகியின் மீது மிகுந்த பக்தியும் மரியாதையும் கொண்டவர். ஒவ்வொரு வருடமும் தவறாது கண்ணகிக்கு விழா எடுத்து, தமிழறிஞர்கள் மற்றும் புலவர்

பெருமக்கள் பலரைக் கூட்டி வந்து, சிலப்பதிகாரக் கண்ணகியின் புகழைப் பற்றிப் பேசச் செய்து மகிழ்பவர். அவர் கம்பன் அடிப்பொடி திரு.சா.கணேசன் அவர்கள் மூலமாக திரு.கணபதி ஸ்தபதி அவர்களையும் ஒரு முறை கண்ணகி விழாவில் பேச அழைத்திருந்தார். அப்போது அவரிடம் கண்ணகிக்கு ஒரு சிலை செய்து தரும்படி வேண்டினார். ஸ்தபதியும் சில மாதங்களில் கண்ணகிக்குக் கவின்மிகு சிலை ஒன்றைச் செய்து கொடுத்தார். அதற்கு விரைவில் பத்தினி கோட்டம் என்ற பெயரில் ஒரு கோவில் செய்து விடும்படியும் கூறினார். பணவசதி கிடைத்ததும் அவ்வாறே செய்வதாகக் கூறினார் கௌரி அம்மாள் அவர்கள்.

திரு.சா.கணேசன் அவர்கள் மூலமாக ஒரு முறை கலைஞர் அவர்களை விழாவிற்கு அழைத்து வந்தனர். அவர் விழா தொடங்குவதற்கு முன்னர் கண்ணகி சிலையைப் பார்வையிட்டார். அதன் அழகில் மயங்கிய அவர், இதை யார் செய்தது என்று கேட்டார். உடனே திரு.சா.கணேசன் அவர்கள் ஸ்தபதியை அறிமுகம் செய்து வைத்தார். வணக்கம் தெரிவித்த திரு.ஸ்தபதியை கலைஞர் அவர்கள் ஏறிட்டுப் பார்த்தார். அந்தப்பார்வையைத்தான் 'இராஜபார்வை' என்று சொல்வதோ?

காரணம், அன்றிலிருந்து ஸ்தபதி அவர்களுக்குத் தொடர்ச்சியாக சிற்பப் பணிகளைக் கொடுத்து, அவரது கலைப் பசியைப் பெருமளவு போக்கியவர். பூம்புகார் சிற்பக்கலைக் கூடம், வள்ளுவர் கோட்டம், அண்ணா அறிவாலய முகப்பு, கலைஞர் அரங்க முகப்பு, கன்னியாகுமரியில் அய்யன் திருவள்ளுவருக்கு 133 அடி வானுயரச் சிலை என்று பல பணிகளைக் கொடுத்து, திரு. கணபதி ஸ்தபதி அவர்களின் பெருமையை உலகறியச் செய்தவர்.

அன்றிலிருந்து இன்று வரை கலைஞர் மீது ஸ்தபதியார் வைத்துள்ள அன்பும், மதிப்பும், மரியாதையும் வார்த்தைகளால் விவரிக்க இயலாத ஒன்றாகும்.

கண்ணகி விழாவில், கலைஞர் பேசும் பொழுது கண்ணகி பிறந்த ஊரான பூம்புகாரில் சிலப்பதிகாரத்தை விளக்கும் சிற்பக் கலைக் கூடம் ஒன்று நிறுவப்படும். அதை திரு. கணபதி ஸ்தபதி அவர்களே நிர்மாணித்திடுவார் என்றும் கூறி விட்டார். அதைக் கேட்ட திரு. கணபதி ஸ்தபதிக்கு மிகவும் மகிழ்ச்சி. 'அன்று ஒரு நாள் கல்லூரியில் மாணவர்கள் வைத்த கோரிக்கையை வைத்துத்தான் இவ்வாறு அறிவிப்பு செய்திருப்பாரோ' என்று நினைத்தார்.

சென்னை திரும்பியதும், ஸ்தபதியை அழைத்து, பூம்புகாரில் பணிகளை ஆரம்பிக்கும்படி பணித்து, அதற்குண்டான செலவுப் பட்டியலையும் அளிக்கும்படி கூறினார்.

பூம்புகார் வரலாற்றை, கற்புக்கரசி கண்ணகியின் கதையை சிலப்பதிகாரக் கலைக் கூடம் என்ற பெயரில் எழுநிலை மாடம் ஒன்றை எழுப்பிடச் செய்து, அக்கட்டிடத்தின் உட்சுவரில் கண்ணகி வரலாற்றைப் புடைப்புச் சிற்பமாகப் படைக்கும்படி கூறினார்.

கல்லிலே தனித்தனியாகச் சிற்பங்கள் செய்திடல் எளிது. ஆனால் கதை சொல்லும் காட்சிச் சிற்பங்கள் **(Group sculptures - narrative sculptures)** செய்வது மிக மிகக் கடினம். இத்தகைய சிற்பங்கள் பல்லவர், சோழர் காலத்தில்தான் செழிப்புற்றிருந்தன. அதற்குப் பிறகு வந்தோர் இத்துறையில் அவ்வளவாக அக்கறை

எடுத்துக் கொள்ளவில்லை எனலாம். இதனால் சிற்பியர்க்கு **Group Sculpture** செய்திடும் இந்த ஆற்றலே மங்கி வந்து கொண்டிருக்கும் கால கட்டத்தில் விடுபட்டுப் போன இந்த மரபை திரு.கணபதி ஸ்தபதியின் மூலம், இலக்கியக் காட்சிகள் வாயிலாக உயிர்ப்பித்த பெருமை கலைஞர் அவர்களையே சாரும். சந்தர்ப்பங்கள்தானே மனிதனை உருவாக்குகின்றன! சந்தர்ப்பங்கள்தானே மனிதனின் திறமைகளை வெளி உலகிற்கு எடுத்துச் செல்லும் கருவியாகிறது!

பணி நடைபெற்றுக் கொண்டிருந்த மாமல்லபுரம் சிற்பக் கலைக் கல்லூரிக்கு, கற்பணிகளைப் பார்வையிட வாரம் ஒரு



ஆடலரசி மாதவியின் எழிலார்ந்த தோற்றம்

முறை, கலைஞர் தனது துணைவியாரோடு வருகை தருவார். அப்போது ஸ்தபதி அவர்களிடமும் மாணவர்களிடமும் மனம் விட்டுப் பேசி மகிழ்வார். முடிவுற்ற சிற்பங்களைத் தொட்டுக் காட்டி, ஸ்தபதியார் அதன் நுட்பங்களை விளக்கிடுவார். அப்போதுதான் இந்தச் சிற்பக் கலைப் பணியாளர்களுக்காக அரசு வழியாக நிரந்தரப் பணி கிடைத்திட ஓர்அரசாணை, 1974ல் பிறப்பித்திடச் செய்தார்.

ஸ்தபதி அவர்கள் தனது உள்ளத்தில் முகிழ்ந்த கற்பனைக்கும் இரசனைக்கும் வடிவம் அமைத்திட மாதவி சிற்பமொன்றை எட்டடி உயரத்தில் வடித்திட முற்பட்டார். சிலப்பதிகாரத்தில் மாதவியை இளங்கோவடிகள் எப்படி வர்ணித்திருந்தாரோ அதில் சற்றும் பிசகாது அதற்கு அழகிய உருவம் அளித்தார். டாக்டர் கலைஞர் அவர்கள் அச்சிலையைப் பெரிதும் பாராட்டினார்.

தலைக்கோல் பெற்றிட்ட ஆடலரசியான மாதவியின் உடலமைப்பு, உடல் நெளிவு சுழிவு கொள்ளும் போது வெளிப்படும் அவிநயக் கோலம் மற்றும் அதன் கவர்ச்சி, தமிழ் மரபுக்குச் சொந்தமான ஆடை அலங்காரம், 32 அணிகலன்களைப் பூண்டு ஒய்யாரமாக நிற்கும் காட்சியையும், அவளது அன்ன நடையழகையும் உணர்த்தி, அவளது இசைஞானத்தைக் குறிக்கும் வகையில் யாழ் சின்னத்தை அருகில் வைத்து, தலை அலங்காரத்தைக் கவர்ச்சிகரமாக வெளிப்படுத்தி, அவளது முக அழகைக் கண்டுக் கையில் வைத்திருக்கும் மலர்ந்த தாமரை வெட்கி மொட்டாகக் குவிந்ததாகக் கவிநயமாக வடிக்கப்பட்ட ஓர் அழகிய சிற்பம் மாதவியின் சிற்பம்.



நெடுங்கல் மண்டபத்தின் எழில்மிகு தோற்றம்

அந்தச் சிற்பத்தை திரு.கணபதி ஸ்தபதி அவர்கள் தனது வாழ்நாள் சாதனையாக (masterpiece) அமைய வேண்டும் என்று பெரிதும் முயற்சி எடுத்துக் கொண்டு உழைத்தார். வீட்டில் உணவருந்தும் போது கூட மாதவியைப் பற்றிய நினைவுதான். 'இலையில் என்ன பரிமாறப்பட்டிருக்கிறது, என்ன உண்ணுகிறோம் என்ற சிந்தனைகூட சிறிதும் இன்றி இருப்பார் அவர்' என்று அவாது துணைவியார் கூறக் கேட்டதுண்டு. அவ்வளவு ஈடுபாடு அந்தச் சிலையை வடிப்பதில்!

அவர் விரும்பியதைப் போலவே, அச்சிற்பம் பேரழகுடன் வெளிவந்தது. அதன் முன்னழகையும், பின்னழகையும் பார்த்துப் பார்த்து ரசித்திட்ட கவிஞர்கள் அதன் மீது பல கவிதைகளைப்

புனைந்து மேடைகளில் முழங்கினார்கள். அதனைப் படமெடுக்கச் செய்து, பெரிதாக்கிக் கண்ணாடிக் கூண்டில் வைத்து, இரயில் நிலையங்களிலும், பொது மக்கள் வந்து போகும் பிற இடங்களிலும் வைக்கச் செய்தார்கள் கலைஞர் அவர்கள்.

நகைச்சுவையாகப் பேசும் திரு.கொத்தமங்கலம் சுப்பு அவர்கள் மாதவிச் சிற்பத்தைப் பற்றிக் குறிப்பிட்டுப் பேசும் பொழுது ''மாதவியின் பின்னழகைக் கல்லால் கண்டபோதே நான் மயங்கி விட்டேன். நேரில் கண்ட கோவலன் மயங்கியதில் வியப்பேதுமில்லையே'' என்று கூறியதும் அனைவரும் சிரித்து ரசித்தனர்.

அப்போது கலைஞர் அவர்கள் வேடிக்கையாக ''ஒரு பெண்ணின் பின்னழகைப் பற்றிப் பாடவே கவிஞர்கள் காத்துக் கிடக்கிறார்கள்'' என்று கூற மறுபடியும் சிரிப்பு. இங்ஙனம் அழகு மிளிரும் சிற்பமாக மாதவி விளங்குகிறாள்.

இச்சிற்பத்துடன் இணைந்து, திரு. கணபதி ஸ்தபதி அவர்களின் நண்பர் ஒருவரால் கண்ணகி சிலை செய்யப்பட்டது. கண்ணகி ஒரு குடும்பப் பெண் என்பதால் அந்தச் சிலை மிகவும் அடக்கமாக, சாதாரணமாக இருக்கும். இரு சிலைகளையும் அருகில் நிறுத்திப் பார்த்திட்ட கலைஞர் அவர்கள் **"Kovalan is justified"** என்று நகைச்சுவை ததும்பக் கூறினார். அதாவது, 'மாதவி அவ்வளவு அழகாக இருந்தால் கோவலன் என்ன செய்வான் பாவம்' என்று அர்த்தம் வருகிறாற் போல் கலைஞர் பேசியது அங்குள்ள அனைவராலும் இரசிக்கப்பட்டது.

இப்பணியில் ஈடுபட்ட சிற்பக் கல்லூரி மாணவர்கள் அனைவருக்கும், இளஞ் சிற்பியர் 40 பேர்களுக்கு, திறப்பு விழாவின் போது சிலம்புச்சின்னம் பதித்தத் தங்க மோதிரங்களை கலைஞர் அவர்கள் வழங்கி, வாழ்த்தினார்.



பூம்புகார் கலைப்பணியில் ஈடுபட்ட கல்லூரி மாணவர்களுக்கு கலைஞர் அவர்கள் சிலம்பு மோதிரம் வழங்குகிறார்.



பூம்புகார் படைத்த பெருந்தச்சன், கலைமாவளவன் என்ற சிறப்புப் பட்டத்தை டாக்டர் கலைஞர் அவர்களுக்கு வழங்கிட்ட கைவேலைப்பாடான கருங்கல்லால் ஆன நினைவுச் சின்னம்.

இதன் பின்னர், சிலப்பதிகாரத்தில் சொல்லப்பட்ட நெடுங்கல் மன்றம், பாவை மன்றம், இலஞ்சி மன்றம் போன்றவற்றைக் கல்லால் நிர்மாணித்திடும்படி திரு.கணபதி ஸ்தபதி அவர்களைப் பணித்தார் கலைஞர் அவர்கள்.

பாவை மன்றம் எட்டுப்பட்ட வடிவினை உடையதாகும். திருக்குறளின் இன்பத்துப் பாலிலிருந்து எட்டுப் பாக்களை கலைஞர் அவர்களே தனது வாயால் கூறி அதற்கு விளக்கப் படங்களைத் தயாரிக்கும்படிப் பணித்தார். பிறகு அப்படங்களுக்கு ஒப்புதல் அளித்து, அதனைச் சித்தரிக்கும் வகையில் அம்மண்டபத்தில் இருக்கும் எட்டு தூண்களில் ஒரு தூணுக்கு ஒரு சிற்பம் வீதம் செதுக்கும்படி கூறினார்.

இன்பத்துப்பாலிலிருந்து எடுக்கப்பட்ட குறள்கள் என்பதால் ஒவ்வொரு சிற்பத்திலும் உள்ள பெண்கள் முகத்தில் மிளிரும்



சென்னை வள்ளுவர் கோட்டத்தின் முன்பு திரு.கணபதி ஸ்தபதி

வெட்கமும், அவர்களது நிற்கும் தோரணையும் காண்போர் மனத்தைக் கொள்ளை கொள்ளும் வகையில் அமைந்திருக்கும்.

தண்டு போல் நிமிர்ந்து நிற்கும் முற்றிலும் கல்லால் செய்யப்பட்ட நெடுங்கல் மன்றம் சிற்பக் கலைக்கு மற்றுமோர் சிகரமாகும். உயரத்தில் உள்ள கற்றூணைத் தாங்கிப் பிடிப்பது போல் வீரமறவர் சிலைகள் அழகாகச் செதுக்கப்பட்டிருக்கும்.

பூம்புகாரில் சிலப்பதிகாரக் கலைக் கூடத்தை எழுநிலை மாடமாக மிளிரச் செய்த கலைஞர் அவர்களுக்கு 02.03.1975 அன்று மாமல்லபுரத்தில் நடைபெற்ற சிற்பக் கலைஞர் மாநாட்டில் பூம்புகார் படைத்த பெருந்தச்சன் கலைமாவளவன் எனும் சிறப்புப் பட்டத்தை வழங்கி அவரை கௌரவித்தார் திரு.கணபதி ஸ்தபதி அவர்கள்.

குறளுக்கு ஒரு சிற்பம் வீதம் செதுக்கும் கலையை அவர் இரசிக்க ஆரம்பித்து, அதை இன்னும் பெரிய அளவில் செய்ய வேண்டும் என்று அவர் எண்ணத்தில் முகிழ்ந்ததுதான் வள்ளுவர் கோட்டமோ என்று எண்ணத் தோன்றும்.சென்னை வள்ளுவர் கோட்டத்தில், 133 குறட்பாக்களைக் காட்சிப் படுத்தி செதுக்கப்பட்டிப்பதைக் காணலாம்.

சென்னை வள்ளுவர் கோட்டத்தையும் திரு.கணபதி ஸ்தபதி அவர்களையே கட்டும்படி கூறினார் கலைஞர் அவர்கள். அதன்படி வள்ளுவர் கோட்டத்தின் பணி 1974 ல் அப்போதைய தமிழக முதல்வர் கலைஞர் அவர்களால் தொடங்கி வைக்கப்பட்டது. அப்பணியும் செவ்வனே நிறைவுற்றது. வெறும் குப்பை மேடாய்க் கிடந்த அந்த இடம் இப்போது நாள்தோறும் அதிக அளவில் மக்கள் வந்து இரசிக்கும் இடமாக மாறி விட்டது.

சென்னை வள்ளுவர் கோட்டத்தில், பெரிய அளவில் ஒரு கற்தேர் செதுக்கப்பட்டிருக்கும். அது கலைஞர் அவர்களின் ஆலோசனையின் பேரில், அவர் பிறந்த ஊரான திருவாரூர் தேரின் அழகான வடிவத்தைக் கொண்டதாகும். அந்தத் தேர் வடிவிலேயே இதுவும் இருக்க வேண்டும் என்று அவர் விரும்பினார்.

பொதுவாகக் கல்லால் கோவில் ஒன்றைக் கட்டி, இரண்டு பக்கங்களிலும் சக்கரங்களை இணைத்துக் கல் தேர் என்று காட்டுவது வழக்கம். ஏனெனில், மரத்தேர்கள் அடியில் சிறுத்து, மேல் நிலையில் விரிந்து அமையும். ஆனால், கல்லால் செய்யும் போது கட்டுமானப் பிரச்சனைகள், சேர்மானப் பிரச்சனைகள் ஏற்படும்.

இதனால், மிக அதிக அளவில் பணம் தேவைப்படும். எனவே கல் தேரைச் செய்ய எவரும் முன்வருவதில்லை. ஆனால், வள்ளுவர் கோட்டத்தில் அமைக்கப்பட்ட கல் தேரானது கலை நுட்பம், கட்டுமான நுட்பம், அளவுமுறை மற்றும் கனபரிமாணம் ஆகியவற்றில் பெரிய எழுச்சியும், எடுப்பும் கொண்டதாகும்.

இத்தகைய ஒரு பணியை திரு.கணபதி ஸ்தபதி அவர்கள் செய்வதாகக் கலைஞர் அவர்களிடம் ஒப்புக் கொண்டு, ஐந்து ஆண்டுகள் நடைபெற வேண்டிய அப்பணியை நாளொன்றுக்கு மூன்று பணிக்கால அளவு (Shift) விதம் சுமார் ஆயிரம் பணியாட்களை ஈடுபடுத்திக் கொண்டு இரண்டு ஆண்டுகளில் முடித்து விட்டார். அத்தேரில் 133 குறட் சிற்பக் காட்சிகள் இடம் பெற்றுள்ளன.

இவ்வாறு அப்பணி செவ்வனே நிறைவுற்றதும், அய்யன் வள்ளுவனுக்கு இன்னும் பெரிய அளவில் ஏதாவது செய்ய வேண்டும் என்று பேரவா கலைஞர் அவர்களது உள்ளத்தில் இருந்து கொண்டே இருந்தது போலும்!

அதன் விளைவாகத்தான் முக்கடல் சங்கமிக்கும் குமரி முனையிலே திருவள்ளுவருக்கு 133 அடி உயரத்திலே முற்றிலும் கருங்கற்களால் சிலை ஒன்றை அமைக்கும்படி பணித்தார் போலும். அப்போது திரு. ஸ்தபதி அவர்கள் அரசாங்கப் பணியிலிருந்து ஓய்வு பெற்று, தனியாக **V.Ganapati Sthapati & Associates** என்று ஒரு நிறுவனத்தை நடத்தி வந்தார். அதன் வாயிலாக கோயில் பணிகளும், சிற்பப் பணிகளும் செய்து கொடுத்து வந்தார்.

திருக்குறளில் உள்ள 133 அதிகாரங்களைக் குறிக்கும் வகையில் 133 அடி உயரத்தில் சிலை அமைப்பதாக முடிவு



133 அடி உயரமுள்ள அய்யன் திருவள்ளுவரின் கவின்மிகு தோற்றம்



முக்கடல் சங்கமிக்கும் குமரி முனையில் விவேகானந்தர் மண்டபமும் அய்யன் திருவள்ளுவர் சிலையும்

எடுக்கப்பட்டு அறத்துப்பாலில் உள்ள 38 அதிகாரங்களை மனதில் கொண்டு 38 அடி உயரத்தில் சிலையின் பீடம் அமைக்கப்பட்டு அது அறப்பீடம் என்றழைக்கப்பட்டது. மீதி 95 அடி சிலையின் உயரமாகும். சிலையின் தலை மட்டும் 20 அடியாகும். ஒரு மாடிக் கட்டிட உயரமும் 150 டன் எடையும் கொண்டது இச்சிலையின் தலை.

சிலையின் கட்டுமானத்திற்கு மொத்தம் 3681 துண்டு கற்கள் பயன்படுத்தப்பட்டன. அவைகளின் மொத்த எடை 7000 டன் ஆகும். ஒவ்வொன்றும் 3 முதல் 8 டன் எடை கொண்ட கற்களை கடல் வழியாகப் படகின் மூலம் சிலை அமையவிருக்கும் பாறைக்கு எடுத்துச் சென்று, இரவு பகல் பாராது 500 சிற்பிகளைக் கொண்டு சுமார் 4 ஆண்டுகளில் திரு.ஸ்தபதி அவர்கள் கட்டி முடித்தார்.

சிலைப்பணி நடைபெறும்போது ''சிலை நிற்குமோ நிற்காதோ'' என்று சந்தேகமாகக் கேட்பவரிடமெல்லாம் ஸ்தபதி

அவர்கள் ''அலையும் மலையும் இருக்கும் வரை சிலை அசையாது இருக்கும், கவலைப்படாதீர்கள்.'' என்று கூறுவதுண்டு. தஞ்சையில் பிரகதீஸ்வரர் கோயிலின் பிரம்மாண்டமான விமானக் கட்டுமானப் பணியின் போது, அதனைப் பார்வையிட்ட பலர் ''விமானம் விழுந்து விடுமோ'' என்று அச்சப்பட்டதாகக் கூறுவதுண்டு.

அப்போது அதை நிர்மாணித்த குஞ்சரமல்லன் இராஜராஜப் பெருந்தச்சன் பெருமையாக ''விமானத்தின் நிழல் கூட விழாது'' என்று கூறுவாராம். அத்தகைய பெருமை வாய்ந்த குஞ்சரமல்லன் இராஜராஜப் பெருந்தச்சன் பரம்பரையில் வந்த திரு.கணபதி ஸ்தபதியும் அவ்வாறு கூறியதில் வியப்பேதும் இல்லையே! சமீபத்தில் தமிழகத்தையே உலுக்கிய 'சுனாமி' என்று அழைக்கப்படும் கடற்கோளின் போதும் எவ்வித பாதிப்புமின்றி, கம்பீரமாக நிற்கிறார் திருவள்ளுவர்.

சிலைப்பணிகள் அனைத்தும் 19.10.1999 அன்று முடிவுற்றதும் பத்திரிகையாளர்களை அழைத்து விவரங்கள் கூறிவிட்டு ஸ்தபதி அவர்கள் கலைஞரைச் சந்திப்பதற்காக மறுநாள் சென்னை வந்தார். கலைஞரை அவரது அலுவலகத்தில் சந்திப்பதற்காக வந்து காத்துக் கொண்டிருப்பதைக் கதவின் இடைவெளிவழியே பார்த்த கலைஞர் அவர்கள் உடனே அவரை உள்ளே வரும்படி சைகை செய்தார்.

'கண்டேன் சீதையை' என்பது போல, ஸ்தபதி அவர்கள் கலைஞரிடம் ''நிற்கிறார் திருவள்ளுவர்'' என்று கூறினார். கலைஞர் அவர்கள் மிகவும் மகிழ்ந்து ஸ்தபதி அவர்களைப்

பாராட்டினார். அவரது பாராட்டுதல்களால் மரபுச் சிற்பக் கலை 1330 அடி உயர்ந்து விட்டதாக உணர்வதாக திரு. ஸ்தபதி அவர்கள் குறிப்பிட்டார்.

மேலும் அவர் கலைஞரிடம் பேசும் பொழுது ''சிற்பிகளாகிய எங்கள் முன்னோர்கள் இந்த நாட்டில் இத்தகையப் பல்வேறு அதிசயப் பணிகளைச் செய்துள்ளார்கள். ஆனால், அவர்கள் வரலாற்றில் மறைந்து கிடக்கிறார்கள். எங்களைக் கைதூக்கி விடுங்கள் ஐயா'' என்று ஒரு கோரிக்கையைச் சமர்ப்பித்தார். கலைஞரும் அதை உன்னிப்பாகக் கேட்டு விட்டு, ''எதிர்வரும் முரசொலியைப் பாருங்கள்'' என்று கூறினார்.

சொன்னது போல், அடுத்து வந்த 20.12.99 தேதியிட்ட முரசொலியில் பீறிட்டெழுந்து கொட்டிய அவர் தம் உணர்ச்சி வெள்ளத்தை இங்கே அப்படியே வெளியிடுவதில் பெருமகிழ்ச்சி அடைகிறோம்.

## அய்யன் வள்ளுவனுக்கு அழியாத நினைவுச் சின்னம்

''பூம்புகார் எழில் மாடத்தை என் கருத்திற்கேற்ப அமைத்துத் தந்த வரும், பாஞ்சாலங்குறிச்சியில் இடிந்த கோட்டையை எழுப்பித் தருவதற்கு உடனிருந்து உதவியவரும், வள்ளுவர் கோட்டம் வையகம் புகழ்ந்திட, உருவாகிட சிற்பி திரு.ஆச்சார் அவர்களுடன் இனணந்து, கையில் உளி எடுத்தவரும், அண்ணா அறிவாலய முகப்பினையும் அழகுற அமைத்துத் தந்தவரும், சிற்பச் சித்தருமான கணபதி ஸ்தபதியார் அவர்கள் மூன்றாண்டு காலத்திற்கு மேலாக அல்லும் பகலும் அயராது பாடுபட்டு, நமது அய்யன் வள்ளுவனுக்கு , காலத்தால் அழியாத நினைவுச்

சின்னத்தை என் இதயம் இறக்கைகள் பெற்றுப் பறந்து மகிழ்கிற அளவுக்கு, என் இரத்த நாளங்களில் இன்ப அருவி பாய்ந்து பரவுகின்ற அளவுக்கு, என் சுவாசக் கோசங்கள் ஆனந்தப் பெருமூச்சால் நிரம்பிப்பிதுங்குகின்ற அளவுக்கு, வடித்தெடுத்து நிலை நாட்டி விட்டார், வங்கமும், இந்துவும், அராபியும் என முக்கடல் சங்கமிக்கும் குமரிமுனைப் பாறை முற்றத்தில்.

அவருக்கும், அவருடன் சேர்ந்து, அற்புதச் சிலையைப் பொற்புடன் உருவாக்கியுள்ள சிற்பிகள், அலுவலர், பணியாளர், பொறியாளர்கள் அனைவருக்கும்

''இதனை இதனால் இவன்முடிக்கும் என்றாய்ந்து
அதனை அவன்கண் விடல்'' என்ற குறளை நினைவூட்டி, அதன்படி என் ஆய்வுக்கேற்ப வினை முடித்தமைக்காக ஆயிரம், பதினாயிரம், லட்சோப லட்சம் நன்றி மலர்களைத் தூவுகின்றேன்.'' என்று தனது வைர வரிகளால் எழுதினார்கள்.

செவ்வனே முடிவுற்ற திருவள்ளுவர் சிலைப்பணி 01.01.2000ம் ஆண்டு கலைஞர் அவர்களால் நாட்டுக்கு அர்ப்பணிக்கப்பட்டது. விழாவினில் அமைச்சர் பெருமக்கள் பலர், சமூகத்தில் அந்தஸ்துள்ள பெருமக்கள் என்று பலரும் கலந்து கொண்டு சிறப்பித்தனர்.

திரு.கணபதி ஸ்தபதி அவர்கள் ''இயல், இசை, நடம் ஆகியவற்றோடு சிற்பம் மற்றும் கட்டிடம் ஆகியவற்றைச் சேர்த்து ஐந்தமிழ் என்று கூறுவார்கள். திரு. கலைஞர் அவர்கள் அனைவராலும் முத்தமிழ் அறிஞர் என்று பாராட்டப் படுகிறார்.

மற்ற இரண்டு கலைகளான சிற்பம் மற்றும் கட்டிடக் கலைக்கு அவர் ஆற்றிய தொண்டினைப் பாராட்டும் வகையிலும், ஐந்தமிழ்க் கலைகளிலும் ஆழ்ந்த பற்றும், ஞானமும் நிரம்பியவராக அவரைப் பாராட்டும் வகையிலும் அவருக்கு 'ஐந்தமிழ் அறிஞர்' என்ற பட்டத்தை சென்னை வள்ளுவர் கோட்டத்தில் 16.01.2000 அன்று வழங்கப்பட்டது. இப்பட்டம் திரு.கணபதி ஸ்தபதி மற்றும் அனைத்து சிற்பியர் சார்பில் வழங்கப்பட்டது.

அப்பட்டத்தை ஏற்ற கலைஞர்அவர்கள் 17.01.2000 அன்று வெளியான தினகரன் பத்திரிகையில் 'இயல் தமிழ், இசைத் தமிழ், நாடகத் தமிழுடன் சிற்பத் தமிழ்,கட்டிடத் தமிழ் ஆகிய ஐந்தமிழிலும் எனக்கு ஆர்வம் உண்டு, ஆற்றல் உண்டு என்று கூற மாட்டேன். இவற்றில் எனக்கு மேலும் ஊக்கம் வழங்கவே இந்த விருதினை சிற்பச் சித்தர் திரு. கணபதி ஸ்தபதி அவர்கள் எனக்கு வழங்கி இருக்கிறார்.' என்று பெருந்தன்மையோடு குறிப்பிட்டார்.

133 அடி உயர அய்யன் திருவள்ளுவர் சிலை மிகவும் பழமையான தொழில் நுட்பத் துணையோடு எவ்வாறு கட்டப்பட்டது என்பது பற்றியும், கலைஞர் மு.கருணாநிதி அவர்களுடன் திரு.கணபதி ஸ்தபதி சேர்ந்து பணியாற்றிய அனைத்துப் பணிகளைப் பற்றியும் விளக்கி சாதனை மலர் என்ற புத்தகத்தை திரு.ஸ்தபதி வெளியிட்டார்.

கன்னியாகுமரியில் அய்யன் திருவள்ளுவர் சிலை வெற்றிகரமாக அமையப் பெற்றது குறித்து, தமிழ்நாட்டிலுள்ள அனைத்து விஸ்வகர்ம இன மக்கள் ஒருங்கிணைந்து

திரு.ஸ்தபதிக்கு ஒரு மாபெரும் பாராட்டு விழாவினைக் கலைஞர் திரு.மு.கருணாநிதி தலைமையில் ஏற்பாடு செய்தனர். அப்போது சாதனை மலர் புத்தகம் வெளியிடப்பட்டது. சிலை நிறுவப்பட்டது தொடர்பான அனைத்து தொழில்நுட்ப விளக்கங்களும், அப்புத்தகத்தில் செவ்வனே விளக்கப் பட்டிருக்கும்.



'சாதனை மலர்' புத்தகம் வெளியிடுதல்

கடந்த 28.01.2005 அன்று திரு.கணபதி ஸ்தபதிக்கு முரசொலி அறக்கட்டளை சார்பில் 'கலைஞர் விருது' வழங்கி ரூபாய் 1 இலட்சம் கொடுத்து கௌரவித்தார் கலைஞர் அவர்கள். அவ்விழாவில் கலைஞர் மேடையில் பேசியதைக் கேட்ட அனைவரும் இருவருக்கும் உள்ள அன்பின், நட்பின் நெருக்கத்தை உணர்ந்து கொண்டனர். அவ்வன்பு அரசியல், அந்தஸ்து, பதவி போன்ற எதையும் பொருட்படுத்தாத தூய அன்பு!

## திரு. R.M. வீரப்பன் அவர்களுடன் ...

கணபதி ஸ்தபதி அவர்கள் கல்லூரி முதல்வராக இருந்த போது திரு. இராம வீரப்பன் அவர்கள் தமிழக இந்து அறநிலையத்துறை அமைச்சராக இருந்தார்.

ஒரு நாள் திரு. வீரப்பன் அவர்கள் மாமல்லபுரத்திற்கு விஜயம் செய்து அங்குள்ள சிற்பங்களைப் பார்த்துக் கொண்டிருக்கும் போது அங்குள்ள பஞ்ச பாண்டவர் இரதம் என்றழைக்கப்படும் இடத்தில் நின்று கொண்டு ‘‘இங்கு பஞ்சபாண்டவர் பெயர் திடீரென்று வருவதற்கு என்ன காரணம்? அவர்களுக்கும் இந்த சிற்பங்களுக்கும் என்ன சம்மந்தம்?’’ என கேள்வி எழுப்பினார். அங்கிருந்த ஒருவருக்கும் பதில் சொல்லத் தெரியவில்லை. அப்படிச் சொன்னாலும் அந்த பதிலில் அவர் திருப்தி அடையவில்லை.

‘‘இதற்குச் சரியான விளக்கம் யார் தருவார்கள்?’’ என்று அவர் வினவியதற்கு அனைவரும் ‘‘அருகிலுள்ள அரசு சிற்பக்கலைக் கல்லூரியின் முதல்வர் திரு. கணபதி ஸ்தபதியை அழைத்துக் கேட்கலாம். அவர் கண்டிப்பாக சரியான விளக்கம் தருவார்’’ என்றதும் உடனே ஸ்தபதியை அழைத்து வர ஆள் அனுப்பப் பட்டது.

'ஸ்தபதி வந்ததும் திரு.வீரப்பன் அவரிடம் ‘‘இதற்கு ஏன் பஞ்சபாண்டவர் இரதம் என்று பெயர் வந்தது? உங்களால் சொல்ல முடியுமா ஸ்தபதி?’’ என்று கேட்டார்.

‘‘அய்யா! இந்தச் சிலைகளுக்கும் பஞ்ச பாண்டவருக்கும் ஒரு தொடர்பும் இல்லை. இங்குள்ள ஐந்து கோவில்களும்

தமிழகத்தில் வழங்கப்பட்டு வரும் ஐந்து விதமான நிலங்களைக் குறிக்கும். அந்தந்த நிலங்களுக்குச் சொந்தமான தெய்வங்களான கொற்றவை, விஷ்ணு, முருகன் போன்ற தெய்வங்களின் திருவுருவங்கள் செதுக்கப் பட்டிருப்பதைக் காணலாம்.'' என்று தனக்கே உரிய பாணியில் விளக்கிச் சொன்னதும், திரு.வீரப்பன் அவர்கள் மகிழ்ந்து அவரைப் பாராட்டினார்.

பிறகு, ஒரு நாள் திரு. வீரப்பன் அவர்களிடமிருந்து திரு.ஸ்தபதிக்கு அழைப்பு வந்தது. மதுரையில் எட்டாவது உலகத் தமிழ் மாநாடு நடத்த இருப்பதாகவும் அதற்கு வேண்டிய சிற்பப் பணிகள் பற்றிப் பேசுவதற்காகவும் அழைப்பு அனுப்பப் பட்டிருந்தது.

திரு. வீரப்பன் அவர்கள் ஸ்தபதியிடம், ''மதுரையில் எட்டாவது உலகத் தமிழ் மாநாடு நடைபெறுவதை ஒட்டி அதன் நினைவாக மதுரை நகருக்கு வந்து சேரும் முக்கிய சாலைகளில், எட்டுத் திக்கிலும் எட்டுத் தோரண வாயில்கள் அமைக்கத் திட்டமிட்டுள்ளோம். மொத்தம் 90 நாட்கள்தான் உங்களுக்குத் தரப்படும். கட்ட முடியுமா?'' என்று கேட்டார்.

ஸ்தபதி உடனே ''முடியும் அய்யா. மதுரை என் தாயார் பிறந்த ஊர். அதனால் இந்த ஊரில் எனக்கு வேலை செய்ய ஆட்கள் கிடைப்பது ஒன்றும் சிரமம் இல்லை.'' என்று கூறினார்.

அதன் பிறகு ''தமிழ்த்தாய் சிலை ஒன்று மதுரை தமுக்கம் மைதானத்தில் பிரதமர் திருமதி.இந்திரா காந்தி அவர்களால் திறந்து வைக்க எண்ணியுள்ளோம். அச்சிலையும் நீங்கள்தான் செய்ய வேண்டும்'' என்று திரு.வீரப்பன் அவர்கள் கேட்டார்.

அனைத்தையும் குறித்த நேரத்தில் முடித்துத் தருவதாக ஒப்புக் கொண்ட ஸ்தபதி அதற்கான ஆயத்தங்களைச் செய்யத் தொடங்கினார். உள்ளூரில் உள்ள ஆட்களையே வேலைக்கு அமர்த்திக் கொள்வது என்று முடிவு செய்யப்பட்டது. ஆனால், அத்தனை ஆட்களும் அந்த சமயத்தில் வெவ்வேறு பணிகளில் வெவ்வேறு நிறுவனங்களின் கீழ் பணிபுரிந்து கொண்டிருந்தனர்.

ஸ்தபதி ஆட்களைப் பணியில் அமர்த்ததுவதற்கு முன்னர் அவர்கள் பணிபுரிந்து கொண்டிருந்த நிறுவனங்களின் அனுமதி பெற்ற பின்னர்தான் அவர்களை சேர்த்துக் கொள்ள முடியும் என்றதால், அவ்வாறே ஏற்பாடு செய்யப்பட்டது. அனைவரும் இது அரசாங்கத்தின் முக்கியபணி என்பதாலும், ஸ்தபதியின் தலைமையின் கீழ் பணிபுரிய மிகவும் ஆவலாய் இருந்ததாலும் உடனே ஒப்புக் கொண்டனர்.

திரு.கணபதி ஸ்தபதி தலைமையில் ஒரு தோரணவாயிலுக்கு 45 ஆட்கள் வீதம் 8 தோரண வாயில்களுக்கான பணிகளும் ஒரே நேரத்தில் ஆரம்பிக்கப்பட்டன.

தமிழ்த்தாய் சிலை ஒன்றை நிறுவிட வேண்டும் என்று முதல்வர் திரு.எம்.ஜி.ஆர். அவர்கள் விருப்பப்பட்டதால் சிலையை முடிக்க போதிய அவகாசம் இல்லாததால், கம்பன் அடிப்பொடி திரு.சா.கணேசன் அவர்களால் கட்டப்பட்டுக் கொண்டிருந்த கம்பன் மணிமண்டபத்திற்காகச் செய்யப்பட்ட பாதிப் பணி முடிவடைந்த சிலை ஒன்று இருந்ததால், அன்னாரின் அனுமதியுடன் மீதிப் பணியை முடித்து, அச்சிலையையே இதற்குப் பயன்படுத்தலாம் என்று முடிவெடுக்கப்பட்டது.

50 அடி அகலம் கொண்டதாக 8 தோரண வாயில்களும், அழகிய தமிழ்த்தாய் சிலையும் குறிப்பிட்ட கெடுவான 90 நாட்களுக்கு முன்னதாகவே முடிக்கப்பட்டன.



நிர்வாக அலுவலகக்கட்டிடம்,தஞ்சைத் தமிழ்ப் பல்கலைக் கழகம்



நூலகக்கட்டிடம்,தஞ்சைத் தமிழ்ப் பல்கலைக் கழகம்

ஸ்தபதியின் இப்பணிகளால் மிகவும் கவரப்பட்ட திரு.வீரப்பன் அவர்கள், தஞ்சையிலுள்ள தமிழ் பல்கலைக் கழகத்தின் நூலகக் கட்டிடத்தையும், நிர்வாக அலுவலகக் கட்டிடத்தையும் கட்டித் தரும்படி பணித்தார்.

250 அடி விட்டமும், 35 அடி உயரமும் கொண்ட தஞ்சைத் தமிழ்ப் பல்கலைக்கழக நூலகக் கட்டிடம் வட்ட வடிவமாகக் காண்போர் மனதைக் கொள்ளை கொள்ளும் வண்ணம் கட்டப்பட்டது. 1987ல் அக் கட்டிடத்தைக் கட்டி முடிக்க செலவு ரூபாய் 164 இலட்சங்கள் ஆனது.

123 அடி உயரமும் 386 அடி நீளமும் கொண்ட தஞ்சைத் தமிழ்ப் பல்கலைக் கழகத்தின் நிர்வாக அலுவலகக் கட்டிடம் கட்டி முடிக்க ரூபாய் 280 இலட்சங்கள் செலவானது.இவ்விரண்டு கட்டிடங்களும் கட்டிடக் கலையின் மாண்பிற்கு உதாரணங்கள் ஆகும். இவ்விரண்டு கட்டிடங்களும் திரு.கணபதி ஸ்தபதி அரசுப் பணியில் இருந்த போது கட்டப்பட்டது என்றாலும், அதற்குத் தேவையான சிற்பிகளையும் பொறியாளர்களையும் நியமித்து விட்டு அவர் மகாபலிபுரம் வந்து விடுவார். ஒவ்வொரு வாரமும் வெள்ளி மாலை புறப்பட்டு, சனி மற்றும் ஞாயிற்றுக் கிழமைகளில் அங்கு தேவையான பணிகளைச் செய்து விட்டு வருவார்.

அங்கு தங்கியிருக்கும் இரண்டு நாட்களிலும் விடியற்காலையிலேயே எழுந்து கட்டிடங்களையே ஆவலுடன் பார்த்துக் கொண்டு நின்றிருப்பாராம். ''என்ன பார்க்கிறீர்கள்?'' என்று யாராவது வினவினால் ''என் மகளைப் பார்த்துக் கொண்டிருக்கிறேன்'' என்று பதிலளிப்பார். இவ்விதம் கட்டிடங்களையே உயிர்ப்பொருளாக, அவரது படைப்புகளையே குழந்தைகளாக பாவிக்கும் அவரது பண்பு மிகவும் உயரிய பண்பு!

அந்தக் காலக்கட்டத்திலே, திரு. வீரப்பன் அவர்கள் ஸ்தபதியிடம் ஒருநாள் ''மகாபலிபுரத்தில் அதிக அளவில்

சிற்பங்கள் இருந்தாலும், நமது பழங்கால வரலாற்றை விளக்கும் வகையில் சேர, சோழ, பாண்டிய மன்னர்களின் வரலாற்றை கல்லிலே சிற்பங்களாகச் செய்து, அதை ஒரு திறந்த வெளி கண்காட்சியகமாகச் **(Open air Museum)** செய்திட முடியுமா?'' என்று கேட்டார்.

ஸ்தபதியும் ''கண்டிப்பாக முடியும்'' என்று சொன்னதும், திரு.வீரப்பன் உடனே, ஆவன செய்வதாகக் கூறினார். அரசாங்க முறைப்படி வேண்டிய ஆவணங்கள் கிடைத்ததும் ஸ்தபதி அவர்களும் அதற்கான வேலைகளில் மூழ்கினார்.

அப்போது மனுநீதி சோழனது வரலாற்றைச் சித்தரிக்கும் வகையில் ஒரு சிற்பமும், மிகவும் அழகான ஒரு தோரண வாயிலும் செய்து முடித்திருக்கும் போது, அப்பணியை எதிர்பாராத விதமாக நிறுத்த வேண்டிய கட்டாயம் ஏற்பட்டது. மத்திய அரசின் தொல் பொருள் ஆய்வுத் துறை அனுமதி மறுத்ததின் காரணமாக அந்தப் பணியை நிறுத்த வேண்டிய கட்டாயம் ஏற்பட்டது. மிகவும் வருத்தத்துடன் நிறுத்தினாலும், அந்தச் சிலைகளை என்ன செய்வது என்று யோசித்தனர்.

தோரண வாயில் கற்பணிக்கே ஒரு சவாலாக ஏற்றுக் கொள்ளப்பட்டு செய்யப்பட்டது. அந்த அழகான தோரண வாயில் தஞ்சைத் தமிழ்ப்பல்கலைக் கழகத்தின் நுழைவு வாயிலில் வைக்கப்பட முடிவு செய்யப்பட்டது.

அப்போது சென்னை உயர்நீதி மன்றத்தின் நூற்றாண்டு விழா கொண்டாடப்படப் போவதாகவும் அதற்கு அழகான சிலை ஒன்று வேண்டும் என்றும் அதன் தலைமை நீதிபதி ஸ்தபதியை

அணுகினார்கள். அப்போது ஸ்தபதி அவர் செய்த மனுநீதி சோழன் சிலையைக் காண்பித்தார். ஒரு கன்றுக்குட்டியைத் தேர் ஏற்றிக் கொன்றதால் நீதி கேட்டு வந்த தாய்ப் பசுவிற்கு நீதி வழங்கும் பொருட்டு கன்றுக்குட்டியைத் தேர் ஏற்றிக் கொன்றவனைத் தன் மகன் என்றும் பாராமல் கொல்லும்படி நீதி வழங்கிய நீதி வழுவா மனுநீதி சோழன் சிற்பம் அனைவருக்கும் நீதி வழங்கும் நீதி மன்றத்தில், அதுவும் நூற்றாண்டுகால பாரம்பரியம் மிக்க நீதிமன்றத்தில் நிறுவுவது மிகவும் பொருத்தம்தானே!



சமநீதி கண்ட சோழன், சென்னை

தலைமை நீதிபதி அச் சிலையைப் பார்த்து மிகவும் மகிழ்ந்து, அச்சிலையை உயர்நீதி மன்றத்தில் நிறுவுவதற்கு ஒப்புதல் அளித்தார். இன்றும் சென்னை உயர்நீதி மன்றத்தில் அழகுற அச்சிலை நிற்கிறதைக் காணலாம்.

அன்னாளிலிருந்து இன்று வரை திரு.வீரப்பன் அவர்களுக்கும் திரு.கணபதி ஸ்தபதிக்கும் மிகவும் உயர்ந்த நட்பு நிலவி வருகின்றது. முன்னவர் அரசியலில் இருந்து விலகி இலக்கியப் பணிகள் செய்து வருகிறார். பின்னவர் அரசாங்கப் பணியிலிருந்து ஓய்வு பெற்று வாஸ்து மற்றும் சிற்பக் கலை ஆராய்ச்சி செய்து வருகிறார்.

திரு.ஸ்தபதி எழுதிய அனைத்து நூல்களையும் திரு. வீரப்பன் அவர்களுக்குப் படிப்பதற்காக அனுப்பி வைப்பது அவருடைய வழக்கம். ஒவ்வொரு புத்தகத்தையும் படித்து முடித்ததும் அது பற்றிய கருத்தை உடனே தொலை பேசி மூலம் தெரிவிப்பது திரு.வீரப்பன் அவர்களுடைய வழக்கம்.

அவர் நடத்தி வரும் ஆழ்வார்கள் ஆராய்ச்சி மையம் மூலமாக இலக்கியத்திற்கும், சமூகத்திற்கும் பெரும் பணியாற்றியவர்களை ஒவ்வொரு வருடமும் திரு. வீரப்பன் அவர்கள் கௌரவிப்பார். 2000ம் வருடம் திரு. கணபதி ஸ்தபதி அவர்களையும், இந்திய ஜனாதிபதி டாக்டர் அப்துல் கலாம் அவர்களையும் [அப்போது அவர் ஜனாதிபதியாகப் பதவி ஏற்றிருக்கவில்லை.] ஒரே மேடையில் கௌரவித்தார். அப்போது அவருக்குக் கலைஞர் விருதும், டாக்டர் அப்துல் கலாம் அவர்களுக்கு இராமானுசர் விருதும், டாக்டர் செல்லப்பன் அவர்களுக்கு அண்ணா விருதும், டாக்டர் வலம்புரி ஜான் அவர்களுக்கு எம்.ஜி.ஆர். விருதும் வழங்கப்பட்டது.

அன்னாரது நட்பு கிடைத்தமைக்காக ஸ்தபதி அவர்கள் மிகவும் பெருமைப்படுகிறார்.

## திரு. எம்.ஜி.ஆர். அவர்களுடன்...

திரு. கணபதி ஸ்தபதி அவர்கள் சிற்பக் கலைக் கல்லூரியில் முதல்வராகப் பணியாற்றிக் கொண்டிருந்த போது அப்போதைய அறநிலையத் துறை அமைச்சராக இருந்த திரு.இராம வீரப்பன் அவர்கள் ஒருநாள் கல்லூரிக்கு வருகை தந்திருந்தார். தமிழகத்தின் முதல்வரான திரு. எம்.ஜி.ஆர். அவர்கள் திரு.ஸ்தபதியைப் பார்க்க விரும்புவதாகவும், தஞ்சையில் தமிழ் மொழிக்கென்று ஒரு பல்கலைக் கழகம் அமைக்க இருப்பதாகவும், அதற்கான கட்டிடம் மற்றும் வரைபடங்கள் பற்றிப் பேச விரும்புவதாகவும் தெரிவித்தார்.

ஸ்தபதி அவர்கள் அரசாங்கப் பணியில் இருந்ததால் யார் முதல்வராக இருந்தாலும் அரசாங்கம் உத்தரவிடும் கட்டிடம் மற்றும் சிற்பப் பணிகளை நிறைவேற்ற வேண்டிய பொறுப்பில் இருந்தார். கலைஞர் அவர்கள் முதல்வராக இருந்த போது அதிகமான அளவில் சிற்பப் பணிகள் கட்டப்பட்டதால் அனைவரும் திரு.ஸ்தபதி அவர்கள் கலைஞர் தலைமை தாங்கும் கட்சியைச் சேர்ந்தவர் என்று தவறாக எண்ணினர். ஆனால், இன்று வரை திரு. ஸ்தபதி அவர்கள் எந்தக் கட்சியைச் சேர்ந்தவராகவும் இல்லாமல் நடு நிலைமையாகத்தான் செயல்படுகிறார்.

அதே சந்தேகத்துடன் வந்த திரு.இராம வீரப்பன் அவர்கள் ‘‘திரு.எம்.ஜி.ஆர். அவர்களுக்கு திரு.எம்.ஜி.ஆர். விரும்பும் வகையில் ஸ்தபதி பணிபுரிவாரா’’ என்று ஐயத்துடன் வினவினார்.

சற்றும் தயங்காமல் ஸ்தபதி அவர்கள் ‘‘நான் ஓர் அரசாங்க ஊழியன். அரசாங்கம் என்னை எந்தப் பணியில் நியமிக்கிறதோ

அந்தப் பணியை நிறைவேற்றக் கடமைப்பட்டுள்ளேன். எந்த முதல்வருக்கும் நற்பெயர் வாங்கித் தருவேன்'' என்றார்.

திரு.வீரப்பன் அவர்கள் ஸ்தபதியின் இந்த விடையில் மகிழ்ந்து, திரு.எம்.ஜி.ஆர். அழைக்கும் போது வரும்படி பணித்து விட்டுச் சென்றார். ஸ்தபதியும் அவரிடமிருந்து அழைப்பு வந்ததும் போகலாம் என்றிருந்தார்.

ஒருநாள் ஃபிஜித் தீவிலிருந்து சிலர் மாமல்லபுரம் சிற்பக் கலைக்கல்லூரிக்கு விஜயம் செய்திருந்தனர். அவர்கள் அனைவரும் முதலமைச்சர் திரு.எம்.ஜி.ஆர். அவர்களை சந்தித்து முதலமைச்சர் நிவாரண நிதிக்கு நன்கொடை அளிக்க விரும்பினர். அவர்கள் ஸ்தபதியிடம் முதலமைச்சரிடம் அழைத்துப் போகும்படி கூறினர். ஸ்தபதியும் சம்மதிக்கவே, அனைவரும் திரு.எம்.ஜி.ஆரைச் சந்திப்பதற்குச் சென்றனர்.

ஸ்தபதி எம்.ஜி.ஆர். அவர்களைத் திரைப் படங்களில் பார்த்ததுடன் சரி. அப்போதுதான் நேரில் சந்திக்கப் போகிறார். தன்னை எவ்வாறு அறிமுகம் செய்து கொள்வது என்று தயங்கியவாறே உள்ளே நுழைந்தவரை திரு. எம்.ஜி.ஆர். அவர்கள் ''அட நம்ம ஸ்தபதி! உள்ளே வாருங்கள்'' என்று முன்பே பரிச்சயம் ஆனவரைப் போன்று ஸ்தபதியை வரவேற்றதும், ஸ்தபதி ஒரு கணம் வியப்பின் எல்லைக்கே சென்று விட்டார்.

ஒரு மாநிலத்தின் முதல்வர், அனைத்து தரப்பு மக்களின் நன்மதிப்பைப் பெற்று, முதல்வர் பதவிக்கு வந்திருப்பவர், அவர் இவ்வளவு எளிமையாக இருப்பார் என்று, ஸ்தபதி அவர்கள் சிறிதும் எதிர்பார்க்கவில்லை.

அன்புடன் அமரும்படி உபசரித்து, வந்திருந்தவர்களை ஸ்தபதி அறிமுகப்படுத்தியதும் அவர்களுடன் அளவளாவி, அவர்கள் திரு.எம்.ஜி.ஆர். அவர்களுடன் புகைப்படம் எடுக்கவேண்டும் என்றதும், அன்புடன் சம்மதித்து, தயங்கி நின்ற ஸ்தபதியையும் அருகில் நிற்க வைத்து புகைப்படம் எடுத்துக்கொண்ட பாங்கு, அனைத்திலும் ஓர் எளிமையையும், இனிமையையும் திரு. எம்.ஜி.ஆர். அவர்களிடம் கண்டார் ஸ்தபதி. அங்ஙனம் எளிமையாய் இருந்ததினால்தான் மக்கள் திலகமாக இருந்து மாநிலத்தின் முதல்வராகவே மாற முடிந்ததோ?

தஞ்சையில் தமிழ் மொழிக்கென ஒரு பல்கலைக்கழகம் அமைக்க வேண்டுமென்று திரு.எம்.ஜி.ஆர். அவர்கள் எண்ணத்தில் உதித்ததும் அதற்கான கட்டிடத்தின் வரைபடங்களையும், மாதிரி வடிவங்களையும் அரசாங்க ஒப்பந்தப் புள்ளி மூலம் வரவழைத்தார். மொத்தம் 45 மாதிரி வடிவங்கள் வந்து குவிந்தன. அவற்றிலிருந்து தகுதியான ஒன்றைத் தேர்ந்தெடுக்கும்படி, ஸ்தபதியிடம் எம்.ஜி.ஆர். அவர்கள் சொல்லி அனுப்பியதற்கிணங்க, ஸ்தபதி அவர்கள் தமிழ்ப் பல்கலைக் கழகத் துணை வேந்தர் அவர்களைச் சந்திக்கச் சென்றார்.

அங்கு, அவர் கொடுத்த வரைபடங்களையும், மாதிரி வடிவங்களையும் பார்வையிட்ட ஸ்தபதியின் மனதிற்குப் பிடித்த வகையில் ஒன்று கூட அமையவில்லை. இதனைத் தயங்காமல் திரு.எம்.ஜி.ஆர். அவர்களிடம் வெளிப்படுத்தச் செய்தார். வேறு ஒரு வரைபடம் அவரையே தயாரித்து அளிக்கும்படி ஸ்தபதியிடம் கேட்டுக் கொண்டார்.

அதன்படி ஸ்தபதி அவர்கள் தயாரித்துக் கொடுத்த வரைபடம்தான் தற்போது தஞ்சையில் உள்ள வட்ட வடிவ தமிழ்ப் பல்கலைக்கழக நூலகக் கட்டிடம். ஸ்தபதி அவர்களாலேயே வரைபடம் தயாரிக்கப்பட்டு, கட்டிடம் முழுவதும் அவர்களாலேயே கட்டப்பட்டுக் கவினுற விளங்கும் ஒன்றாக அது அமைந்தது. 1987ல் அக்கட்டிடத்தைக் கட்டி முடிக்க ஆன செலவு ரூபாய் 164 இலட்சங்கள் ஆகும். அது திரு.எம்.ஜி.ஆர். அவர்களாலேயே தொடங்கி வைக்கபட்டது.

மதுரையில் நடைபெற்ற எட்டாவது உலகத் தமிழ் மாநாட்டிற்கென தமிழ்த்தாய் சிலை ஒன்று செய்ய வேண்டும் என்று திரு.எம்.ஜி.ஆர். அவர்களின விருப்பமாக இருந்தது. பேசப்படும் மொழியாக இருந்த தமிழைக் காண்பதற்கு ஒரு வடிவம் **(Personification of Tamil)** அமைத்துப் பார்க்க வேண்டும் என்கிற அவரது அவா மிகவும் புதுமையாகவும், அனைவராலும் பாராட்டப்படுவதாகவும் இருந்தது.

அச்சிலை மதுரை தமுக்கம் மைதானத்தில் நிறுவப்பட வேண்டும் என்றும் விரும்பினார். ஸ்தபதி அவர்கள் கம்பன்அடிப்பொடி திரு.சா.கணேசன் அவர்களின் உத்தரவின் பேரில் காரைக்குடியில் நிறுவுவதற்காகத் தமிழ்த்தாய்ச் சிலை ஒன்றை செதுக்கத் தொடங்கி அது முடியும் தறுவாயில் இருந்தது. இவ்விஷயத்தை திரு.இராம. வீரப்பன் மூலமாகத் தெரிந்து கொண்ட திரு. எம்.ஜி.ஆர். அவர்கள் அச்சிலையைத்தான் காண விரும்புவதாகச் சொன்னார்.

எனவே, ஸ்தபதி அச்சிலையை செதுக்கிக் கொண்டிருந்த அவரது மகாபலிபுர இல்லத்திற்கே ஒரு நாள் திடீரென்று வருகை



தமிழ்த்தாய் சிலை, மதுரை

தந்து விட்டார். ஒரு மாநில முதல்வரைக் காணப் போகும் ஆர்வத்தில் ஸ்தபதியின் இல்லத்தில் மாபெரும் கூட்டம்.

சிலையினை நேரில் கண்ட திரு.எம்.ஜி.ஆர். அவர்கள் அச்சிலையையே மதுரைக்குத் தரும்படி கேட்டுக் கொண்டார். அவ்வாறே ஸ்தபதி அவர்களும் திரு.சா.கணேசன் அவர்களிடம் அனுமதி பெற்றுக் கொண்டு அச்சிலையை மதுரை தமுக்கம் மைதானத்தில் நிறுவுவதற்கு அளித்தார்.

மிகவும் அழகாக, ஏராளமான கலைநுணுக்கங்களுடன் அமைக்கப் பட்ட சிலையாக அது அமைந்தது. கம்பீரமாக அமர்ந்திருப்பதைப் போன்று அமையப் பெற்ற அச்சிலையின் பின்புறத்தில் வெண்கொற்றக் குடையைப் போன்ற அமைப்பு கருங்கல்லில் தனியாக செய்யப்பட்டு சிலையுடன் இணைக்கப் பட்டருக்கும். சிலையை திரு.எம்.ஜி.ஆர். அவர்களும், திரு.வீரப்பன் அவர்களும் மிகவும் பாராட்டி மகிழ்ந்தனர்.

அப்போதைய பிரதமர் திருமதி இந்திரா காந்தி அவர்களால் அச்சிலை நாட்டிற்கு அர்ப்பணிக்கப் பட்டது.

ஸ்தபதி அவர்களுக்கு, ஒரு நண்பர் மூலமாகப் புலவர் ஒருவர் அறிமுகமானார். அவர் மிகுந்த மனன சக்தி உடையவர். பழைய ஓலைச் சுவடிகள் நிரம்பப் படித்து மனனம் செய்தவர். அவர் ஸ்தபதியிடம் ஒருநாள் வந்து பழைய தமிழ் நூல்கள் சிலவற்றைத்தனது மனன சக்தியின் மூலம் ஒப்பித்துக் காண்பித்தார்.

கட்டிடக் கலை மற்றும் சிற்பக்கலையின் குருவான மயன் என்பவனால் சொல்லப்பட்டதாகக் கூறப்படும் அந்த நூல்கள் மயமதம், சிற்பமாச் செந்நூல், விண்கலச் செந்நூல், ஐந்திறம் போன்ற நூல்களின் பாடல்களை அவர் கூறத் தொடங்கியதும் ஸ்தபதி அவர்கள் மிகவும் மகிழ்ந்து தன் பிறவிப் பயனை அடைந்தது போன்று எண்ணம் கொண்டார். அதிலும், ஐந்திறம் என்ற நூல் தொல்காப்பியத்திற்கும் முந்தைய நூலாகக் கருதப்படுகிறது. தொல்காப்பியத்திற்கு அணிந்துரை எழுதிய பெரும்பாறனார் என்பவர் 'ஐந்திறம் நிறைந்த தொல்காப்பியம்' என்று எழுதுகிறார்.

அப்படிப்பட்ட ஐந்திறம் நூலின் பாடல்களைக் கிடைக்கப் பெற்றவுடன் மிகவும் மகிழ்ந்து, அந்நூலைப் பற்றி முதல்வர் திரு. எம்.ஜி.ஆர். அவர்களிடம் விளக்கிப் பேசினார்.

அந்நூலைப் பற்றியும், அதில் விளக்கியுள்ள சாஸ்த்திரங்களைப் பற்றியும் அறிந்து மகிழ்ந்த திரு.எம்.ஜி.ஆர். அவர்கள் தொழில் நுட்பக் கல்வித்துறை மூலமாக அந்நூலைப் பதிப்பதற்கு ஆவன செய்தார். பின்னர் தமிழர் மாநாடு ஒன்றைக் கூட்டி, அந்நூலைப் புலவர்கள் நிறைந்த அம்மாநாட்டில் வெளியிட்டார். மொத்தம் ஆயிரம் பிரதிகள் வெளியிடப்பட்டன.

உரையில்லா விஞ்ஞான சூத்திரங்களாக இருந்தமையால், இவற்றை எவரும் ஆய்வு செய்திடவில்லை. அதனால் ஐந்திறம் என்ற நூலுக்குப் போதிய வரவேற்பு இல்லை என்று கூடச் சொல்லலாம். இந்த ஐந்திற சூத்திரங்கள் இயல், இசை, நடம், சிறபம், கட்டிடம் ஆகிய நூல்களில் அடங்கிக் கிடப்பதையும் கண்டறிந்தஸ்தபதி அவர்கள் முதலில் 1986ம் ஆண்டு திரு.எம்.ஜி.ஆர். அவர்கள் மூலம் பொது மக்களுக்கு அறிமுகப்படுத்தினார். அந்நூலில் விளக்கப்பட்டுள்ள சாஸ்திரங்களைப் படித்துப் புரிந்து கொண்ட விற்பன்னர்கள் சொற்பமே.

பின்னாளில், ஸ்தபதி அவர்கள் 1997ல் திருவனந்தபுரத்தில், நடத்திய அனைத்துலக மயவிஞ்ஞான மாநாட்டில், **International Seminar on Mayonic Science & Technology** அந்நூலை இன்னும் புரியும்படி தெளிவுரையுடன், தமிழ் மற்றும் ஆங்கில விளக்க வுரையுடன் மறுபடி வெளியிட்டார். இன்றும் ஐந்திறம் என்னும் அந்நூலைப் பற்றித் தனது வாஸ்து வேத ஆய்வு நிறுவனத்தின் மூலமாக ஆராய்ச்சிகள் பல செய்து வருகிறார். பல கருத்தரங்குகளில் அந்நூலைப் பற்றிய விவரங்களைப் பற்றிப்



சென்னை அண்ணாநகரிலுள்ள அழகிய தோரண வாயில்கள்

பேசி வருகிறார். இந்திய ஜனாதிபதி திரு.அப்துல் கலாம் அவர்களைச் சந்தித்த போது கூட இதைப் பற்றிப் பேசி ஐந்திறத்தைப் பற்றி ஸ்தபதி அவர்கள் எழுதும் போதெல்லாம் அதன் பிரதியை ஜனாதிபதி அவர்களுக்கு அனுப்பி வைக்கிறார்.

இவ்வாறு, ஸ்தபதி அவர்களின் வாழ்க்கையில் ஓர் அங்கமாகி விட்ட ஐந்திறம் என்ற நூலை தமிழகத்திற்கு அளிக்கச் செய்தவர் திரு.எம்.ஜி.ஆர். அவர்களே என்பது ஸ்தபதி ஒவ்வொரு கணமும் பெருமையோடு நினைவு கூறும் நிகழ்ச்சியாகும். 'தனது ஆராய்ச்சிக்கெல்லாம் வித்திட்டவர் திரு.எம்.ஜி.ஆர். அவர்களே' என்று ஸ்தபதி அவர்கள் கூறுவது வழக்கம்.

சென்னை மாநகராட்சியின் மூலம் ஸ்தபதி அவர்கள் கட்டுவித்த சென்னை அண்ணா நகர் தோரண வாயில் அப்போதைய முதல்வர் திரு.எம்.ஜி.ஆர். அவர்களால் திறந்து வைக்கப்பட்டது. பூந்தமல்லி நெடுஞ்சாலை வழியாகச் சென்னைக்குள் நுழையும் எவரும் அந்தத் தோரண வாயில்களைக் கண்டு களிக்காமல் இருக்க முடியாது. அந்தப் பணி நடைபெறும் போது திரு.எம்.ஜி.ஆர்.அவர்கள் அடிக்கடி நேரில் வந்து, பணிகளைப் பார்வையிட்டுப் பாராட்டியும், கருத்துக்கள் கூறியும் வந்ததைத் 'தான் பெற்ற பெரும் பேறு' என்று ஸ்தபதி அவர்கள் குறிப்பிடுவார்.

திரு. எம்.ஜி.ஆர். அவர்கள் தமிழக முதல்வராக இருந்த போது நடந்த ஒரு முக்கிய நிகழ்ச்சியை திரு. கணபதி ஸ்தபதி அவர்கள் மிகவும் நெகிழ்ச்சியுடன் நினைவு கூர்வார்.

ஜப்பானிலுள்ள ஒரு நிறுவனம், பிரம்மாண்டமான புத்தர் சிலைகள் இரண்டு செய்து ஒன்றை இந்தியாவில் சாரநாத் என்ற

இடத்திலும், மற்றொன்றை இலங்கையிலும் நிர்மாணிப்பது என்று தீர்மானித்தது. சிலையைச் செய்வதற்கு வரைபடங்கள் தயாரித்தபின் அந்நிறுவனத்திற்குப் பெருத்த சந்தேகம் ஒன்று எழுந்தது.சிலையின் எடையை எப்படி குறைப்பது என்பதுதான் அது. எடையைக் குறைக்காவிடின் சிலையை நிர்மாணம் செய்யும் பொழுது பிரச்சனைகள் ஏற்படுமே என்று கருதி, 'இந்தியர்கள்தான் கருங்கற் சிலைகள் செய்வதில் ஜாம்பவான்கள் ஆயிற்றே, அவர்களை அணுகினால் யோசனை சொல்வார்களே' என்று நினைத்து இந்திய அரசாங்கத்திடம் இக்கோரிக்கையை வைத்தது அந்நிறுவனம்.



அப்போது பிரதம மந்திரியாக இருந்த திருமதி இந்திரா காந்தி அம்மையார் அவர்கள், தென்னிந்தியாவில், அதுவும் குறிப்பாகத் தமிழ்நாட்டில்தான், கற்சிற்பங்கள் செய்யும் நிபுணத்துவம் வாய்ந்த சிற்பிகள் பலர் உள்ளார்கள் என்று எண்ணி, தமிழக எம்.பி. **(M.P)** ஒருவரை அழைத்து ஆவன செய்யும்படி ஆணையிட்டார். அவர் உடனே திரு.கணபதி ஸ்தபதி அவர்களை அணுகினார்.

அவர் அப்போது மாமல்லபுரம் சிற்பக் கலைக் கல்லூரியில் முதல்வராகப் பணிபுரிந்து கொண்டிருந்தார். ஜப்பானிய நிறுவன அதிகாரிகளைத் தனது கல்லூரிக்கே வரவழைத்தார். அவர்களது சந்தேகங்களைக் கேட்டறிந்து, சிலையின் எடையைக் குறைக்க சிலையை உள்ளீடற்றதாகச் **(Hollow)** செய்யலாம் என்ற கருத்தைத் தெரிவித்து, அதற்கான வரைபடங்களை, மாதிரி வரைபடங்களாக **(Rough sketch)** வரைந்து காட்டினார்.

அதைக் கண்ட ஜப்பானிய அதிகாரிகள், மிகவும் மகிழ்ந்து, அந்த வரைபடங்களை நேர்த்தியாக வரைந்து தரும்படி கூறினர். பின்னர் ஸ்தபதி அவர்களை ஜப்பான் நாட்டிற்கு வந்து, அவர்களது பொறியாளர்களுக்கு விளக்கமாக எடுத்துரைக்க வேண்டும் என்றும் வேண்டுகோள் விடுத்தனர்.

ஸ்தபதி அவர்கள் உடனே, அவர் ஓர் அரசாங்க ஊழியன் என்றும், அரசாங்கத்தின் அனுமதி இல்லாமல் வெளிநாட்டுப் பயணம் மேற்கொள்ளக் கூடாது என்றும், அரசாங்கத்திடம் அனுமதி கேட்டுப் பார்ப்பதாகவும் கூறி விட்டார்.

அதன்படி முதல்வர் திரு.எம்.ஜி.ஆர். அவர்களைத் தொடர்பு கொண்டு ஜப்பானிய நிறுவனத்தின் வேண்டுகோள் பற்றி விளக்கினார். திரு.எம்.ஜி.ஆர். அவர்கள் உடனே ‘‘ஸ்தபதி! இது போன்ற வாய்ப்புகள் கிடைப்பது மிகவும் அபூர்வம். அதை நீங்கள்

பயன்படுத்திக் கொள்ள வேண்டும். நமது கலைத்திறமை வெளிநாட்டு மக்களால் உணரப் படுவதற்கு இதை விட நல்ல வாய்ப்பு கிடைக்காது. எனவே, அதற்கான விண்ணப்பத்தை அனுப்புங்கள். நான் உடனடியாக ஆவன செய்கிறேன்'' என்று கூறியது மட்டுமல்லாமல் அதற்கான ஏற்பாடுகளையும், அனுமதி விரைவாகக் கிடைப்பதற்கும் முதலமைச்சர் என்ற முறையில் துரிதமாக நடைபெறச் செய்தார்.

அதன்படி ஸ்தபதியும் ஒரு வார காலத்திற்குள் ஜப்பான் சென்று விட்டார். முதலமைச்சர் என்ற உயரிய பதவியில் இருந்தும் நமது கலை வெளிநாட்டில் உணரப்பட வேண்டும் என்பதில் அவர் காட்டிய தீவிரமும், கொடுத்த வாக்கைக் காப்பாற்ற அவர் மேற்கொண்ட விரைவான முயற்சிகளையும் ஸ்தபதி அவர்கள் மிகவும் மகிழ்ச்சியோடும் நன்றியோடும் நினைவு கொள்வார்.

திட்டப்படி அவர் ஜப்பானிய நாட்டிற்குச் சென்று, அங்கு பதினைந்து நாட்கள் தங்கி, சிலையின் வரைபடத்தை முழுமையாக வரைந்து கொடுத்து விட்டு வந்தார். அங்கு தங்கியிருந்த நாட்களில் அம்மக்கள் காட்டிய அன்பையும், விருந்து உபசாரத்தையும் மறக்கவே முடியாது என்பார் ஸ்தபதி அவர்கள். அரிசி உணவையே சாப்பிட்டுப் பழகி விட்ட ஸ்தபதிக்கு அவ்வுணவு அங்கு கிடைக்காமையால் சரிவர உணவருந்தாமல் களைப்பாக இருந்ததைப் பார்த்து, விவரம் அறிந்த அதிகாரிகள், அரிசி உணவு கிடைக்கும் அருகிலுள்ள ஊருக்கு விமானம் மூலம் அனுப்பி வைத்து அங்கு ஒரு நாள் தங்க வைத்து ஓய்வு கொடுத்தனர். அந்நாட்டு மக்களின் விருந்தோம்பலை இன்றளவும் மனம் விட்டுப் பாராட்டுவார் ஸ்தபதி அவர்கள்.

இவ்விதம், ஜப்பான் நாட்டிற்காகக் கலைப்பணி ஆற்றுவதற்குப் பேருதவி செய்த திரு. எம்.ஜி.ஆர். அவர்களை நன்றியோடு திரு.கணபதி ஸ்தபதி அவர்கள் நினைந்து மிகவும் மகிழ்ச்சியோடு அந்நிகழ்ச்சிகளை அடிக்கடிப் பகிர்ந்து கொள்வார்.

ஒரு மாநில முதல்வர் இவ்விதம் எளிமையாக இருப்பதுதான் அவர் அனைவரது மனதிலும் இடம் பிடித்ததற்குக் காரணமாக இருக்க முடியும் அல்லவா?

ஸ்தபதி கொடுத்த வரைபடத்தின் படி சிலை செய்யும் பணி அவர் தலைமையிலேயே இந்தியாவில் சாரநாத் என்ற ஊரில் தொடங்கப்பட்டு, அவ்வூர்ச் சிற்பிகளின் உழைப்பில் நடைபெற்றது. சிலையின் பீடமும், சிலையும் உள்ளீ டற்றதாக செய்யப்பட்டு, பீடத்தின் உள்புறத்தில் ஒரு கண்காட்சியகமும் வைப்பதற்கு ஏற்பாடு செய்து கொடுத்தார் ஸ்தபதி. அக்கண்காட்சியகத்தில் புத்தரின் வாழ்க்கையை விளக்கும் படங்கள் இடம் பெற்றன. சுற்றுலாப் பயணிகளைக் கவரும் ஓர் அருமையான ஸ்தலமாக சாரநாத் புத்தர் சிலை விளங்குகிறது.

## இரத்தினகிரி சுவாமிகள் ஸ்ரீபாலமுருகனடிமை அவர்களுடன் ....

தமிழ்நாட்டில் உள்ள வேலூர் என்ற ஊருக்கும், ஆர்க்காடு என்ற ஊருக்கும், இடையே சென்னை பெங்களூர் சாலையில் ஒரு சிறிய மலை குண்டும் குழியுமாக, மேடு பள்ளங்களுடன் புலியும், நரியும் புகுந்து தங்கியிருக்கும் குகைகளுடன் இரத்தினகிரி என்ற ஒரு மலை இருந்தது. அம்மலையின் தெற்குப் பக்கத்தில் உச்சியில் செங்கற்களாலும், சுண்ணாம்பாலும் கட்டப்பட்ட ஒரு மிகப் பழமையான கோவில் இருந்தது. அதில் சுப்பிரமணியசுவாமி என்கிற பாலமுருகன் சுவாமி, வள்ளி, தெய்வயானையின் சிறிய சிலைகள் இருக்கின்றன. இந்த மலையும்,கோயிலும் அங்கிருந்து வடக்கே ஒரு கிலோ மீட்டர் தொலைவில் உள்ள கீழ்மின்னல் என்னும் கிராமத்திற்குச் சொந்தமானவை.

இந்த மலையிலிருந்து கீழ்மின்னல் கிராமம் வரை நஞ்சைநிலங்கள், களிமண் பூமி. ஊருக்கும் கோயிலுக்கும் போய்வர நல்ல பாதை கிடையாது. கழனி வரப்பின் மீதுதான் நடந்து வர வேண்டும். ஒரு கல் ரோடு அந்த ஊரின் கிழக்குக் கோடியிலிருந்து நேராக நந்தியாலம் எனப்படும் ஊருக்கும் சாலைக்கும் வரும். ஊரிலிருந்து அந்த சாலையின் வழியாக பஸ் ஓடும் தார் பாதைக்கு நடந்து வந்து அங்கிருந்து ஒரு கிலோ மீட்டர்நடந்து மலைக்கு வர வேண்டும். மலையின் அடிவாரத்தில் முள் செடிகள், புதர்கள் மண்டிக் கிடக்கும். ஆடுகளும், மாடுகளும் மேய்ந்து கொண்டிருக்கும். மலையின் மீதும் ஆடுகள் ஏறிப் போய் மேயும்.

பாழடைந்த அந்த முருகர் கோவிலுக்கு ஓர் அர்ச்சகர் வாரத்திற்கு இரண்டுநாள்தான் காலை நேரத்தில் பூஜை செய்வார். பூஜை என்றால் பெரிய பூஜை என்று வாசகர்கள் எண்ண வேண்டாம். மலை உச்சியில் கோவில் அருகே சுனைகளில் சிறிதளவு நீர் வரும். மூன்று சிலைகளுக்கும் அபிஷேகம் செய்யும் அளவிற்கே வரும் அந்நீரைக் கொண்டு சிலைகளின் மீது ஊற்றி, அவைகளின் மீது ஏற்கெனவே இருந்த கிழிந்து போய்க் கிடந்த துணிகளை மறுபடி கட்டி, விபூதி வைத்து விட்டு கோவிலைப் பெருக்குவார். அதுவும் ஒருநாள் நல்ல பாம்பு ஒன்றை அவர் பார்த்து விட்டதால் பாம்பு வருமோ என்று பயந்து கொண்டே அவசர அவசரமாக வேலைகளை முடித்துக் கொண்டு மலையிலிருந்து இறங்கி விடுவார். இந்த வேலைகளைச் செய்வதற்காக அவருக்குக் கொடுக்க வேண்டிய மாதம் எட்டு ரூபாய் சம்பளம் கூட ஒரு வருடமாக வழங்கப்படவில்லை.

எவருமே கோவிலின் இந்த நிலை குறித்து வருத்தப்படவேயில்லை. ஆனால், அந்த ஊர் மணியக்காரர் மட்டும் எந்த நேரமும் முருகனைக் குறித்து ஓயாத கவலை



இரத்தினகிரி கோவில் 1968ம் வருடம்.

இரத்தினகிரி கோவில் [illegible] வருடம்.

கொண்டு மன வருத்தமடைந்தார். இரத்தினகிரி கோவிலில் அன்றாடம் விளக்கு ஏற்றி வைக்க அவருக்கு வசதியும் இல்லை, யாரும் அவருக்குத் துணை வரவும் தயாராக இல்லை. மனதிற்குள்ளாகவே அழுது கொண்டு புலம்புவார்.

மேற்கூறிய தகவல்கள் அனைத்தும் 1968ம் வருடம் இரத்தினகிரி கோவில் இருந்த நிலமை. [நன்றி : பேராசிரியர் திரு.ஏ.சுப்பிரமணியம் அவர்கள் எழுதிய பாலமுருகனும் அடிமையும் – இரத்தினகிரி வரலாறு]

ஆனால் இன்று....! சுமார் 530 டியூப் லைட்டுகள், 1000 வாட்ஸ் விளக்குகள் 100, 40 வாட்ஸ் 800, கோவிலுக்குச் செல்ல அழகான மலைப்பாதை, பிரம்மாண்டமான கோவில், தங்க ரதம், இராஜ கோபுரம், மின்னும் சர விளக்குகள் என்று சர்வாலங்காரமாக முருகன் நிற்கிறார்.

இவை யாவையும் ஒரு தனி மனிதரின் சாதனை என்றால் வியப்பாக இருக்கும். அவர்தான் பாலமுருகனடிமை என்று அழைக்கப்படும் இரத்தினகிரி சுவாமிகள் அவர்கள். அவரது இயற்பெயர் சச்சிதானந்தம்.

1968ம் வருடம் மார்ச் மாதம் 20ம் நாள் குன்றேறி முருகனை தரிசிப்பதற்காகச் சென்ற சச்சிதானந்தம் [அப்போது அவர் மின்வாரிய ஊழியர்] அங்கிருந்த அர்ச்சகரிடம் கற்பூரம் காட்டச் சொன்னார். ‘அவர் கற்பூரம் இல்லை’ என்றதும் ‘ஒரு ஊதுவத்தியாவது கொளுத்தும்படி’ கேட்டார். அதுவும் இயலவில்லை.

இதைக்கண்ட சச்சிதானந்தத்தின் உள்ளம் கொதித்தது. ‘முருகா உனக்கு ஒரு கற்பூரத்திற்குக் கூட வழியில்லாமல் போய்

விட்டதா' என்று ஆவேசம் வந்தவர் போல் ஆடியிருக்கிறார். அப்போது முருகப் பெருமான் அவருக்கு ஜோதி வடிவில் காட்சி அளித்திருக்கிறார். உடனே, அவர் கட்டியிருந்த உடையைக் கிழித்துக் கோவணமாகக் கட்டிக் கொண்டு, அங்கேயே அமர்ந்து விட்டார். மலை மீது வந்து அவரிடம் நடந்ததைக் கூறும்படி கேட்டவர்க்கு அதை விவரிக்கும் பொருட்டு அவர் வாயைத் திறக்கும் வேளையில், முருகனது வேல் வந்து, அவர் முன் அசைந்து 'சொல்லக் கூடாது' என்று அன்புக் கட்டளை இட்டது. 'முருகப் பெருமான் தன்னைப் பேசாமல் இருந்து கொண்டு செயலில் இறங்கச் சொல்கிறார்' என்று ஞானோதயம் பெற்ற அவர் தன்னையே பாலமுருகனடிமை என்று மாற்றிக் கொண்டார்.

மக்கள் கூட்டம் மெள்ள மெள்ள மலைக்கு வரத் தொடங்கியது. அருள் ஜோதியாய் அமர்ந்திருக்கும் அவரைக் கண்டு தனது குறைகளையும், கஷ்டங்களையும் கூறத் தொடங்கியது. ஒவ்வொருவர் சொல்வதையும் கவனமாகக் கேட்டுக் கொண்டு, முருகப் பெருமானைப் பார்ப்பார் பாலமுருகனடிமை சுவாமிகள். அவரிடமிருந்து உள்வாங்கிய ஒளியைக் கொண்டு வந்தவர்களுக்கு காகிதத்தில் எழுதிக் காட்டத் தொடங்கினார். கூட்டமும் தங்களால் இயன்ற சில்லறைகளை அளித்து விட்டுச் செல்லத் தொடங்கியது.

அன்றிலிருந்து, அதாவது 20.03.1968 லிருந்து இடுப்பில் ஒரு கோவணத்துடனும், வெறுங்கையுடனும் ஆரம்பித்த அந்த ஞான வேள்வி 06.02.2003 அன்று கோவிலைக் கட்டி முடித்து கும்பாபிஷேகம் நடத்தியபின்தான் முடிந்தது. அன்றிலிருந்து வாய் பேசாமல், உடல் சுத்தி செய்யும் நேரம்கூட வீண் என்று

குளிக்காமல், ஒரு துண்டு கோவணத்துடன் அந்தக் கோவிலுக்கு வேண்டியே பாடுபட்ட பெருந்தகை அவர்!

இத்தகைய மகான் திரு.கணபதி ஸ்தபதியைக் காண வேண்டும் என்று அழைப்பு விடுத்ததை இன்றளவிலும் தனது வாழ்நாள் பாக்கியமாகவே கருதுகிறார் திரு.ஸ்தபதி அவர்கள். 1973ம் வருடம் திரு.ஸ்தபதியார் சிற்பக் கலைக் கல்லூரி முதல்வராக இருந்தபோது அழைப்பு வந்தது. அவரிடம் இரத்தினகிரி சுவாமிகள் முதலில் கட்டும்படி பணித்தது 5 நிலைகள் கொண்ட இராஜகோபுரமும், முன்னால் ஒரு மண்டபமும். இராஜகோபுரம் பிரம்மாண்டமாகக் கட்டி விட்டால் மக்கள் வரத் தொடங்கி விடுவார்கள், கோவிலுக்கும் வருமானம் கிடைக்கத் தொடங்குமே என்று சுவாமிகள் நினைத்திருப்பார்கள் போலும்!

திரு.கணபதி ஸ்தபதி அவர்கள், செய்ய வேண்டிய பணியை மனதில் குறித்துக் கொண்டு உடனே அங்கேயே அதற்குண்டான தொகையனை எழுதிக் கொடுத்து விட்டார். 1973ம் ஆண்டில் ரூபாய் இரண்டரை லட்சத்திற்கான மதிப்பீடு அது. அதை வாங்கிப் பார்த்த சுவாமிகள் உடனடியாக எழுதிக்காட்டியது என்ன தெரியுமா?

‘‘அநேக ஸ்தபதிகளிடம் மதிப்பீடு வாங்கிப் பார்த்தேன். ஆனால் நீங்கள் குறிப்பிட்ட இரண்டரை லட்சம்தான் எம்பெருமான் முருகன் என்னிடம் குறிப்பிட்டது. எனவே, இன்றே பணியைத் தொடங்குங்கள்’’ என்று எழுதிக்காட்டினாராம்.

அன்றிலிருந்து, இந்தப் புத்தகம் எழுதிக் கொண்டிருக்கும் 2005ம் ஆண்டு வரை ஏறக்குறைய 32 ஆண்டுகளாக இருவருக்கும்

உள்ள அன்பும், நெருக்கமும், பரஸ்பரம் இருவரும் ஒருவர் மீது ஒருவர் வைத்திருக்கும் மரியாதையும், பக்தியும் வார்த்தைகளால் விவரிக்க இயலாததாகும். முதலில் இராஜகோபுரமும், பின்னர் மண்டபமும் கட்டி முடிக்கப்பட்டது.



இரத்தினகிரி கோவில் 2003ம் வருடம்

பின்னர் கர்ப்பக்கிருகம் முழுவதும் கல்லால் கட்டித்தரும்படி, திரு.ஸ்தபதியிடம் பணித்தார் சுவாமிகள். 'முழுவதும் கருங்கல்லால் கட்டினால் நிறைய பொருட்செலவு ஏற்படும்' என்று ஸ்தபதியார் சொன்ன போது 'எல்லாம் முருகன் பார்த்துக் கொள்வார்' என்று எழுதிக்காட்டினாராம்.



அல்லும் பகலும் ஆலயச் சிந்தனையோ?



ஆலயப் பணி முடியப்போகும் மகிழ்ச்சியோ!

இவ்வாறு நிறைய திருப்பணிகள் வரத் தொடங்கவே அந்தத் திருப்பணியை அரசாங்கப் பணியாக்கி, சிற்பக்கலைக்கல்லூரி மாணவர்களை வைத்து செய்யத் தொடங்கினார் திரு.ஸ்தபதி அவர்கள். இதன் மூலம் மாணவர்களுக்கும் நேரடிப் பயிற்சி கிடைக்குமே என்று அவர் எண்ணினார். எனவே, கருங்கல் விக்ரஹங்கள் சிற்பக் கலைக் கல்லூரி மாணவர்களால் செய்யப்பட்டன. அதற்குண்டான தொகையை கோவிலுக்கு வருமானம் வந்ததும் உடனடியாக அனுப்பி விடுவாராம் பாலமுருகனடிமை சுவாமிகள்.

''சில சமயங்களில் கோவிலில் இருந்து கொடுத்தனுப்பப்படும் கவரில் கசங்கிய ஒரு ரூபாய் மற்றும் இரண்டு ரூபாய் நோட்டு, நாணயங்கள் போன்றவைகள் கூட இருக்கும்'' என்று சிற்பக்கலைக் கல்லூரி அலுவலகத்தில் கண்காளிப்பாளராகப் பணிபுரிந்த திரு. கந்தசாமி என்பவர் கூறினார். கோவிலுக்கு வருமானம் வந்த உடனேயே, அதை கோவில் கட்டுவதற்கு விரைவில் அனுப்பி விடும் பாலமுருகனடிமை சுவாமிகளின் ஆர்வத்தைக் குறிப்பதற்காகவே



திரு.கணபதி ஸ்தபதியார் சுவாமிகளுக்கு அன்புடன் பழங்கள் வழங்குதல்



திரு.கணபதி ஸ்தபதியார் மற்றும் அவரது துணைவியார் சுவாமிகளுடன்

இந்த தருணத்தில் இவ்விஷயம் சொல்லப்படுகிறது. கோவிலுக்காகவே அல்லும் பகலும், உறக்கத்திலும் விழிப்பிலும் அயராது பாடுபட்டவர் அவர்.

‘20.03.1968 வரை நித்திய பூஜை கூட இல்லாமல், வருட வருமானம் ரூ.200 மட்டுமே இருந்த, முருகனுக்கும் அம்மனுக்கும் கட்டத் துணி கூட இல்லாமல் இருந்த, ஆராதனைக்கு ஒரு துண்டு கற்பூரமோ அல்லது ஓர் ஊதுவத்தியோ கூட இல்லாமல் இருந்த அந்த பாழடைந்த இரத்தினகிரி பாலமுருகன் ஆலயம் 17.02.1984 அன்றைய நிலவரப்படி தினமும் இருகால பூஜை, வருட வருமானம் மூன்று லட்சத்திற்கும் மேல், ஆபரணங்கள், வெள்ளி, தங்கக் கவசங்கள் என்று இருபது லட்சம் ரூபாய் மதிப்பிற்கு, நிலங்கள் 22 ஏக்கர், அதுவரை நடந்த திருப்பணிகள் ரூபாய் அறுபது லட்சமாகும்.‘ மேற்கண்ட செய்திகள் பாலமுருகனடிமை சுவாமிகளின் டைரியிலிருந்து 16.02.1984 அன்று எழுதப்பட்ட குறிப்பிலிருந்து எடுக்கப்பட்டது. இன்று 2005 ல் கோவில் எந்த அளவு உயர்ந்திருக்கும் என்று நாம் ஊகித்துக் கொள்ளலாம்.

திரு.கணபதி ஸ்தபதியார், பாலமுருகனடிமை சுவாமிகள் அவர்களைப் பற்றிப் பேசினாலே, மிகவும் உணர்ச்சி மயமாக, கண்களில் நீர்ப் பெருக்கெடுக்க அவரை நினைவு கூறுவார். கடந்த 32 ஆண்டுகளாகப் பழகி வந்திருக்கும் திரு.ஸ்தபதியார் கோவில் பணி தொடர்பாக எப்போது சுவாமிகளைப் பார்க்கச் சென்றாலும், அவரது அன்பு மழையில் நனைபவர்.

வேலை முடிந்து விட்டாலும், ஸ்தபதியை திரும்பிப் போவதற்கு எளிதில் சம்மதிக்க மாட்டார். இருந்து, உணவு அருந்தி விட்டுத்தான் செல்ல வேண்டும் என்று வற்புறுத்துவார்.



சிற்ப வேலைப்பாடுகள் நிறைந்த ஆலயத்தின் எழில்மிகு தோற்றம் (2003)



திரு.கணபதி ஸ்தபதியார் அவரது சிற்பிகள் மற்றும் நண்பர்களுடன்

பாலமுருகனடிமை சுவாமிகளின் 60 வது பிறந்த நாள் விழாவின் போது நடந்த விழாவில் திரு.ஸ்தபதி அவர்கள் பேசும்பொழுது மிகவும் உணர்ச்சி வசப்பட்டு இவ்வாறு கூறினார்.

''சுவாமி! 30 ஆண்டுகளாக இக்கோவிலைக் கட்டி முடிக்க வேண்டும் என்று வாய் பேசாமல், உடலை சுத்தம்செய்தால்கூட நேரம் வீணாகுமே என்று குளிக்காமல், இந்த ஊரை விட்டு எங்கும் செல்லாமல் ஒரு ஞான வேள்வி செய்கிறீர்களே! எப்ப சுவாமி அறுபடை வீட்டையும் தரிசனம் செய்யப் போகிறீர்கள்? எப்ப சுவாமி குளிக்கப் போகிறீர்கள்?'' என்று குரல் கம்ம கண்களில் நீர் வழிய கேட்டதும் கூடியிருந்த மொத்த கூட்டமும் வாய் விட்டுக் கதறி அழுதது. சுவாமிகள் தனது குழந்தைச் சிரிப்புடன் எப்பொழுதும் போல் அமைதியாக இருந்தார்.

இன்றளவும் ஒவ்வொரு வருடமும், திரு.கணபதி ஸ்தபதி அவர்களின் பிறந்த நாளான செப்டம்பர் 30 ம் தேதி அன்று, இரத்தினகிரி முருகனுக்கு விசேஷமாக அபிஷேகமும், அர்ச்சனைகளும் செய்து பிரசாதங்களை அனுப்பி வைப்பார் பாலமுருகனடிமை சுவாமிகள் அவர்கள். அங்கிருந்து ஒருவர் பிரசாதத்தை சென்னைக்கு எடுத்துக் கொண்டு வந்து ஸ்தபதியிடம் கொடுத்து விட்டு செல்வார்.

கோவிலை சீர்படுத்த வேண்டும் என்ற ஞானவேள்வி, 1968 முதல் 2003 வரை நடைபெற்று, கும்பாபிஷேகத்துடன் இனிதே முடிவுற்றது. 'கடவுளை நேரில் கண்ட மகான் பாலமுருகனடிமை இரத்தினகிரி சுவாமிகள்' என்று திரு.கணபதி ஸ்தபதி அவர்கள் கூறும் வார்த்தை நினைவுக்கு வருகிறது! தான் நேரில் கண்ட கடவுளை அனைவரும் காண வேண்டும் என்று அவர் கண்ட கனவு மெய்ப்படுகிறது!

## தொழிலதிபர் இராஜா சர் முத்தையா செட்டியார் அவர்களுடன்...

திரு.கணபதி ஸ்தபதி அவர்கள் மகாபலிபுரம் சிற்பக் கலைக் கல்லூரியில் பணிபுரிந்து கொண்டிருந்த போது, தொழிலதிபர் இராஜா சர் முத்தையா செட்டியார் அவர்கள், அவரைச் சந்தித்து, மதுரையில் அவர்கள் கட்டவிருக்கும் இராஜா முத்தையா மன்றம் என்ற அரங்கத்தின் வரைபடங்களைக் காட்டி அதுபற்றி ஸ்தபதியின் கருத்தைக் கேட்டார். [அந்த வரைபடம் திரு.முத்தையா செட்டியார் அவர்களின் பொறியாளர் வரைந்தது.] கருத்து கேட்கும் சமயத்தில் அவர் தனது பொறியாளருடன் வந்திருந்தார்.

ஸ்தபதிக்கு, அந்த வரைபடம் திருப்தி அளிக்கவில்லை. ஆயினும், பொறியாளர் முன்னிலையில் அதை எப்படிச் சொல்வது என்ற நாகரீகம் கருதி 'நன்றாக இருக்கிறது' என்று மென்மையாகக் கூறி விட்டார். அதை தனது நுட்பத்தால் உணர்ந்த செட்டியார் அவர்கள், மறுநாளே ஸ்தபதிக்குத் தொலைபேசி மூலம் அழைப்பு விடுத்து, அவர் சரியாகக் கருத்து சொல்லாததற்குக் காரணம் வினவினார். 'அந்த வரைபடம் தனது திருப்திக்கு ஏற்ற வகையில் அமையவில்லை' என்ற உண்மையை ஸ்தபதி கூறினார்.

திரு. முத்தையா செட்டியார் அவர்கள், ஸ்தபதியையே ஒரு வரைபடம் தயாரித்துக் கொண்டு வந்து, தனது இல்லத்தில் சந்திக்கும்படி அழைப்பு விடுத்தார்.

அதன்படி ஸ்தபதி அவர்களும், அம்மன்றத்திற்கு அழகான வரைபடங்களைத் தயாரித்துக் கொண்டு செட்டியார் அவர்களைச் சந்திப்பதற்காக, அவரது இல்லத்திற்குச் சென்றார். அவரை அன்புடன் வரவேற்ற திரு.செட்டியார் அவர்கள், ஸ்தபதி தயாரித்துக் கொண்டு வந்த வரைபடங்களைப் பார்த்து, மகிழ்ந்து, இரசித்து, உடனடியாக அவ்வரைபடங்களின்படி கட்டுவதற்கு அனுமதி அளித்தார். பின்னர், ஸ்தபதியைத் தன்னுடன் அமர்ந்து விருந்து உண்ணும்படி பணித்தார். அவருடைய அன்பின் ஆழத்தை உணர்ந்த ஸ்தபதியும், விருந்துண்ண மகிழ்ச்சியுடன் சம்மதித்தார்.

திரு.முத்தையா செட்டியார், தனது இல்லத்தில் உணவு பரிமாறுபவரிடம், ''ஸ்தபதி வந்திருக்கார். அவருக்குத் தங்கத் தட்டு கொண்டு வந்து சாப்பாடு பரிமாறுங்கள்.'' என்றார்.

''ஐயா! உங்களுக்கு வெறும் வெள்ளித்தட்டு: எனக்கு தங்கத் தட்டா?'' என்று ஸ்தபதி வினவியதும், ''ஸ்தபதி! நீங்கள் பெரிய மனிதர்! எவ்வளவு அற்புதமான கலைப் பொக்கிஷங்களைச் செய்கிறீர்கள். நிச்சயம் நீங்கள் பெரிய மனிதர். நான் மிகவும் சாதாரணமானவன். அதனால், உங்களுக்குத் தங்கத்தட்டில் உணவளிப்பதுதான் மிகவும் பொருத்தம்'' என்று அவர் கூறினார்.

இதைக் கேட்ட ஸ்தபதி வியந்து போனார். 'எவ்வளவு பெரிய மனிதர்! சமுதாயத்தில் மிகவும் உயர்ந்த நிலையில் இருப்பவர்! ஒரு சாதாரண ஸ்தபதிக்கு இவ்வளவு அன்பையும், மரியாதையையும் காட்டுகிறாரே' என்று நெக்குருகிப் போனார். அப்பண்பு நாட்டுக் கோட்டை செட்டியார்கள் எனப்படும்

நகரத்தார்களுக்கே உரிய தனிப்பண்பு என்றாலும், திரு.முத்தையா செட்டியாரின் விருந்தோம்பலைக் கண்டு வியந்துதான் போனார்.

உணவு அருந்தி முடித்தபின்னர், வாசல் வரை வந்து வழி அனுப்பி வைத்த திரு.செட்டியார், அம்மன்றத்தை உடனடியாகக் கட்டுவதற்குண்டான ஏற்பாடுகளைத் தொடங்கும்படி கூறினார். அப்படி தொடங்கப்பட்டு, திரு.கணபதி ஸ்தபதி அவர்களால் கட்டப்பட்டுள்ளதுதான், தற்போது மதுரையில் முத்தையா மன்றம் என்ற பெயருடன் மதுரை நகருக்கே அழகு சேர்க்கின்றது அந்தக் கவினுறு மன்றம்! ஐந்தாவது உலகத் தமிழ் மாநாட்டில் தோரண வாயில்கள் செய்யும் பணியில் ஈடுபட்டிருந்ததால், நேரமின்மை காரணமாக, அம்மன்றத்தின் மக்கள் அமரும் கூடத்தை மட்டும் வெளியிலிருந்து வந்த பொறியாளர்கள் செய்தனர். மற்ற அனைத்து வேலைகளும் திரு.கணபதி ஸ்தபதி




இராஜா முத்தையா மன்றம், சென்னை

அவர்களால் குறுகிய காலத்தில் கட்டி முடிக்கப்பட்டது. இன்றும் மதுரை மாநகருக்கு அழகு சேர்க்கும் கட்டிடங்களில் ஒன்றாக அம்மன்றம் திகழ்கிறது.

இதற்கிடையில் திரு.கணபதி ஸ்தபதி அவர்கள் எழுதிய சிற்பச் செந்நூல் என்ற நூலுக்காக, சிறந்த இலக்கிய சேவைக்கான பரிசினை அவருக்கு திரு. முத்தையா செட்டியார் அவர்கள் ரூபாய் பத்தாயிரம் வழங்கினார்கள். ஸ்தபதியுடன் கவிஞர் திரு. கண்ணதாசன் அவர்களுக்கும் இப்பரிசினை திரு.செட்டியார் வழங்கினார்.

அதன்பிறகு, அவரது மகன் திரு.எம்.ஏ.எம். இராமசாமி செட்டியார் அவர்கள் சென்னையில் இராஜா முத்தையா மன்றமும், இராணி மெய்யம்மை மன்றமும், சென்னை இராஜா அண்ணாமலைபுரத்தில் உள்ள ஐயப்பன் திருக்கோயிலும் திரு.கணபதி ஸ்தபதியைக் கொண்டு கட்டி முடிக்கச் செய்தார்.

ஒவ்வொரு வருடமும், திரு.முத்தையா செட்டியார் அவர்களின் தந்தையார் திரு.அண்ணாமலைச் செட்டியார் அவர்களின் நினைவாக வழங்கப்படும் பரிசினை 1997ம் வருடம் அவரது மகன் திரு. எம்.ஏ.எம்.இராமசாமிச் செட்டியார் அவர்கள், திரு.கணபதி ஸ்தபதி அவர்களுக்கு வழங்கி கௌரவித்தார்கள். அப்பரிசு ரொக்கப் பரிசாக ரூபாய் ஒரு இலட்சம் ஆகும்.

பரிசுத் தொகையாக இப்பணம் வழங்கப்பட்ட நிகழ்ச்சியின் போது நடந்த ஒரு சுவையான செய்தியினை திரு.ஸ்தபதி அவர்கள் அடிக்கடி குறிப்பிடுவார். ஒவ்வொரு வருடமும், ஒவ்வொரு துறையில் சிறந்த சேவை புரிந்தமைக்காக

வழங்கப்படும் அவ்விருது அதுவரையில் ரூபாய் ஐம்பதாயிரமாகத்தான் இருந்தது.

திரு.ஸ்தபதிக்கு வழங்கும் போது, அவ்விழாவிற்கு வருகை தந்திருந்த திருமதி மீனா முத்தையா அவர்கள் [திரு. எம்.ஏ.எம்.இராமசாமி செட்டியார் அவர்களின் அண்ணியார்] விழாவில் குறுக்கிட்டு ''ஒரு மாபெரும் ஸ்தபதிக்கு விருதும், பரிசும் அளிக்கிறீர்கள்! வெறும் ஐம்பதாயிரம் ரூபாய் மட்டும்தானா? அதை ஒரு இலட்சமாக மாற்றிக் கொடுங்கள்'' என்று வேண்டுகோள் விடுத்தார். அண்ணியாரின் வாக்கை தெய்வ வாக்காக ஏற்று, உடனடியாக அதனை அமல்படுத்தும் விதமாக, செக் புத்தகத்தை எடுத்து வரும்படி பணித்து, ஒரு இலட்ச ரூபாய்க்கு மேடையிலேயே காசோலையை அளித்தார் திரு.இராமசாமிச் செட்டியார். அந்த வருடத்திலிருந்து பரிசுத் தொகை ஒரு இலட்சமாக உயர்த்தப்பட்டது.

இவ்விதமாக, திரு.ஸ்தபதியாருக்கும், திரு.முத்தையா செட்டியார் அவர்களின் குடும்பத்திற்கும் உள்ள நெருக்கம், அன்பு, மரியாதை போன்றவை வார்த்தைகளால் வர்ணிக்க இயலாத ஒன்றாகும்.

கடந்த 2004ம் ஆண்டு, திரு.இராஜாசர் முத்தையா செட்டியாரின் நூற்றாண்டு விழா நினைவாக சிதம்பரத்தில் அண்ணாமலை பல்கலைக் கழகத்தின் நுழைவு வாயிலில், ஒரு நினைவு வளைவு அமைக்க வேண்டும் என்று திரு.ஸ்தபதியை எம்.ஏ.எம். இராமசாமிச் செட்டியார் அவர்கள் கேட்டுக் கொண்டார். அதன்படி, சிதம்பரத்தில் கவின்மிகு தோரண வாயில்






இராஜா சர் முத்தையா செட்டியார் நூற்றாண்டு விழா நினைவு வளைவு

ஒன்றை திரு.ஸ்தபதி அவர்கள் அமைத்துக் கொடுத்தார். அத்தோரணவாயில் பற்றிய குறிப்பு கீழ் வருமாறு :




திரு.எம்.ஏ.எம்.இராமசாமி செட்டியார் அவர்கள்
திரு.ஸ்தபதியை கௌரவித்தல்

"ஐந்தமிழ் இலக்கணத்தை பிரதிபலிக்கும் இந்த தோரணவாயில் உள்அளவாக 40'.0" நீளமும், 30'.0" உயரமும் கொண்டது. இரண்டே ஸ்தம்பங்களைக் கொண்டும், அவற்றை இணைக்கும் ஓர் உத்திரத்தைக் கொண்டும் அமைக்கப் பெற்ற இஃதொரு திருவாயிலாகும். உத்திரத்தின் மீது தமிழக சிற்பக்கலை மரபை உணர்த்தும் தூண் அமைப்புக்களையும், மேல்நிலையில் அணிதிகழ் கூடங்களையும் கொண்டு இங்ஙனம் அமைந்த இரண்டு ஸ்தம்பங்களின் நடுவில், உத்திர மேல்மட்டத்தில் நீண்ட சதுர அமைப்பில் பெரியதொரு கூடம் அமைக்கப்

பெற்றிருக்கிறது. இந்த நடுக்கூடத்தின் நெற்றியில் மேல்நிலையில் மேதகு ராஜா முத்தையவேள் அவர்களின் மார்பளவு உருவம் சிகரத்தை அலங்கரிப்பதாக அமைக்கப்பட்டிருக்கிறது. இது செப்புத் தகட்டில் தங்க ரேக்குகள் ஓட்டப் பெற்று தங்கமேனியாக காட்சித் தருகிறது. அந்தத் திருஉருவத்திற்கு அடியிலே உத்திரத்தின் முன்பக்கத்திலே அவர் வளர்த்த இயல், இசை, நடம், சிற்பம், கட்டிடம் ஆகிய ஐந்தமிழுக்குண்டான சின்னங்கள் மூலம் சித்தரிக்கப் பெற்றிருக்கிறது.

இந்த ஐந்து சின்னங்களும் தாமிரத் தகட்டால் வார்த்தெடுக்கப் பெற்று **(Hollow casting)** தங்கமுலாம் பூசப்பட்டவையாகும்.

இயல், இசை, நடம், சிற்பம், கட்டிடம் ஆகியவற்றை பிரதிபலித்திட இயலுக்கு ஒரு புலவரும் [கம்பர்], இசைக்கு வீணை வாசிக்கும் ஒரு பெண்ணும் [மாதவி], நடத்திற்குச் சிற்றம்பல ஆடல்வல்லான் நடராசனும், சிற்பத்திற்கு தமிழன்னையின் உருவமும், கட்டிடத்திற்குத் தஞ்சைப் பெருவுடையார் விமானமும் பொருத்தப்பட்டிருக்கிறது.

இந்தத் தோரண வாயிலின் மேற்குப் பக்கத்தில், ஒவ்வொரு உருவமும் எந்த கருத்தை விளக்குகிறது, என்ற செய்தியை ஒவ்வொரு உருவத்திற்குக் கீழும் அதற்குரிய இயல், இசை, நடம், சிற்பம், கட்டிடம் ஆகிய தமிழ்ச் சொற்கள் பொறிக்கப்பட்டுள்ளன.

இதேபோல், கிழக்குப் பக்கத்தில் இக்கருத்துக்களைக் குறிக்கும் ஆங்கிலச் சொற்களும் பொறிக்கப்பட்டுள்ளன. இவற்றையெல்லாம்

ஒருங்கிணைத்து, முத்தையாவேள் அவர்கள் நினைவாக இத் தோரணவாயில் "ராஜா முத்தையா நூற்றாண்டு பிறந்த நாள் நினைவு வாயில்" என்று துலக்கமாக நன்கு தெரியுமாறு தமிழிலும், ஆங்கிலத்திலும் பொறிக்கப்பட்டிருக்கிறது.

திரு.முத்தையா செட்டியார் அவர்கள் மற்றும் அவர் சமூகத்தின் இத்தகைய நற்பணிகள் எட்டுத் திசைகளிலும் பரவ வேண்டும் என்ற நோக்கில் எட்டு யானைச் சிற்பங்கள் மூலம் பிரதிபலிக்கப் பட்டிருக்கின்றது. மொத்தத்தில் திரு. முத்தையா செட்டியார் அவர்களின் ஐந்தமிழ்த் தொண்டை பிரதிபலிப்பதோடு, அவர்கள் தொன்றுதொட்டு பேணிக் காத்து வந்த கட்டிடக் கலை நுட்பங்களை வார்த்தைகளால் வர்ணித்துச் சொல்லமுடியாத அளவியல் மற்றும் அழகியல் நுட்பங்கள் நிறைந்ததாக, இத் தோரணவாயில் நிறுவப்பட்டிருக்கிறது என்று சொல்லலாம்.

இத் தோரணவாயிலின் உயரம் 49'.6" தூண் உள்ளிட்ட அகலம் 56'.0" அடிவாரத்தில் தூண் அகன்று இருப்பதால் இந்தத் தோரணவாயில் ஸ்திரத்தன்மை பெறச் செய்திருப்பதோடு ஒவ்வொரு தூணின் நடுவிடத்திலும் கான்கிரீட் தூண் நிறுத்தி தோரணவாயில் ஸ்திரத்தன்மையை மேலும் பெருக்கியிருக்கிறது. இந்த ஒவ்வொரு செங்கலால் கட்டுண்ட - தூணின் குறைந்த அளவு 8'.0"×8'.0" சதுரமுடையது.

இந்த தூண்களை இணைக்கும் உத்திரம் தூண்களின் அகலத்திற்கு ஒப்ப உறுதிபட அமைக்கப் பட்டிருக்கிறது. இத்தகைய

அமைப்பினால் இந்தத் தோரணவாயில் பல நூறு ஆண்டுகள் அசையாமல் நிற்க வாய்ப்புடையதாகிறது. இந்தத் தோரண வாயில் தமிழகச் சிற்பக்கலைக்கு ஏற்றமும் ஏற்படுத்தித் தருகிறது என்று சொல்லலாம்.

இவ்விதம் சிற்பிகளின் கலைப்பசிக்கு எப்பொழுதும் உணவளிக்கும் செட்டியார் சமூகத்தின் மீது பெரும் மதிப்பு எப்பொழுதும் திரு.கணபதி ஸ்தபதி அவர்களுக்கு உண்டு.

## பொறியாளர் திரு.இராமமூர்த்தி அவர்களுடன் ....

மாமல்லபுரம் 'அரசு கட்டிடம் மற்றும் சிற்பக்கலைக் கல்லூரி'யில் முதல்வராக திரு. கணபதி ஸ்தபதி இருந்த காலத்தில், கிண்டியிலுள்ள தொழில் நுட்பக் கல்வி இயக்ககத்தில் **(Directorate of Technical Education)** இணை இயக்குநராக **(Joint Director)** இருந்தவர் திரு. வி. இராம மூர்த்தி அவர்கள்.

இவர் கட்டிடத் துறையில் **(Civil Engineering)** பொறியியல் வல்லுநர். சிதம்பரம் அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் பட்டம் பெற்றவர். பெரும் கல்வியாளர்களைக் கொண்ட







திரு.இராமமூர்த்தி அவர்கள் திரு.கணபதி ஸ்தபதியுடன்

குடும்பத்தில் பிறந்தவர். இவரது மனைவியைத் தமிழ் இலக்கிய உலகில் அனைவரும் அறிவர். பிரபல எழுத்தாளர் கோமகள் அவர்களே இவரது மனைவி ஆவார்.

மனைவியின் எழுத்துத் திறமையை அறிந்து, ஏராளமான கதைகள் எழுத ஊக்குவித்து, அதனைப் புத்தகமாகப் பிரசுரிக்கத் தகுந்த ஆட்களைத் தேடி, புத்தகங்களைப் பிழை திருத்தம் செய்தல் என்று சகல விஷயங்களிலும் மனைவியின் திறமையை வெளிக் கொணர்வதற்குப் பாடுபட்டவர். இவை எல்லாவற்றையும் விட மிகவும் அன்பான மனிதர். எவரிடமும் கோபித்தோ, கடுஞ் சொற்களைக் கூறவோ அறியாதவர்.

கல்லூரி விஷயங்களைப் பற்றிப் பேசுவதற்கும், கல்லூரியின் முன்னேற்றம் பற்றி விவாதிப்பதற்கும் அடிக்கடி சென்னை வந்து, சென்னை கிண்டியிலுள்ள தொழில் நுட்பக் கல்வி இயக்கக அலுவலகத்தில் அவரை சந்திப்பார் கணபதி ஸ்தபதி அவர்கள். மிகவும் பாரம்பரியம் மிக்க குடும்பத்தில் பிறந்து, நன்கு படித்து, பெருமை வாய்ந்த கல்லூரியின் முதல்வராக உயர்ந்துள்ள அவரைப் பார்த்து மிகவும் பாராட்டுவார் திரு. இராம மூர்த்தி அவர்கள்.

கல்லூரியின் முன்னேற்றம் குறித்து என்ன திட்டங்கள் ஸ்தபதியார் கொடுத்தாலும் உடனுக்குடன் அதை நிறைவேற்றி விடுவார். அவர் மேல் அவ்வளவு நம்பிக்கை, மரியாதை, அன்பு இன்னும் அநேகம்..

மகாபலிபுரத்திலிருந்து சென்னைக்குப் பேருந்தில் வந்து, கிண்டியிலுள்ள அலுவலகத்தில் அனைத்து அலுவலகப் பணிகளையும் முடித்துக் கொண்டு, அங்கிருந்து நடந்து அடையாறு வந்து, திரும்பவும் ஊர் செல்வதற்காக மகாபலிபுரம் செல்லும் பேருந்துகள் நிற்கும் அந்தத் திருப்பத்தில், பேருந்து வருவதற்காகக் காத்துக் கிடப்பது ஸ்தபதியின் வழக்கம். எப்பொழுதாவது ஒன்றாக வரும் பேருந்து சமயத்தில் வரவே வராது.

இவ்வாறு ஒரு நாள் ஸ்தபதி பேருந்து நிலையத்தில் காத்துக் கிடக்கும் போது, தனது பணியை முடித்துக் கொண்டு அலுவலகத்தில் இருந்து காரில் கிளம்பி அடையாரிலுள்ள தனது வீட்டிற்குக் கிளம்பி திரு. இராம மூர்த்தி அவர்கள் வரும் போது, அடையார் திருப்பத்தில் ஸ்தபதியார் பேருந்து வருவதற்காகக் காத்து நிற்பதைப் பார்த்தார்.

இறங்கி, விசாரிக்கும் போது, பேருந்திற்காகக் காத்து நிற்பது தெரிய வந்தது. ஒரு மாபெரும் கல்லூரியின் முதல்வராக இருந்து கொண்டு பேருந்திற்காகக் காத்துக் கொண்டிருக்கும் நிலையை எண்ணி மிகவும் வருத்தப்பட்டு, இந்நிலை மாற ஆவன செய்ய வேண்டும் என்று நினைத்துக் கொண்டார்.

உடனே, காலந்தாழ்த்தாமல், அரசாங்கத்திற்குக் கருத்துரு அனுப்பி, தகுந்த அதிகாரிகளைப் பார்த்து விளக்கி, கல்லூரிக்கு ஒரு வேன் **(Van)** பெற்று வழங்கிடத் தக்க ஏற்பாடு செய்தார் திரு. இராம மூர்த்தி அவர்கள். இன்றைக்கு ஸ்தபதிக்கு சொந்தமாக

கார்கள் இருப்பினும், 'முதல் முதலில் நான் சௌகரியமாகப் பயணம் செய்ய எனக்கு ஊர்தி வாங்கித்தந்தவர் இராம மூர்த்திதான்' என்று நன்றியுடன் நினைவு கூறுவார் ஸ்தபதி.

தொழில்நுட்பக் கல்வித்துறையின் மூலம் ஸ்தபதி அவர்களை சிற்பத்துறை பற்றிய ஓர் அருமையான நூலை எழுதி வெளியிடுவதற்கு அரும்பாடு பட்டவர். சிற்பத்துறையின் அனைத்து நுணுக்கங்களையும் வெளிப்படுத்தும் 'சிற்பச் செந்நூல்' என்னும் அந்த நூல் இன்றளவும் சிற்பத்துறை பயிலும் அனைத்து மாணவர்களுக்கும் ஓர் அரிய பொக்கிஷமாகும்.

இப்படியாக, அலுவலக ரீதியாக சிறு செடியைப் போன்று தொடங்கிய இவர்கள் இருவரது நட்பு, பின்னர் அன்பென்னும் உரமும், நீரும் விட்டு வளர்ந்து, வளர்ந்து, இன்று ஒரு மாபெரும் விருக்ஷமாக வளர்ந்து அழுத்தமாக வேரூன்றிக் கிடக்கின்றது.

இருவரும் ஒரே சமயத்தில் ஓய்வு பெற்றதும், அதற்குப் பிறகு ஸ்தபதியார் அவர்கள் தனியாக **V.Ganapati Sthapati & Associates** என்ற ஒரு ஸ்தாபனத்தை ஆரம்பித்ததும், திரு. இராம மூர்த்தியை அன்புடன் அழைத்து வந்து, அந்நிறுவனத்தின் பொது மேலாளர் **(General Manager)** என்ற பதவியை அளித்து அவரை கௌரவித்தார்.

நாள் தவறாது தினமும், தானே தனது காரை ஓட்டிக் கொண்டு அலுவலகத்திற்கு திரு. இராம மூர்த்தி அவர்கள் வருவதும், [அன்னாருக்குத் தற்போது வயது 75] அவர் வரும் வழி

எதிர்பார்த்து ஸ்தபதியார் காத்திருப்பதும், வந்ததும் இருவரும் பார்த்துப் பேசி மகிழ்ந்து வருவதும் இன்றைய தேதி வரையில் நடந்து வரும் ஓர் அற்புதமான நிகழ்ச்சியாகும். இருவருக்கும் இடையில் ஏறக்குறைய 30 ஆண்டுகளுக்கும் மேலான உயரிய நட்பு இன்றும் பரிமளிக்கின்றது.

ஸ்தபதியார் எழுதி வரும் நூல்களைப் பிழைதிருத்தம் செய்து, அதற்கு உகந்த கருத்துக்களைத் தந்து மாற்றச் செய்வது திரு. இராமமூர்த்தியின் தலையாய பணியாகும். [அதில் சில சமயம் இருவருக்கும் கருத்து வேறுபாடு வருவதுண்டு. அப்போது இருவருக்கும் நடைபெறும் சொற்போரைப் பார்ப்பவர்கள், இனி இவர்களது நட்பு அவ்வளவுதான் என்று எண்ணுவர். ஆனால், சொற்போர் முடிந்ததும் மறுபடி பழையபடி சிரித்துப் பேசிப் பழகும் விசித்திர நண்பர்களாக மாறி விடுவர்.]

ஸ்தபதியாரின் அலுவலகத்தில் பணிபுரியும் அனைவராலும் ஜி.எம். (G.M.) என்று அன்புடன் அழைக்கப்படும் திரு. இராம மூர்த்தி அவர்கள் உண்மையிலேயே ஒரு மாபெரும் மனிதர்! அனைவரையும் மிகவும் மதிக்கும் பண்பாளர்! அலுவலகத்தில் ஒரு தந்தையைப் போன்ற ஸ்தானத்தில் இருந்து கொண்டு அனைவரையும் வழி நடத்துபவர்! பெண்களைத் தெய்வமாகக் கருதுபவர்!

ஸ்தபதியார் கன்னியாகுமரியில் வான்புகழும் வள்ளுவனுக்கு 133 அடி உயரத்தில் முற்றிலும் கருங்கல்லால் ஆன சிலையை அமைக்கும் பணியில் ஈடுபட்டிருக்கும் போது

அதற்கான தொழில்நுட்பப் பொறியாளராகப் பணியாற்றியவர். தொழில்ரீதியாக மட்டுமன்றி குடும்பத்திலும் ஒருவராகவே ஆகி விட்டவர்.

அலுவலகத்தில் பணிபுரியும் எவருக்கும் உரிய நேரத்தில் தகுந்த வழிகாட்டியாக இருப்பவர். அன்னாரது நட்பு ஸ்தபதியாருக்குக் கிடைத்த பெரும் பேறாகவே கருதுகிறார் அவர். இருவரது நட்பும் நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாக வளர்ந்து வருகிறது.

## கவிஞர் திரு.வைரமுத்து அவர்களுடன்..

திரு.கணபதி ஸ்தபதி அவர்கள் சிற்பக்கல்லூரியில் முதல்வராகப் பணியாற்றிக் கொண்டிருந்த நேரம். அவரது குடும்ப நண்பராகிய திருமதி. சசிகலா ஆனந்த் என்பவர் ஸ்தபதியிடம் வாஸ்து மரபைப் பற்றிப் படித்துக் கொண்டிருந்தார்.

அவர் ஸ்தபதியிடம் 'இவ்வளவு பாரம்பரியம் வாய்ந்த சிற்பக்கலை மரபை மக்களுக்கு எடுத்துச் செல்ல வேண்டும். அதற்கு தொலைக்காட்சி போன்ற ஊடகங்கள் மூலம்தான் முடியும்' என்றதால் பிரபல திரை இயக்குநர் திரு.பாலசந்தர் அவர்களது மகன் திரு.பாலகைலாசம் அவர்களை அணுகினர்.

அவரும் இதற்கு மகிழ்ச்சியுடன் சம்மதிக்க அவருக்குச் சொந்தமான மின்பிம்பங்கள் என்ற நிறுவனம் மூலமாக படப்பிடிப்பு ஆரம்பிக்கப்பட்டது. 'வாழும் மரபு – ஒரு சிற்பி பேசுகிறான்' என்ற தலைப்பில் குறும்படமாக எடுக்கப்பட்டது. திரு. கணபதி ஸ்தபதி அந்தப் படத்தில் சிற்பக்கலையைப் பற்றி மிகவும் அருமையாக, உணர்ச்சி பூர்வமாக விளக்கியிருப்பார்.

''சிற்பி ஒரு சிற்பத்தைச் செய்யும் போது அதில் ஊன்றி, ரசித்து, அதுவாகவே மாறி விடுவான். அது போலத்தான் கவிஞனும். அவன் எழுதும் கவிதையாகவே மாறி விடுவான் என்ற கருத்து வரும்படி 'சிற்பியே சிற்பமாகிறான், கவிஞனே கவிதையாகிறான் '' என்று இரசிக்கும்படி சொல்லுவார்.

மிகவும் அழகாக எடுக்கப்பட்ட ஓர் அருமையான குறும்படம் அது. அந்த ஆண்டுக்கான மிகச் சிறந்த குறும்படம் என்று ஜனாதிபதி விருதை தட்டிச் சென்றது.

அந்தப் படம் வெளியிடுவதற்கு முன்னால் குறிப்பிட்ட சிலருக்கு மட்டும் அதைத் திரையிட்டுக் காட்டும் Preview show சென்னையிலுள்ள மேனா தியேட்டரில் திரையிடப்பட்டது. அதற்குக் குறிப்பிட்ட சிலருக்குத்தான் அழைப்பிதழ் அனுப்பப்பட்டது.

ஸ்தபதி அவர்கள் திரு.பாலகைலாசத்திடம் ''கண்டிப்பாகக் கவிஞர் திரு. வைரமுத்துவுக்கு ஓர் அழைப்பிதழ் அனுப்பப்பட வேண்டும். அவரால்தான் நான் சொல்வதை மிகச் சரியாகப் புரிந்து கொள்ள முடியும்'' என்றார். திரு.பாலகைலாசமும் அதற்கிசைந்து திரு.வைரமுத்துவுக்கு அழைப்பிதழ் அனுப்பியிருந்தார்.

படம் ஆரம்பிப்பதற்கு முன்பே ஸ்தபதியும், திரு.இராமமூர்த்தியும் சென்று கடைசி வரிசையில் அமர்ந்து விட்டனர். படம் தொடங்கும் சமயத்தில் திரு.வைரமுத்து வந்து அமர்ந்தார். உடனே விளக்குகள் அணைக்கப்பட்டு படமும் ஆரம்பிக்கப்பட்டு ஓடத் துவங்கியது.

படம் முடிந்து, விளக்குகள் ஏற்றப்பட்டதும் முதலில் எழுந்தவர் திரு.வைரமுத்துதான். ''எங்கே அந்த ஸ்தபதியார்?'' என்று அவருக்கே உரிய கம்பீரமான குரலில் கேட்டார்.

கடைசி வரிசையில் அமர்ந்திருந்த ஸ்தபதி ''இதோ இங்கே இருக்கிறேன்'' என்றதும், விரைந்து வந்து அவரை ஆரத்தழுவி, ''அய்யா! மிகவும் அருமையாகச் சொன்னீர்கள்! சிற்பியே சிற்பமாகிறான்: கவிஞனே கவிதையாகிறான்! ஆஹா என்ன அருமையான வாக்கியங்கள்'' என்று அவரைப் பாராட்டு மழையால் நனைய விட்டார். 'கற்றாரைக் கற்றாரே காமுறுவர்' என்பதற்கு ஓர் அருமையான எடுத்துக் காட்டு.

மறுநாளே, தனது கன்னல் தமிழில், ஸ்தபதிக்கு

25.12.9[illegible]

திரு. கணபதி ஸ்தபதி அவர்கள்
சென்னை.

அன்புடையீர்,

வணக்கம்.

நான் பாராட்டப் படவேண்டும் என்று விரும்பிய பெருங்கலைஞரான தங்களை நேற்றுச் சந்தித்ததில் மிகுந்த மகிழ்ச்சி அடைந்தேன்.

சிற்பக் கலை பற்றிய பல அரிய செய்திகளை அச் சித்திரத்தின் மூலம் அற்புதமாய்ச் சொல்லியிருக்கிறீர்கள். [illegible]
கற்களை மட்டுமல்ல - இந்தச் சித்திரத்தில் தாங்கள் சொற்களையும் செதுக்கியிருக்கிறீர்கள்.

தங்களின் கைவண்ணத்தில் உருவான சிற்பங்களின் கலை நுணுக்க ஒளிப்பாடு சிலிர்க்க வைத்தது.

தங்களின் தந்தையார் உருவாக்கிய அந்தச் சிலை கலையின் [illegible] உச்சத்துக்கும் ஓர் எடுத்துக்காட்டு.

தங்கள் படைப்புக்களையெல்லாம் நேரம் வாய்க்கும்போது நேரில் கண்டு மகிழவும், தங்களோடு விரிவாக உரையாடவும் ஆவலோடிருக்கிறேன்.

[illegible] தங்கள் காலத்தில் வாழ்வதற்காகவும் நான் பெருமைப் படுகிறேன்.

அன்புள்ள

தங்கள் கலைக்கு என் வணக்கம்.

[illegible]

[illegible] • [illegible] • சென்னை - 600 024 • ✆ 424174

1990ம் வருடத்தில் திரு.வைரமுத்து அவர்கள் எழுதிய கடிதத்தை பத்திரமாக பாதுகாத்து வரும் கணபதி ஸ்தபதி அவர்கள் அக்கடிதத்தை **Scan** செய்து இந்த அத்தியாயத்தில் வெளியிட வேண்டுமென்று விரும்பியதால் அது இப்பக்கத்தில் வெளியாகியுள்ளது. எழுத்துக்கள் தெளிவாக இல்லாத காரணத்தினால்

கடிதம் அப்படியே தட்டச்சு செய்யப்பட்டு வாசகர்களுக்காக அளிக்கப்பட்டுள்ளது.

---

வைரமுத்து

திரு.கணபதி ஸ்தபதி அவர்கள் 25.12.90
சென்னை.

அன்புடையீர்,

வணக்கம்.

நான் பார்த்துப் பழக வேண்டும் என்று பிரியப்பட்ட பெருங்கலைஞரான தங்களை நேற்றுச் சந்தித்ததில் மிகுந்த மகிழ்ச்சி அடைந்தேன்.

சிற்பக் கலை பற்றிய பல அரிய செய்திகளை அச்சித்திரத்தின் மூலம் அற்புதமாகச் சொல்லியிருக்கிறீர்கள். தம்பி சைலாசத்தின் துணையோடு.

கற்களை மட்டுமல்ல - இந்தச் சித்திரத்தில் தாங்கள் சொற்களையும் செதுக்கியிருக்கிறீர்கள்.

தங்களின் கைவண்ணத்தில் உருவான சிற்பங்களின் கலை நுணுக்க வெளிப்பாடு சிலிர்க்க வைத்தது.

தங்களின் தந்தையார் உருவாக்கிய அந்தச் சிலை கலையின் நுட்பத்துக்கும் உச்சத்துக்கும் ஓர் எடுத்துக்காட்டு.

தங்கள் படைப்புகளையெல்லாம் நேரம் வாய்க்கும் போது நேரில் கண்டு மகிழவும், தங்களோடு விரிவாக உரையாடவும் ஆவலோடிருக்கிறேன்.

ஒரு மாபெரும் கலைஞரான தங்களைச் சந்தித்தது குறித்தும், தாங்கள் காலத்தில் வாழ்வது குறித்தும் நான் மிகவும் பெருமைப்படுகிறேன்.

தங்கள் கலைக்கு என் வணக்கம்.

அன்புள்ள,

வைரமுத்து.

## ஆகமப் பண்டிதர் திரு. சபாரத்தினம் அவர்களுடன்...

திரு. கணபதி ஸ்தபதி அவர்கள் சிற்பக் கலைக் கல்லூரி முதல்வராகப் பணியாற்றிக் கொண்டிருந்த போது மாணவர் களுக்கு ஆகம சாஸ்திரங்களை போதிப்பதற்காக டாக்டர் சபாரத்தினம் அவர்களை அணுகினார். அப்போது அவர் சென்னைப் பல்கலைக் கழகத்தில் ஆகமப் பேராசிரியராகப் பணியாற்றிக் கொண்டிருந்தார்.

டாக்டர் சபாரத்தினத்தைப் பற்றி ஒரே வார்த்தையில் சொல்ல வேண்டுமென்றால் அவர் ஒரு நடமாடும் பல்கலைக் கழகம். தமிழ் ஆங்கிலம் சம்ஸ்கிருதம் ஆகிய மூன்று மொழிகளிலும் மிகுந்த புலமை பெற்றவர். மூன்று மொழிகளிலும் நூல்கள் எழுத வல்லவர். சிவாச்சாரியார் பரம்பரையைச் சேர்ந்தவர்.

திரு.கணபதி ஸ்தபதி அவர்களைப் பொறுத்தவரையில், பண்டிதர்களை அவருக்கு மிகவும் பிடிக்கும். மிக விரைவில் அவர்களுடன் பழகி, அவரது அறிவாற்றலைத் தனது மாணவர்களுக்கு எவ்வகையில் உபயோகித்துக் கொள்ளலாம், அவர் பாடுபட்டு உலகத்திற்குச் சொல்ல விரும்பும் விஞ்ஞானமான வாஸ்து விஞ்ஞானத்திற்கு அவரிடம் இருக்கும் அறிவாற்றல் பயன்படுமா என்றுதான் பார்ப்பார்.

இவ்வகையில் டாக்டர் சபாரத்தினம் அவர்களிடம் இருந்த அபிரிதமான ஆகம சாஸ்திரங்களைப் பற்றி அறிந்து கொண்டு, அவர் சொல்லி வரும் வாஸ்து சாஸ்திரத்திற்கும் ஆகமத்திற்கும்

மிகவும் ஒத்துப் போவதைக் கண்டார். ஆகமும் வாஸ்துவும் இரு கண்கள் போன்றவை என்று அடிக்கடி கூறுவார்.



திரு.சபாரத்தினம் அவர்கள் திரு.கணபதி ஸ்தபதியுடன்

இவ்வகையில் தொடங்கிய டாக்டர் சபாரத்தினம் அவர்களது நட்பு ஸ்தபதியார் கல்லூரியில் இருந்து ஓய்வு பெற்றபின்னும் தொடர்ந்து அது மேலும் வலுப்பெற்றது. திரு.ஸ்தபதி அவர்கள் தமிழில் எழுதும் வாஸ்து சாஸ்திரம் தொடர்பான புத்தகங்களை ஆங்கிலத்தில் மொழி பெயர்க்கும் பணியை டாக்டர் சபாரத்தினம் அவர்களிடம்தான்அளிப்பார்.

மொழி பெயர்த்தல் என்பது சாதாரண விஷயமன்று. மூலத்தில் உள்ளதை அப்படியே வார்த்தைக்கு வார்த்தை மொழிபெயர்த்தால் அது நன்றாக இருக்காது. படிக்கவும் சுவாரசியமாக இருக்காது. அதற்கு மூலத்தைப் பற்றிய அறிவும் அதைப் புரிந்து கொண்டு அழகு மிளிரும் வார்த்தைகளால் மொழி

பெயர்க்க தனித்திறமை வேண்டும். அந்த வகையில் டாக்டர் சபாரத்தினம் அவர்கள் திரு. கணபதி ஸ்தபதி அவர்களின் அநேக நூல்களைத் தனது அழகு மிளிரும் நடையில் விஞ்ஞானத்தின் பொருளும் சுவையும் மாறாது ஆங்கிலத்தில் மொழி பெயர்ப்பதில் வல்லவர்.



வாஸ்து விஞ்ஞானக் கருத்தரங்கில்

ஸ்தபதி அவர்கள், வாஸ்து விஞ்ஞானம் பற்றிய இரண்டு கருத்தரங்கங்களை தனது சொந்த செலவில் நடத்தியுள்ளார்கள். அவ்விரு கருத்தரங்களிலும் டாக்டர் சபாரத்தினம் அவர்களைப் பங்கேற்கச் செய்து முக்கிய உரையாற்றச் செய்தார். மயன் எழுதிய ஐந்திறம் என்ற புத்தகத்திலுள்ள தமிழ்ப் பாடல்களுக்கு அவரை ஆங்கில உரை எழுதும்படி பணித்து அப்புத்தகத்தை முதலாம் கருத்தரங்கின் போது ஸ்தபதி அவர்கள் வெளியிட்டார்.

**International Society for Investigation of Ancient Civilisation** என்ற ஆராய்ச்சி நிறுவனத்தின் தலைமைச் செயலகம் அமெரிக்காவில் கலிபோர்னியா மாகாணத்தில் உள்ளது. அதன்

கிளை சென்னையில் உள்ளது. அறிஞர் அருட்செல்வர் திரு.பொள்ளாச்சி மகாலிங்கம் அவர்களுடன் இணைந்து, டாக்டர் சபாரத்தினம் அவர்கள் அந்த ஆராய்ச்சியகத்தின் செயலாளராகப் பணி புரிந்து வருகிறார். டாக்டர் சபாரத்தினம் தற்சமயம் பல்கலைக் கழகப் பணியில் இல்லை என்றாலும் இவை போன்ற பல பணிகளில் தம்மை ஈடுபடுத்திக் கொண்டு ஓர் இளைஞரைப் போல் சுறுசுறுப்பாக இயங்கி வருபவர்.

ஸ்தபதி அவர்களின் குடும்ப நண்பர்களில் ஒருவராக விளங்கிடும் டாக்டர் சபாரத்தினம் அவர்கள் பழகுவதற்கு மிகவும் இனிமையான மனிதர். ஸ்தபதி தற்போது நடத்தி வரும் **V. Ganapati Sthapati & Assocaites** அலுவலகத்திற்கு அடிக்கடி வருகை தரும் வழக்கமுடையவர். அலுவலகத்தில் பணிபுரியும் அனைவரின் நன்மதிப்பையும் பெற்றவர்.

ஸ்தபதி அவர்கள் நடத்தும் வாஸ்து விஞ்ஞானம் தொடர்பான அனைத்து கருத்தரங்குகளிலும் டாக்டர் சபாரத்தினம் அவர்களின் ஆகம சாஸ்திரம் பற்றிய ஒரு சொற்பொழிவு கட்டாயம் இருக்கும். அமெரிக்காவில் வாஷிங்டன் மாகாணத்தில் ஸ்தபதி அவர்கள் நடத்திய வாஸ்து கருத்தரங்கிற்கும் டாக்டர் சபாரத்தினம் அவர்களை அழைத்துச் சென்று அங்கும் நம் விஞ்ஞானத்தின் மகிமையைப் பறைசாற்றி விட்டு வரச் செய்தார்.

இங்ஙனம், எப்படி வாஸ்து சாஸ்திரம் திரு.கணபதி ஸ்தபதி அவர்களின் வாழ்க்கையில் ஓர் அங்கமாகி விட்டதோ அதைப்போல டாக்டர் சபாரத்தினம் அவர்களும், அவரது ஆகம சாஸ்திரமும் மற்றொரு அங்கமாகி விட்டதெனலாம்.

## மேல்மருவத்தூர் ஸ்ரீபங்காரு அடிகளார் அவர்களுடன்..

திரு.கணபதி ஸ்தபதி அவர்கள் மகாபலிபுரம் சிற்பக் கலைக் கல்லூரியில் பணிபுரிந்து கொண்டிருந்த போது, ஒரு நாள் அதிகாலை வேளையில் அவரைக் காண்பதற்காக சில ஆசிரியர்கள் அவர் வீட்டிற்கு வருகை தந்தனர். ஸ்தபதி வீட்டில் வைத்து யாரையும் பார்ப்பதை விரும்பாமல், அவர்களைக் கல்லூரிக்கு வரும்படி கூறினார்.

ஆனால், அவர்கள் தாங்கள் மதுராந்தகத்திலிருந்து வருவதாகவும், அம்மா அவர்கள் அனுப்பி வைத்ததாகவும் கூறினர். ஸ்தபதி அவர்கள் ஆர்வம் மிகுந்து ''அம்மாவா? யார் அவர்?'' என்றார்.

உடனே அவர்கள் மேல்மருவத்தூர் ஸ்ரீ பங்காரு அடிகளார் அவர்களைப் பற்றிக் கூறி அவர் தெய்வ அருள் மிகுந்தவர் என்றும், அவர் மேல் மருவத்தூரில் ஆதிபராசக்தி ஆலயம் ஒன்றை நிர்மாணிக்க எண்ணியுள்ளார் என்றும், அதற்கான மூலவரான ஆதிபராசக்தி சிலையை ஸ்தபதி அவர்கள்தான் செய்து தர வேண்டும் என்றும் வேண்டிக் கொண்டனர்.

பங்காரு அடிகளாரின் சிறப்பினை அவர்கள் மூலமாகக் கேட்டறிந்த ஸ்தபதி அவர்கள், அவர் ஒரு சித்த புருஷனாக இருக்க வேண்டும் என்று மகிழ்ந்து சிலையைச் செய்வதற்கு ஒப்புக் கொண்டார். பங்காரு அடிகளார் குறிப்பிட்டபடிதான், அதாவது அவர் குறிப்பிட்ட வடிவமைப்பில்தான் சிலை செய்ய வேண்டுமென்று அவர்கள் கேட்டுக் கொண்டனர். ஸ்தபதியும்

'ரிஷி ப்ரோக்தம்' என்ற ஒரு முறையின்படி ரிஷி போன்ற சித்த புருஷர்கள் சொல்லுகின்றபடி சிலையைச் செய்வதற்கு சாஸ்திரங்களில் இடமுண்டு என்று கூறினார்.

கொடுத்த அளவின்படி சிலையைச் செய்ய எவ்வளவு செலவாகும் என்று அவர்கள் கேட்டதும் ஸ்தபதியும் எவ்வளவு ஆகும் என்று பைசா சுத்தமாகக் கணக்கிட்டு சில நிமிடங்களில் அவர்களிடம் அளித்தார்.

உடனே அவர்கள், ''நல்லது ஐயா! அம்மா இந்த பணத்தை அப்படியே உங்களிடம் கொடுக்கச் சொன்னார்கள்.'' என்று கூறி ஒரு சிறிய துணி முடிச்சை அவரிடம் அளித்தனர். ஸ்தபதி அதைப் பிரித்துப் பார்த்தார். ரூபாய் நோட்டுக்களும், சில்லறையுமாக நிறைய பணம் இருந்தது.

''என்ன இது? பணத்தை இப்படிக் கொடுக்கிறீர்களே! இதில் எவ்வளவு பணம் உள்ளது?'' என்று ஸ்தபதி அவர்களைப் பார்த்துக் கேட்டதும், அவர்கள் ''எங்களுக்குத் தெரியாது ஐயா! அம்மா இதை அப்படியே ஸ்தபதியிடம் ஆதிபராசக்தி திருவுருவச் சிலை செய்வதற்கு என்று கொடுத்து விடுங்கள் என்றார்கள். நாங்கள் அப்படியே உங்களிடம் அளித்து விட்டோம். எண்ணிப் பார்த்து விடுங்கள்.'' என்றனர்.

ஸ்தபதியும் முடிச்சிலுள்ள பணத்தை எண்ணத் தொடங்கினார். எல்லாவற்றையும் எண்ணி முடித்ததும் ஸ்தபதிக்கு வியப்பு, மகிழ்ச்சி மற்றும் திகைப்பு போன்ற எல்லாம் கலந்த ஓர் உணர்வு. காரணம், ஸ்தபதி ஆதிபராசக்தி திருவுருவச் சிலைக்கு எவ்வளவு செலவாகும் என்று கணக்கு போட்டு, ஒரு காகிதத்தில்

அவர்களிடம் எழுதிக் கொடுத்தாரோ, அதே தொகை, பைசா சுத்தமாக, அந்த முடிச்சில் இருந்தது.

ஸ்தபதிக்கு மெய் சிலிர்த்தது. சிலையைச் செய்வதற்கு உடனடியாக ஒப்புக் கொண்டார். ஸ்ரீ பங்காரு அடிகளார் குறிப்பிட்டிருந்த அதே அளவுகள் மற்றும் வடிவங்களுடன் அழகான சிலையை வடித்தார். சிலையை மேல் மருவத்தூர் ஆலயத்தில் பிரதிஷ்டை செய்தார்.

ஸ்ரீ பங்காரு அடிகளாருக்கு ஆதிபராசக்தி திருவுருவச் சிலை மிகவும் திருப்திகரமாக அமைந்தது குறித்து, அவருக்கும், ஸ்தபதிக்கும் மகிழ்ச்சியாக இருந்தது. சென்னை, மெரீனா கடற்கரையில், நடந்த மாபெரும் விழா ஒன்றில் திரு. கணபதி ஸ்தபதி அவர்களை கௌரவித்து, பாராட்டி, சன்மானம் வழங்கினார் ஸ்ரீ பங்காரு அடிகளார் அவர்கள்.

அதற்குப் பிறகு, இந்தியா முழுவதும், ஏன் உலகம் முழுவதும் என்றும் கூடச் சொல்லலாம், உள்ள அனைத்து ஆதிபராசக்தி சித்தர் வழிபாட்டு மன்றங்களுக்கும், ஏறக்குறை 36 சிலைகள் திரு. கணபதி ஸ்தபதி அவர்கள் செய்து கொடுத்தார்கள். அனைத்துமே மேல்மருவத்தூரில் உள்ள மூல விக்ரகத்தைப் போலவே அமைப்பும் வடிவமும் கொண்டவை. இத்தகைய பணிகளால் ஸ்ரீ பங்காரு அடிகளாரின் அன்புக்குப் பாத்திரமாகி விட்டார் ஸ்தபதியார்.

ஒரு முறை **Inspector General** திரு. பொன் பரமகுரு அவர்களும் திரு. கணபதி ஸ்தபதி அவர்களும் ஸ்ரீ பங்காரு அடிகளாரைக் காண்பதற்காக சென்று கொண்டிருந்தனர். திரு. பரமகுரு அவர்கள் அடிகளாரை அவசரமாக சந்திக்க வேண்டிய

நிர்பந்தத்தில் இருந்ததால், அடிகளாரது அன்புக்குப் பாத்திரமான ஸ்தபதியையும் உடன் அழைத்துச் சென்றிருந்தார். அவர்கள் அடிகளாரைச் சென்று பார்க்கும் போது ஏறக்குறைய நடுநிசியாகி விட்டது.

அவர்கள் இருவரையும் அன்போடு வரவேற்ற அடிகளார் திரு.பொன் பரமகுரு அவர்களுக்கு வேண்டிய பதில்களைக் கூறி விட்டு, பிறகு ஸ்தபதியை நோக்கி, ''நீங்கள் ஏன் உங்கள் குடும்பத்தைப் பற்றியே நினைத்துப் பார்க்காமல் எப்பொழுதும் உங்கள் பணியிலேயே கவனமாக இருக்கிறீர்கள்? உங்களுக்கு ஒரு வாரிசு உருவாக வேண்டாமா? உங்களுக்கென்று ஒரு குழந்தை வேண்டும் என்ற சிந்தனையே இல்லாமல் இருக்கிறீர்களே'' என்று கேட்டார்.

ஸ்தபதி அதற்கு பதிலளிக்கும் விதமாக, ''ஸ்வாமி! எனக்கும் 52 வயதாகி விட்டது. இத்தனை வருடங்களில் எனக்கு வாரிசு வேண்டும் என்பது பற்றிய யோசனையே இல்லாமல் இருந்து விட்டேன். இனிமேல் அது பற்றி நினைக்க வேண்டுமா?'' என்று சற்று வருத்தத்துடன் கூறினார்.

''கண்டிப்பாக வேண்டும் ஸ்தபதி! அதனால் நாளை காலை உங்கள் மனைவியுடன் இங்கு வாருங்கள். நான் ஒரு பச்சிலை தருகிறேன்.'' என்று கூறினார் அடிகளார்.

''சரி'' என்று முழுமனதுடன் கூறாமல் திரு.பரமகுரு அவர்களுடன் திரும்பி மகாபலிபுரம் வந்து விட்டார் ஸ்தபதி. அவருக்கு மறுபடி அடிகளாரை இது விஷயமாகப் போய்ப் பார்ப்பதில் சற்றும் விருப்பமில்லை. [தனக்காக ஏதாவது

வேண்டும் என்று ஒரு பொழுதும் எவரையும் போய்க் கேட்பதில் சற்றும் விருப்பமில்லாதவர் அவர். திரு.கணபதி ஸ்தபதி அவர்களின் முக்கியமான நல்ல குணங்களில் இதுவும் ஒன்று.]

ஆனால், அவருடன் கூட வந்த திரு.பரமகுரு அவர்களோ மிகவும் வற்புறுத்தினார். ''அடிகளாராகத்தானே உங்களை வரச் சொல்கிறார். போய்ப் பார்ப்பதில் என்ன தவறு?'' என்று வற்புறுத்தி, ஸ்தபதியாரின் துணைவியாரிடம் சென்று, ''அம்மா! நான் காலையில் கார் எடுத்துக் கொண்டு வந்து விடுகிறேன். தயாராக இருங்கள். அடிகளாரைப் போய்ப் பார்த்து விட்டு வரலாம்.'' என்றார்.

சொன்னபடியே மறுநாள் அதிகாலையில் அவர்களை அழைத்துப் போக காருடன் வந்து விட்டார் திரு.பொன் பரமகுரு அவர்கள். எவ்வளவு உயர்ந்த பதவி வகித்தாலும், அதற்காக சற்றும் அகந்தை கொள்ளாது, மிகவும் அன்புடன் அற்புதமான மனிதர் திரு.பொன் பரமகுரு அவர்கள், என்று ஸ்தபதி அடிக்கடி கூறுவார்கள். பழகுவதற்கு மிகவும் எளிமையானவரும் கூட.

மூவரும் ஆலயத்தை அடைந்து, அடிகளாரை அவரது அறையில் சென்று சந்தித்தனர். அடிகளார் ஸ்தபதியாரின் துணைவியார் திருமதி தெஷிணாவதி அம்மையாரிடம் சில பச்சிலைகளைக் கொடுத்து விட்டு அதை எப்படி சாப்பிட வேண்டும், அதனுடன் கூட என்ன சாப்பிட வேண்டும் போன்ற முறைகளைக் கூறினார். கவனத்துடன் அதனை செவிமடுத்த அம்மையாரும் அவ்வாறே செய்வதாகக் கூறினார். பின்னர் அனைவரும் அடிகளாரை வணங்கி விடைபெற்றனர்.

திருமதி தெஷிணாவதி அம்மையாரும் அடிகளார் கூறிய அனைத்தையும் செய்ய ஆரம்பித்தார். ஆனால், துரதிர்ஷ்ட வசமாக அந்த அம்மையாருக்கு அம்மருந்து ஒத்துக் கொள்ளாமல் போய் அதை நிறுத்த வேண்டிய கட்டாயம் வந்தது.

ஸ்தபதியாரும் அவரது நிலையைப் பார்த்து விட்டு, ''உன்னை நீ இவ்வளவு வருத்திக் கொண்டுதான் எனக்குப் பிள்ளை பெற்றுத் தர வேண்டும் என்றால், அந்தப் பிள்ளை எனக்கு வேண்டவே வேண்டாம். நீதான் எனக்கு முக்கியம். அதனால் மருந்தை நிறுத்தி விடு. நமக்குக் குழந்தை இல்லாவிடில் என்ன? நம்மைச் சுற்றியுள்ள, நம்மை அன்பாக கவனிக்கின்ற அனைவரையும் நம் குழந்தைகளாக வரித்துக் கொள்ளலாம். இது விஷயமாக மறுபடி அடிகளாரைப் பார்த்துத் தொந்தரவு செய்யக் கூடாது.'' என்று கூறி விட்டார்.

இவ்வாறாக ஸ்தபதியாருக்கும் அவரது துணைவியாருக்கும் இப்போது புதல்வர்கள், மருமகள்கள், புதல்விகள், மாப்பிள்ளைகள் என்று அநேகர் உள்ளனர். திரு.கணபதி ஸ்தபதியாரின் இளைய சகோதாராகிய திரு.இராமச்சந்திர ஸ்தபதி அவர்களின் வாரிசுகளையும், மற்றும் அலுவலகத்தில் பணிபுரியும் அனைவரையுமே தன் குழந்தைகளாகத்தான் எண்ணி அன்பு செலுத்துகின்றனர் இருவரும். அவ்வன்பின் உச்சக்கட்டத்தை ஒரு மகளாக நன்கு அனுபவித்தவள் என்ற முறையில் நான் இதைக் கூறுவதற்குப் பெருமையடைகிறேன்.

## தொழிலதிபர் திரு. வேணு ஸ்ரீனிவாசன் அவர்களுடன்...

திரு.கணபதி ஸ்தபதி அவர்கள் மகாபலிபுரம் சிற்பக் கலைக் கல்லூரியில் பணியாற்றிக் கொண்டிருந்த போது சிற்பக்கலையில் மிகவும் ஆர்வமுள்ள ஒரு அம்மையார், ஸ்தபதியை அடிக்கடி கல்லூரியில் சந்தித்து, சிற்பக் கலை பற்றிய அனைத்து செய்திகளையும் ஆர்வத்துடன் கேட்டறிவார்.

உயர் குடும்பத்தில் பிறந்த, பார்ப்பதற்கும் தெய்வீகக் களை பொருந்திய தோற்றமுள்ள அந்த அம்மையார் திருமதி பிரேமா ஸ்ரீனிவாசன் ஆவார். அவர்கள்தான் பாரம்பரியம் மிக்க தொழிலதிபர் குடும்பமாகிய T.V.S. குடும்பத்தைச் சேர்ந்தவர். இப்போது மிகவும் பிரபலமாக விளங்கும் T.V.S. நிறுவனத்தின் தலைவர் திரு.வேணு ஸ்ரீனிவாசன் அவர்களின் தாயார்.

அவரது சிற்பக்கலை ஆர்வத்தைப் பார்த்த ஸ்தபதி அவர்கள், சிற்பக் கலை தொடர்பான எல்லா செய்திகளையும் அவருடன் பகிர்ந்து கொள்வார். ஒருநாள் அந்த அம்மையார் ஸ்தபதியிடம், தன் வீட்டிற்குக் கருங்கல்லால் செய்யப்பட்ட பூஜை மாடம் ஒன்று செய்து தரும்படி கேட்டார். அந்தப் பூஜை மாடம் எப்படி இருக்க வேண்டும் என்பதையும் அவரே கூறி விட்டார்.

இந்தியாவில் முதன் முதலில் கருங்கல்லால் கட்டப்பட்ட லோமாரிஷி கேவ் (Lomarishi cave) என்ற கோவில் ஒரிஸ்ஸாவில் உள்ளது. அது எப்படி கட்டப்பட்டுள்ளதோ அதே பாணியில் பூஜை மாடமும் கட்டித் தர வேண்டும் என்று அந்த அம்மையார் கூறியதும் ஸ்தபதிக்கு மிகவும் ஆச்சரியம்.சிற்பக்கலை பற்றி இவ்வளவு

செய்திகள் தெரிந்து வைத்திருக்கிறாரே, அந்த அம்மையார் கேட்டபடி அழகாக பூஜை மாடத்தைச் செய்து கொடுக்க வேண்டும் என்று முடிவெடுத்து அதன்படியே செய்தும் கொடுத்தார்.

மிகவும் அழகாக வடிவமைக்கப்பட்ட அந்தப் பூஜா மண்டபத்தைப் பார்த்து அந்த அம்மையார் மிகவும் மகிழ்ந்து பாராட்டினார். இன்றும் அவர் வீட்டுப் பூஜையறையில் அந்த மண்டபம்தான் வைக்கப்பட்டுள்ளது. ஏறக்குறைய 40ஆண்டுகள் ஆகி விட்டன.

அந்த அம்மையாரின்மகன் திரு. வேணு ஸ்ரீனிவாசன் T.V.S. நிறுவனத் தலைவராகப் பொறுப்பேற்றுக் கொண்டவுடன் புராதானமான சிதிலமடைந்த பண்டைய தமிழகக் கோயில்களைப் புதுப்பித்துக் கட்டி நித்திய பூஜை நடைபெற ஏற்பாடு செய்வதற்காக ஸ்ரீ வேணுகோபால சுவாமி கைங்கர்ய டிரஸ்ட் என்று ஒரு தொண்டு நிறுவனத்தை நிறுவி அதன் மூலம் கணக்கிலடங்கா பாழடைந்த கோயில்களைப் புதுப்பித்தார்.

முதல் கோவிலாக வேலூர் அருகிலுள்ள படவேடு கிராமத்திலுள்ள ஒரு மலை முகட்டில் ஸ்ரீ வேணுகோபால சுவாமி திருக்கோயில் பணி தொடங்கப் பட்டது. அப்பணி 1991ல் தொடங்கப்பட்டது. அன்றிலிருந்து இன்று வரை [2005], திரு. வேணு ஸ்ரீனிவாசன் அவர்களால் பொருளுதவி செய்யப்பட்டு, திரு.கணபதி ஸ்தபதி அவர்களால் புனர் நிர்மாணம் செய்யப்பட்ட கோவில்களின் எண்ணிக்கை கணக்கிலடங்காது.

வேலை அனைத்தும் முடித்த பின்னரும் அதற்குண்டான சன்மானத்தைக் கொடுக்க யோசிக்கும் மக்கள் நிரம்பிய

இவ்வுலகில் ''ஒரு கோவில் திருப்பணி ஆரம்பிக்க வேண்டும் என்று அழைக்க வரும்பொழுதே தட்டில் வெற்றிலை, பாக்கு, பழம் வகையறாக் களுடன் ஸ்தபதியின் சன்மானத் தொகையையும் வைத்து, காலில் விழுந்து ஆசிர்வாதம் வாங்கும் ஒரே ஒருவர் தொழிலதிபர் திரு.வேணு ஸ்ரீனிவாசனாகத்தான் இருக்க முடியும்'' என்று ஸ்தபதி கூறுவார்.

முதன் முதலில் முடிக்கப் பெற்ற ஸ்ரீ வேணுகோபால சுவாமி திருக்கோவில் கும்பாபிஷேகத்தின் போது திரு வேணு ஸ்ரீனிவாசன் அவர்கள் பேசுகையில், ''இந்தத் திருப்பணியை மிகவும் பாங்குற முடித்துத் தரும் பணியை திரு.கணபதி ஸ்தபதியிடம் அளிக்கும்படி தன்னைப் பணித்தவர் தனது தாயார் திருமதி பிரேமா ஸ்ரீனிவாசன் அவர்கள்தான்'' என்று கூறினார்.

பல வருடங்களுக்கு முன்பு தன்னை அடிக்கடி கல்லூரியில் வந்து சந்தித்து, சிற்பக் கலை பற்றிய செய்திகளை விவாதிக்கும் அந்த அம்மையாரை மறுபடி நன்றியுடன் நினைவு கூர்ந்தார் ஸ்தபதி.



ஸ்ரீ விநாயகர் திருக்கோவில், மதுரை.



ஸ்ரீ கணபதி திருக்கோவில், படவேடு.

அதற்குப்பிறகு எண்ணிலடங்கா திருக்கோயில்கள் திரு. வேணு ஸ்ரீனிவாசன் அவர்களால் திரு.கணபதி ஸ்தபதி அவர்களின் துணை கொண்டு புதுப்பிக்கப்பட்டது. படவேடு கிராமத்திலேயே

ஸ்ரீ அம்மையப்ப ஈஸ்வரர் திருக்கோவில், ஸ்ரீ ராமச்சந்திர சுவாமி திருக்கோவில், ஸ்ரீ முருகன் திருக்கோவில் [நட்சத்திரக் குன்று], ஸ்ரீ ராமலிங்க சௌடேஸ்வரி திருக்கோவில், கணேசபுரம் ஸ்ரீ கணபதி திருக்கோவில், ஸ்ரீ சின்ன கோட்டை வரதர் திருக்கோவில், ஸ்ரீ லஷ்மிநரசிம்மர் திருக்கோவில், ஸ்ரீ ஆஞ்சநேயர் திருக்கோவில், ஸ்ரீ காளியம்மன் திருக்கோவில், ஸ்ரீ ரேணுகாபரமேஸ்வரி திருக்கோவில் என்று இப்பட்டியல் நீண்டு கொண்டே போகும்.

இதைத்தவிர திருநெல்வேலி மாவட்டத்தில் நவதிருப்பதி என்றழைக்கப்படும் ஒன்பது வைணவத் திருக்கோவில்களும் திரு. வேணு ஸ்ரீனிவாசன் அவர்களால் புதுப்பிக்கப்பட்டன. ஒவ்வொன்றும் பண்டைய மன்னர்களால் கட்டப்பட்ட மிகப்பெரிய கோவில்கள்.



ஸ்ரீ கணேசர் திருக்கோவில், ஹோசூர்

அம்மாவட்டத்திலுள்ள இரட்டைத் திருப்பதி என்ற ஊரில் கேரள முறைப்படி சோழி உருட்டி ஆரூடம் பார்த்ததில் [பிரஷ்னம்] அந்தக் கோவிலில் பல நூறு வருடங்களுக்கு முன்னர் அத்திருக்கோவிலைக் கட்டிய ஸ்தபதியை அவமதித்து விட்டதாகவும் அதனால் அந்த திருக்கோவிலுக்கு சாந்நித்யம் விலகி விட்டதாகவும் தெரிய வர, அதை அறிந்த திரு.வேணு

ஸ்ரீனிவாசன் அவர்கள், முன்னோர்கள் செய்த தவறுக்குப் பிராயசித்தமாக ஸ்தபதிகளின் பிரதிநிதியாக திரு.கணபதி ஸ்தபதி அவர்களை நினைத்து, அழைத்து, அமரவைத்து, அவருக்கு உரிய மரியாதைகளைச் செய்து, முன்னோர்கள் செய்த பிழையை மன்னிக்குமாறு வேண்டினார்.

இதைக் கண்டு நெகிழ்ந்த கணபதி ஸ்தபதி அவர்கள், இப்பிறவியில் எந்தத் தவறுமே செய்யாத அவர் தானே தவறு செய்ததாக நினைத்துக் கொண்டு மன்னிப்பு கேட்ட அவரது உயரிய பண்பு கண்டு வியந்து அவரை மனதார, வாயார ஆசிர்வதித்தார். சமுதாயத்தில் உயர்மட்டத்தில் இருப்பவர்களுக்கு அடக்கமும் பணிவும் சேர்ந்திருந்தால் அது தங்கக் கிரீடத்தில் மாணிக்கத்தைப் பதித்ததைப் போல மிகவும் சிறப்புடையதாகும்.

திரு.வேணு ஸ்ரீனிவாசன் அவர்கள் ஒரு வைணவராய் இருப்பினும் சைவம், வைணவம் என்ற பாகுபாடே அவரிடம் சிறிதும் கிடையாது. சிதிலமடைந்த கோவில் எதுவாக இருப்பினும் அதை ஸ்தபதியின் துணை கொண்டு புதுப்பித்து விடுவதை மட்டுமே மனதில் கொண்டவர். அவரது அந்த உயரிய பண்பு ஸ்தபதி அவர்களை மிகவும் கவர்ந்த ஒரு பண்பாகும்.

அடையவே முடியாத உயரத்தில் உள்ள செங்குத்தான பழைய கோவில்களைக் கூட அவர் புதுப்பித்துள்ளார். வயோதிகம் காரணமாக திரு.ஸ்தபதி அவர்கள் ஏற முடியாதாகையால், ஒரு டோலி [பல்லாக்கு போன்ற அமைப்புடையது] ஏற்பாடு செய்து, அதில் ஸ்தபதியை அமர வைத்து, அதனைத் தூக்குவதற்குத் தகுந்த ஆட்களை நியமித்து, அத்தோடு மட்டுமல்லாமல், ஆட்கள் கவனமாகத் தூக்கிச் செல்கிறார்களா என்பதற்காகத் தானும்

கூடவே நடந்து செல்லும் அன்பான மாமனிதர் திரு.வேணு ஸ்ரீனிவாசன் அவர்கள்.

திருப்பணிகள் திரு.ஸ்தபதி அவர்களின் மேற்பார்வையில், அவரது சகோதரர் மகன் திரு.செல்வநாதன் தலைமையில்தான் நடைபெறும் என்றாலும், ஸ்தபதியின் பாதங்கள் கண்டிப்பாக அக்கோவிலில் பட வேண்டும் என்ற விஷயத்தில் திரு. வேணு ஸ்ரீனிவாசன் அவர்கள் உறுதியாக இருப்பார். ஒவ்வொரு கோவில் திருப்பணியிலும் அவ்வுறுதி இருக்கும்.

பண்டைய கோவில்களைப் புதுப்பிப்பது மட்டுமன்றி அக்கோவிலுக்கு நிரந்தர வருமானத்திற்காக, நித்திய பூஜைகளுக்காக ஒரு குறிப்பிட்ட தொகையை ஒதுக்குவது அவரது வழக்கமாகும். அது மட்டுமன்றி, அக்கோவிலில் பூஜை செய்யும் அர்ச்சகர்களின் நல்வாழ்வுக்காகவும் ஒரு குறிப்பிட்ட தொகையை ஒதுக்கி, அதிலிருந்து வரும் வட்டியிலிருந்து அவர்களுக்கு ஒவ்வொரு மாதமும் ஊதியம் வரும்படி ஏற்பாடு செய்து விடுவார். ஸ்தபதி அவர்கள் திரு. வேணு ஸ்ரீனிவாசன் அவர்களிடம் மிகவும் வியந்து பாராட்டும் குணங்களில் இதுவும் ஒன்று.

ஸ்தபதி எப்படி குஞ்சரமல்லன் இராஜஇராஜப் பெருந்தச்சனின் வழி வந்தவர், அவருடைய வாரிசு என்று கூறுகிறாரோ, அதைப்போல, கோவில் திருப்பணிகளாகச் செய்து வரும் திரு.வேணு ஸ்ரீனிவாசன் அவர்களை, மாமன்னர் இராஜஇராஜனின் வழி வந்தவர், அவருடைய வழித்தோன்றல் என்று கூறுவதில் தவறேதும் இல்லை அல்லவா?

## திரு.கணபதி ஸ்தபதி அவர்களின் பட்டங்களும், விருதுகளும் ....

சிற்பக்கலைக்கும் வாஸ்துக் கலை மரபுக்கும் திரு.கணபதி ஸ்தபதியார் அவர்கள் ஆற்றிய பணிகள் ஏராளம். இந்தியாவிலும், வெளிநாடுகளிலும் அவர் கட்டிய கோவில்கள் நமது பாரம்பரிய சிற்பக் கலை மரபிற்கு எடுத்துக் காட்டுகளாகும். இவரது சேவையைப் பாராட்டிப் பல்வேறு நிறுவனங்களும், மத்திய மாநில அரசுகளும் ஏராளமான விருதுகளையும், பட்டங்களையும் வழங்கி உள்ளன. அவை அனைத்தைப் பற்றிச் சொல்ல வேண்டுமெனில் இந்த அத்தியாயம்தான் இந்த நூலிலேயே மிக நீண்டதாகி விடும். எனவே, முக்கியமான விருதுகளைப் பற்றி மட்டும் இங்கே பார்ப்போம்.



சிறந்த கைவினைக் கலைஞர் விருது

சிறந்த வைவினைக் கலைஞர் விருது 1973 ம் ஆண்டு அப்போதயை ஜனாதிபதியான திரு. V.V.கிரி அவர்களிடமிருந்து பெற்றார்.



துளசி சம்மான் விருது



ஹாலந்திலுள்ள மஹரிஷி வேத பல்கலைக் கழகம்
கௌரவ டாக்டர் பட்டம் வழங்குதல்

சிறந்த ஆசிரியருக்கான நல்லாசிரியர் விருது தமிழக அரசின் சார்பில் 1985 ம் வருடம் பெற்றார். கலைக்குழுச் செம்மல் விருது லலித கலா அகாடமியிடமிருந்து 1985 ம் வருடம் பெற்றார்.

துளசி சம்மான் விருது 1989 ம் வருடம் மத்தியப் பிரதேச அரசால் வழங்கப்பட்டது.

கௌரவ டாக்டர் பட்டம் மஹரிஷி வேத பல்கலைக்கழகம் [ஹாலந்து] 1995ம் வருடம் அளித்தது. [இதன் விரிவான செய்தியை தனி அத்தியாயத்தில் காண்க.]

ஹவாய் தீவிலுள்ள, குவய் ஆதினத்தின் சைவ சித்தாந்த கழகத்திற்கு ஆதீன ஸ்தபதியாக 1982 ம் வருடத்திலிருந்து நாளது தேதி வரை பணியாற்றி வருகிறார்.

இராஜா சர் முத்தையா செட்டியார் அவர்களின் நூற்றாண்டு நினைவுப் பரிசு ரூபாய் ஒரு இலட்சம் 1997 ம் ஆண்டு வழங்கப்பட்டது.

கம்பன் கழகம், சென்னை, வெள்ளி விழா கொண்டாடிய போது கம்பன் அடிப்பொடி நினைவு விருது ஆகஸ்டு மாதம் 2000 ம் ஆண்டு வழங்கி கௌரவித்தது.



கலைமாமணி விருது

ஆழ்வார்கள் ஆய்வு மையம் ஆகஸ்டு, 2000 ல் கலைஞர் விருது வழங்கியது.

இயல், இசை, நாடக மன்றம் நவம்பர் 2000ல் கலைமாமணி விருது அளித்தது.

கோவை மாவட்டம், ஆனைகட்டியில் ஆர்ஷ வித்யா குருகுலத்தில், சிவா விஷ்ணு ஆலயம் வடிவமைத்தமைக்காக பூஜ்யஸ்ரீ தயானந்த சரஸ்வதி சுவாமிகளால் 13.10.1998 ம் ஆண்டு சிறப்பாக கௌரவிக்கப்பட்டார்.

சில்பகலா சக்ரவர்த்தி என்ற விருது பெங்களூர் வாழ் விஸ்வகர்ம மக்களால் 1976ம் ஆண்டு வழங்கப்பட்டது.

சில்பகலா நிபுணா என்ற விருது இலங்கையில் வாழும் விஸ்வகர்ம மக்களால் வழங்கப்பட்டது.

கம்பன் அடிப்பொடி திரு.சா.கணேசன் அய்யா அவர்களால் சில்பகலா சாகரம் என்ற விருது காரைக்குடியில் வழங்கப்பட்டது.



கபிலவாணர் விருது

சென்னை வானவில் கலைக் கழகத்தினால் பாரதி விருது டிசம்பர் மாதம் 2000 ம் ஆண்டு வழங்கப்பட்டது.

ஞானஒளி அமைதித் தூதர் விருது V.G.P. உலகசமாதானக் கோவில், சென்னை நவம்பர் மாதம் 2001ம் ஆண்டு வழங்கியது.

திருமதி லதா இரஜினிகாந்த அவர்கள் நடத்தும் ஆஷ்ரம் பள்ளியின் சார்பில் பீஷ்மர் விருது டிசம்பர் 2001 ல் வழங்கப்பட்டது.

திருக்கோவிலூர் கலைக் கழகம் வழங்கிய கபிலவாணர் விருது ஜூலை 2002ம் ஆண்டு வழங்கப்பட்டது.

வாஸ்து வேதி என்ற விருது சென்னை வாழ் விஸ்வகர்ம சிற்பிகளால் வழங்கப்பட்டது.

அமெரிக்காவில், வாஷிங்டனில் வாழும் இந்தியக் குடிமக்களால் வாஸ்து விஞ்ஞானி என்ற விருது வழங்கப்பட்டது. சைவத்தையும் வைணவத்தையும் இணைக்கும் வகையில் வாஷிங்டனில் 7 மில்லியன் அமெரிக்க டாலர் மதிப்பீட்டில் திரு.கணபதி ஸ்தபதி அவர்கள் கட்டிய கவின் மிகு சிவா விஷ்ணு ஆலயத்தைப் பாராட்டி இவ்விருது வழங்கப்பட்டது.



சில்பகுரு விருது

அமெரிக்காவில், மியாமியில் வாழும் இந்தியக் குடிமக்களால் ஆதுனிக விஸ்வகர்மா என்ற விருது வழங்கப்பட்டது.

மத்திய அரசின் கைவினைப் பொருள்கள் மற்றும் கைத்தறித்துறையின் சார்பில் சில்பகுரு என்ற விருது மாண்புமிகு பாரத ஜனாதிபதி டாக்டர் அப்துல் கலாம் அவர்களால் 2002 ம் ஆண்டு வழங்கப்பட்டது.

தென்னக மயன் என்ற விருது திரு.ஸ்தபதியார் பயின்ற காரைக்குடி அழகப்பா பல்கலைக் கழகத்தால் வழங்கப்பட்டது.

அஹோபில மடம் பூஜ்ய ஸ்ரீ அழகிய சிங்கர் அவர்களால் சில்பகலாநிதி என்ற விருது வழங்கப்பட்டது.

சில்பகலாரத்தினம் என்ற விருது காஞ்சி மடம் பரமாச்சாரியார் ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சுவாமிகளால் வழங்கப்பட்டது.

அமெரிக்காவின், வாஷிங்டன் DC,ல் வாழும் இந்திய மக்களால் விஸ்வகர்ம ஜகத்குரு என்ற பட்டம் வழங்கப்பட்டது.

அமெரிக்காவின், ஓமஹா மாநிலத்தில் வாழும் இந்திய மக்களால் பிரணவ வேதி என்ற விருது வழங்கப்பட்டது.

சமீபத்தில் உலகையே உலுக்கிய சுனாமி என்னும் கடற்கோள் ஏராளமான சேதங்களை விளைவித்தாலும், கன்னியாகுமரியில் வான்புகழ் வள்ளுவனுக்கு 133 அடி உயரத்தில் திரு.ஸ்தபதியார் எழுப்பிய சிலை அழியாது அழகாக நிற்பது கண்டு பாராட்டியவர்கள் ஏராளமானோர். பத்திரிகை வாயிலாகவும், தொலைபேசி மூலமாகவும் நிறைய பாராட்டுக்கள் குவிந்தன.

அவற்றில் முக்கியமானது, முரசொலி அறக்கட்டளை சார்பில் கலைஞர் விருது வழங்கி, ரொக்கப் பரிசாக ரூபாய் ஒரு இலட்சம் அளித்து கௌரவித்ததாகும். இவ்விருது 28.01.2005ம் ஆண்டு கலைஞர் திரு.மு.கருணாநிதி அவர்களால் வழங்கப்பட்டது.



முரசொலி அறக்கட்டளை விருது

இவ்வாறு எண்ணிலடங்கா விருதுகளை அவர் பெற்றிருக்கிறார். இவற்றைத் தவிர பல்வேறு ஸ்தாபனங்களிலும், பல்கலைக் கழகங்களிலும் உறுப்பினராகப் பதவி வகித்துக் கொண்டு வருகிறார்.

இந்திய கட்டிடக் கலைஞர்கள் கழகத்தின் [Indian Institute of Architects (IIA)] கௌரவ உறுப்பினராக 1993 ம் ஆண்டிலிருந்து வகித்து வருகிறார்.

புது டெல்லி, மத்திய கைவினைஞர்கள் நலவாரியம், தஞ்சையில் இயங்கி வரும் தென்னிந்திய பண்பாட்டு மையம்,

மற்றும் புது டெல்லியிலுள்ள இந்தியக் கலைக் கழகம் ஆகியவற்றின் உறுப்பினராகப் பதவி வகித்து வருகிறார்.

ஆகமங்களைப் பற்றி ஆராய்ந்து வரும் திருப்பதியிலுள்ள கேந்திரிய சம்ஸ்கிருத வித்யாபீடத்திற்கு உறுப்பினராகப் பதவி வகித்தவர்.

இந்தியன் வங்கி, சென்ட்ரல் பேங்க் ஆப்ஃ இன்டியா மற்றும் சின்டிகேட் வங்கியின் கௌரவத் தலைவராகப் பணியாற்றியவர். **(Director on the Board of Directors of Syndicate Bank, Indian Bank and Central Bank of India.)**

அகில இந்திய மஹரிஷி ஸ்தாபத்திய வேத வித்வத் பரிஷத், ஹாலந்து, என்ற அமைப்பிற்குத் தலைவராக விளங்கி வருகிறார்.

தஞ்சை சரஸ்வதி மஹாலின் பதிப்புத் துறையின் வல்லுநர் குழுவின் உறுப்பினர்.

தஞ்சை தமிழ்ப்பல்கலைக் கழகத்தில் இயங்கி வரும் சிற்பத்துறையின் ஆலோசனைக் குழு உறுப்பினர்.

இந்துமதத் தகவல் களஞ்சியத்தினை உருவாக்கும் **('Encyclopedia of Hinduism')** வல்லுனர் குழுவின் உறுப்பினர்.

திருப்பதி வெங்கடேஸ்வரா பல்கலைக்கழகத்தின் நுண்கலைப் பிரிவின் உறுப்பினர்.

சென்னை, லலித் கலா அகாடமியின் உறுப்பினர்.

மேற்சொன்ன எல்லாவற்றையும் விட முக்கியமான ஒன்று உள்ளது. அது, அவர் ஏராளமானோரது உள்ளங்களில் நிரந்தர இடம் பிடித்து விட்ட அன்பான ஆயுட்கால உறுப்பினர்!!

## கலைப்படைப்புகள் பற்றி ....

திரு.கணபதி ஸ்தபதி ஆற்றிய கலைப்பணிகள் பற்றி முன்னே சொல்லப்பட்ட அத்தியாயங்களில் பார்த்தோம். அங்கே விட்டுப்போன இன்னும் சில கலைப் பொக்கிஷங்களை இங்கே பார்ப்போம்.

திருவள்ளுவருக்கு சிறப்பு செய்விக்கும் வகையில் சென்னைக்கே அழகு சேர்த்துக் கொண்டிருக்கும் வள்ளுவர் கோட்டம் அவரது கை வண்ணத்தில் 1976ம் ஆண்டு கட்டப்பட்டது.

ஐந்தாம் உலகத் தமிழ் மாநாட்டிற்காக எட்டுத் திக்கைக் குறிக்கும் வகையில் பிரம்மாண்டமான எட்டுத் தோரண வாயில் 1981ம் ஆண்டு மதுரையில் இவரால் உருவாக்கப்பட்டது.



வள்ளுவர் கோட்டம், சென்னை.

1982 ம்ஆண்டு மதுரை காமராஜர் பல்கலைக் கழகத்தின் நுழைவு வாயிலில் அழகிய தோரணவாயில் இவரால் கட்டப்பட்டது.

திருச்சி பாரதிதாசன் பல்கலைக் கழகத்தின் அலங்கார நுழைவு வாயில் திரு.ஸ்தபதியால் 1984ம் ஆண்டு உருவாக்கப்பட்டது.



காமராஜர் பல்கலைக்கழக நுழைவு வாயில், மதுரை



தமிழ்ப் பல்கலைக்கழக நுழைவு வாயில், தஞ்சை

1985ம் வருடம் பாப்பாரப்பட்டியில் விடுதலை வீரர் திரு.சுப்ரமணிய சிவா அவர்களுக்காக ஒரு நினைவுத் தூண் இவரால் கட்டப்பட்டது.

தஞ்சையிலுள்ள தமிழ்ப் பல்கலைக் கழகத்தின் நுழைவு வாயிலில் முற்றிலும் கல்லால் ஆன கவின்மிகு தோரண வாயில் இவரால் உருவாக்கப்பட்டது.

காரைக்குடியில் தமிழ்த்தாய் கோவில் கம்பன் மணி மண்டபத்தில் திரு.ஸ்தபதியின் கைவண்ணத்தில் உருவானது.

அங்கு தமிழ் மொழிக்கு ஓர் அழகிய வடிவம் (personification of Tamil language) திரு.ஸ்தபதியின் கற்பனையில் உருவாக்கப்பட்டு தமிழ்த்தாய் சிலை விளங்குகிறது.

திரு. கணபதி ஸ்தபதி அவர்கள், கல்லூரி முதல்வர் பணியிலிருந்து ஓய்வு பெற்றதும், V.Ganapati Sthapati & Associates என்ற பெயரில் ஒரு நிறுவனத்தைத் தொடங்கி, அதன் மூலம் உலகெங்கும் பல கோவில்களையும், கவின்மிகு கட்டிடங் களையும் கட்டி வருகிறார். பாரத நாட்டின் தொன்மை வாய்ந்த வாஸ்து மற்றும் சிற்பக் கலையை உலகெங்கும் பரப்பி வருகிறார். இந்தியாவிலும், வெளிநாடுகளிலும் கணக்கிலடங்கா கோவில்களைக் கட்டியுள்ளார். குறிப்பாக, அமெரிக்கா வாழ் இந்திய மக்களுக்காக அவர் பல கோவில்களைக் கட்டியுள்ளார்.

வாஷிங்டன் நகரத்தில் மருத்துவராகப் பணிபுரியும் டாக்டர் சிவா என்பவர் ஒரு முறை திரு.கணபதி ஸ்தபதியைச் சந்தித்து, ''ஸ்தபதி! நம் நாட்டை விட்டு வெகு தொலைவில் வந்து பணியாற்றும் நாங்கள் இங்கு மிகவும் ஒற்றுமையாகத்தான் இருக்கிறோம். கலை நிகழ்ச்சி போன்ற பொது நிகழ்ச்சிகளில் கூடி நேரத்தை மகிழ்ச்சியாகக் கழிக்கிறோம். ஆனால், தெய்வ வழிபாட்டில் மட்டும் வித்தியாசங்கள் இருக்கத்தான் செய்கின்றன. இந்துக்களிலேயே சைவம், வைணவம் என்ற இரு பிரிவினருக்கும் வெவ்வேறு கோவில்கள் இருக்கின்றன. இரு தெய்வங்களையும் ஒரே கோவிலில் வைக்கலாமா? அதற்கு சாஸ்திரங்கள் உள்ளனவா?'' என்று கேட்டார்.


சிவா விஷ்ணு ஆலயம், வாஷிங்டன்

ஸ்தபதியும் உடனே ''தாராளமாகச் செய்யலாம். சிவா விஷ்ணு கோவில் கட்டலாம். ஸ்கந்தோபநிஷத்தில் உள்ள ஒரு ஸ்லோகம் இதனை விளக்குகிறது.'' என்று கூறி அந்த ஸ்லோகத்தைக் கூறினார்.

शिवाय विष्णु रूपाय शिव रूपाय विष्णवे ।
शिवस्य हृदयं विष्णु: विष्णोश्च हृदयं शिव: ।।

*'சிவாய விஷ்ணு ரூபாய சிவ ரூபாய விஷ்ணவே*
*சிவஸ்ய ஹ்ருதயம் விஷ்ணு, விஷ்ணோச்ச ஹ்ருதயம் சிவஹ'*

என்ற ஸ்லோகத்தைக் கூறி அர்த்தத்தையும் விளக்கினார்.


ஸ்ரீ இராமர் ஆலயம், சிகாகோ

இவ்விளக்கத்தைக் கேட்டு மகிழ்ந்த டாக்டர் சிவா அவர்கள் அமெரிக்காவில் வாஷிங்டன் **(Washington DC)** நகரில் சிவா விஷ்ணு ஆலயம் கட்டுவதற்குத் தேவையான ஏற்பாடுகளைத் தொடங்கினார். அதன்படி 1991ம் ஆண்டு தொடங்கப்பட்டு, 1993ம் ஆண்டில் மிகவும் அழகாகவும்,

கம்பீரமான எழிலார்ந்த வடிவத்துடனும் கட்டப் பெற்றதுதான் 7 மில்லியன் அமெரிக்க டாலர் செலவில் அமையப் பெற்ற சிவா விஷ்ணு ஆலயம். திரு. ஸ்தபதி அவர்கள் மிகவும் மனமகிழ்ந்து, ஆத்ம திருப்தியுடன் கட்டப்பட்ட கோவில் இது என்று கூறுவார்.



ஸ்ரீ தண்டாயுதபாணி ஆலயம், சிங்கப்பூர்

அதற்கு முன்பே, அமெரிக்கா வின் பல மாகாணங்களிலும் பல கோவில்களைக் கட்டியுள்ளார். 75 அடி உயரம் கொண்ட இராஜ கோபுரத்துடன் கூடிய ஸ்ரீஇராமர் கோவில் சிகாகோ (Chicago) மாகாணத்தில் இல்லினாய்ஸ் (Illinois) என்ற இடத்தில் 1986ம் ஆண்டு கட்டினார்.

1986 ம் ஆண்டு, சிங்கப்பூரில் ருத்ர காளியம்மன் ஆலயம் திரு.கணபதி ஸ்தபதி அவர்களால் கட்டப்பெற்றது.

அதே சமயத்தில் அவரால் கட்டப் பட்டதுதான் சிங்கப்பூரி லுள்ள ஸ்ரீ தண்டாயுத பாணி திருக்கோவில். சிங்கப்பூர் வாழ் செட்டி யார் சமூகத்தினர் [நகரத் தார்] அனைவரின் விருப்பப் படி அக்கோவில் சிங்கப்பூர், டாங்க் ரோடில் (Tank Road) கட்டப்பட்டது.

அத்திருக்கோவிலின் கும்பாபிஷேக தினத்தன்று அங்குள்ள செட்டியார்கள் அக்கோவிலை மிகவும் பெரிய கோவில் என்று

உயர்வாகப் பாராட்டிப் பேசினர். அக்கோவிலைக் கட்டிய திரு. ஸ்தபதியையும் பாராட்டினர். அதற்குப் பிறகு பேசிய ஸ்தபதி அவர்கள் கூறிய கருத்து அனைவராலும் பெரிதும் இரசிக்கப் பட்டது.

''செட்டியார்கள் அனைவரும் சேர்ந்து கட்டிய இக்கோவிலை மிகப் பெரிதென அனைவரும் பாராட்டினீர்கள். மிகவும் மகிழ்ச்சி. ஆனால், நாட்டுக்கோட்டை சமூகத்தினர் கட்டிய கோவில்களிலேயே இதுதான் சிறியது என்று கூறலாம். ஏனெனில், இந்தியாவில் அச்சமூகத்தினர் கட்டிய கோவில்களின் அமைப்பையும், எண்ணிக்கையையும் பார்த்தால் இக்கோவில் மிகச் சிறியதுதான்.'' என்று அவர் கூறியதும் பலத்த கரகோஷத்துடன் அனைவரும் அதை ஆமோதித்தனர்.

இவ்வாறு, நகரத்தார் சமூகத்தினர் மீது மிகவும் அன்பும் மதிப்பும் உடையவர் திரு.கணபதி ஸ்தபதி அவர்கள்.

1987ம் ஆண்டு இங்கிலாந்தில் முருகன் ஆலயம் அவரால் கட்டப்பட்டது. இலண்டன் **(London)** மாகாணத்தில்ஹைகேட் **(Highgate)** என்ற இடத்தில் இத்திருக்கோவில் உள்ளது.

1989ம்ஆண்டு மலேஷியாவில் முருகன் ஆலயமும், இங்கிலாந்தில் மேனார் பார்க் **(Manor Park)** என்ற இடத்தில் ஸ்ரீ மஹாலஷ்மி ஆலயமும் திரு.கணபதி ஸ்தபதி அவர்களால் நிர்மாணிக்கப்பட்டது.

இந்தத் தருணத்தில் ஒரு முக்கியமான செய்தி வாசகர்களுக்காக சொல்லப்பட வேண்டும். திரு.கணபதி ஸ்தபதி அவர்கள் மாமல்லபுரம் அரசு சிற்பக் கலைக்கல்லூரி முதல்வராக

27 ஆண்டு காலம் பணியாற்றியவர். 1988ம் ஆண்டுதான் ஓய்வு பெற்றார். 'பணியில் இருக்கும் போதே கல்லூரிப் பணியையும் கவனித்துக் கொண்டு, இந்தியா மற்றும் அயல்நாடுகளில் எப்படி இவ்வளவு கோவில்களைக் கட்டினார்?' என்ற வியப்பு ஏற்படும். அதுதான் அவரது அயராத உழைப்பின் அடையாளம்.



ஸ்ரீ சிவ சுப்ரமணிய சுவாமி ஆலயம், பிஜித் தீவு

10 வருடங்களில் 20 வருடங்களில் முடிக்க வேண்டிய பணிகளை முடித்து விடுவார். அப்பணிகளுக்குத் தேவையான தகுந்த நபர்களைத் தேர்ந்தெடுத்து, அந்தந்த இடங்களுக்கு அனுப்பி, பணிகள் செவ்வனே நடைபெறுகிறதா என்று நேரடியாகவும், தொலைபேசி மூலமும் மேற்பார்வையிட்டு, அப்பணி முடியும் வரை கருமமே கண்ணாய் உழைப்பவர்.



ஸ்ரீ கணேச சிவ துர்கா ஆலயம், சிகாகோ

நமது பாரம்பரியக் கலை மீது அவ்வளவு காதல். அது மட்டுமல்ல, அப்படி அவரால் வாழ்க்கையில் முன்னேறி பெரும் பொருள் ஈட்டிய சிற்பிகள் ஏராளம். வெறும் கல் உடைக்கும் தொழிலாளர்க ளாய் சிற்பிகளை மக்கள் நினைத் துக் கொண்டிருக்

கையில், அவர்தம் பாரம்பரிய கலைத்திறமையை உலகறியச்



ஸ்ரீ சிவா விஷ்ணு ஆலயம், செயின்ட் லூயிஸ்

செய்து, அவர்களின் வாழ்க்கைத் தரத்தையும் உயர்த்திக் கொண்டிருப்பவர்.

அவரது ஆவலைப் புரிந்து கொண்ட, தமிழகத்தை அந்த காலக்கட்டங்களில் ஆண்ட முதல்வர்களும், நமது கலையைப் பரப்புவதில் பெரும் ஒத்துழைப்பு கொடுத்தனர். அவர் அரசுப் பணியில் இருந்தாலும் அவருக்கு சிறப்பு அனுமதி அளித்து இப்பணிகளை மேற்கொள்ள ஊக்குவித்தனர்.



ஹவாயில் அமையவிருக்கும் சன்மார்க இறைவன் ஆலயத்தின் பணிகள் இந்தியாவிலுள்ள பெங்களூரில் நடைபெறுகிறது. அப்பணிகளை திரு.கணபதி ஸ்தபதி அவர்கள் பார்வையிடுகிறார். (குறியிடுதல்)

1992ம் ஆண்டு பிஜித் தீவில் (Fiji Islands) ஸ்ரீ சிவ சுப்ரமணிய சுவாமி திருக்கோவிலைக் கட்டினார்.

1993ம் ஆண்டு அமெரிக்காவின் வாஷிங்டன் மாகாணத்தில் ஸ்ரீ வெங்கடேஸ்வரா திருக்கோவிலைக் கட்டினார். அதே மாகாணத்தில் 1994ம் ஆண்டு ஸ்ரீ அய்யப்பன் திருக்கோவிலைக் கட்டினார்.

1995ம் ஆண்டு அமெரிக்காவின் சிகாகோ (Chicago) மாகாணத்தில் ஸ்ரீ கணேச சிவா துர்கா ஆலயத்தைக் கட்டினார்.

1997ம் ஆண்டு அமெரிக்காவில் மிசௌரி மாகாணத்தில் செயிண்ட் லூயிஸ் என்ற இடத்தில் (St.Louis, Missouri) ஸ்ரீ சிவா விஷ்ணு ஆலயம் இவரால் கட்டப்பட்டது.

1998ம் ஆண்டு இலங்கையின் கண்டி மாகாணத்தில் ஸ்ரீ செல்வ வினாயகர் ஆலயமும், 1999ம் ஆண்டு அமெரிக்காவில், ப்ளோரிடா (Florida) மாகாணத்தின் மியாமியில் (Miami) ஸ்ரீ சிவா விஷ்ணு ஆலயமும் இவரால் கட்டப் பட்டவை.

இவைகளைத் தவிர ஹவாய்த் தீவில் குவாய் என்ற இடத்தில் சன்மார்க இறைவன் ஆலயம் என்ற ஓர் ஆலயம் 1991ம் ஆண்டு ஆரம்பிக்கப்பட்டு இன்றளவும் பணிகள் நடந்து வருகின்றன. மிகவும் பிரம்மாண்டமான முறையில் அமையப் பெற்றுள்ள அக்கோவில் 'ஒன்றே கடவுள்' என்ற தத்துவத்தை அடிப்படையாகக் கொண்டது. பிறப்பில் அமெரிக்கராய் இருந்தும் இந்து மதத் தத்துவத்தில் ஆர்வம் கொண்டு துறவறம் பூண்டவர். சிவாய சுப்ரமுனிய சுவாமி என்ற பெயர் பெற்று ஹவாய்த் தீவில் சன்மார்க இறைவன் திருக்கோவிலைத் தொடங்கியவர். சுமார் 10

மில்லியன் டாலர் மதிப்பீட்டில் தொடங்கப்பட்டுள்ளது. முற்றிலும் கருங் கற்களால் ஆனது. தற்போது பாதிப் பணிகள் சேர்மானமாகி உள்ளன. மொத்த சேர்மானப் பணி முடிவடைய இன்னும் ஆறு ஆண்டுகள் ஆகும் என எதிர்பார்க்கப்படுகிறது.

2000ம் ஆண்டு கென்யாவிலுள்ள நைரோபியில் ஸ்ரீ பாலாஜி கோயில் திரு.கணபதி ஸ்தபதியால் கட்டப்பட்டது.

2001ம் ஆண்டு அமெரிக்காவிலுள்ள ஓமஹா வில் **(Omaha)** ஸ்ரீ பிரஸன்ன கணபதி ஆலயம் கட்டப்பட்டது. மிகச் சிறிய ஆனால் மிக அழகிய கோவில். மூலவரான கணபதி பேருருவம் கொண்டவர்.

2001ம் ஆண்டு அமெரிக்காவில் சிகாகோ மாகாணத்தில் இல்லினாய்ஸில் **(Illinois)** ஸ்ரீ விவேகானந்தா நினைவு மண்டபம் திரு.கணபதி ஸ்தபதியால் கட்டப்பட்டது.


பஞ்சமுகி

ஐந்து வேதங்களை உருவகிக்கும் வகையில் பஞ்ச முகி என்ற ஓர் அற்புதமான கலைப் படைப்பை திரு. கணபதி ஸ்தபதி அவர்கள் உருவாக்கியுள்ளார்கள்.

சங்ககால சிற்பச் சித்தன் மயனது மகளும், இராமாயணத்தின்


மந்தோதரி

இராவணனின் மனைவி யுமான மந்தோதரிக்கு ஓர் அழகிய சிலை வடித்துள்ளார். அந்த அழகிய சிலை தற்சமயம் ஸ்தபதியின் சென்னை அலுவலகத்தில், அவர் மயனுக்கென்றே உருவாக்கின மயசபை என்ற அழகிய கட்டிடத்தில் ஒய்யாரமாக நிறுத்தி வைக்கப்பட்டு அலுவல கத்திற்கே அழகு சேர்த்துக் கொண்டிருக்கிறது. ஆந்திர மாநிலத்தில் கிடைக்கும் துர்க்கி **(Durgi)** என்ற ஒரு வகைக் கல்லால் வடிக்கப் பட்ட ஆளுயரஅழகு சிலை அது!

2002ம் ஆண்டு ஜனாதிபதி டாக்டர் அப்துல் கலாம் அவர்கள் 'சில்பகுரு' என்ற பட்டம் திரு.கணபதி ஸ்தபதிக்கு வழங்கியதும், மத்திய அரசு இன்னும் பல 'சில்பகுரு'க்கள் அவரால் உருவாக்கப்பட வேண்டும் என்றும், அழகிய கலைப் பொக்கிஷங்கள் அவர்களைக் கொண்டு அமைக்கப்பட வேண்டும் என்றும் ஸ்தபதியை வேண்டியது.



கொடிப் பெண்

அதற்கென நிதியை ஒதுக்கி முற்றிலும் கருங்கற்களால் ஆன பல சிற்பங்களை உருவாக்கும்படி கேட்டுக் கொண்டது. அதற்கிணங்க ஸ்தபதியும் சிற்பங்களை வடித்துக் கொடுத்துள்ளார்.

ஓவ்வொரு சிற்பமும் அழகு மிளரும் கலைப் பொக்கிஷம். கொடிப் பெண் என்று ஓர் அழகிய நங்கை நின்றிருக்கும் கோலம் காண்போர் உள்ளத்தைக் கொள்ளை கொள்ளும்.

...



மகாவிஷ்ணு

விநாயகர் அழகிய திருக்கோலத்தில் நடனம் புரிவார். இராமர், சீதா, மகாவிஷ்ணு என்று அனைத்துமே கண்கவர் சிற்பங்கள்தான். அரசாங்கம் கேட்டுக் கொண்டபடி அனைத்து சிற்பங்களும் Master piece தான்.

மேலே குறிப்பிட்ட சில்பகுரு பட்டம் வழங்கப்பட்டதன் தொடர்பாக வடிக்கப்பட்ட சிலைகள் அனைத்தும் தற்சமயம் திரு.கணபதி ஸ்தபதியாரின் தொழிற்பட்டறையில் உள்ளன. [மாமல்லபுரத்திற்கு அருகே வடகடும்பாடி என்ற கிராமத்தில் உள்ளது.] விரைவில் புது டில்லிக்கு அனுப்பப் படும்.

## இலக்கியப் படைப்புகள் பற்றி..

திரு.கணபதி ஸ்தபதி அவர்கள் சிற்பம் மற்றும் வாஸ்து கலைகளில் பரந்த ஞானம் உடையவர். பெருமளவு தந்தையிடமிருந்த வந்த ஞானம் என்றாலும், அவருக்கிருந்த சம்ஸ்கிருத மொழிப் புலமையால் ஏராளமான சாஸ்திரங்களைப் படித்தும் பெற்ற ஞானம் அது.




மாமல்லபுரம் அரசுக் கல்லூரியில் பணி புரிந்து கொண்டிருந்த போது, 1977 ம் ஆண்டு, சிற்ப சாஸ்திரங்களின் நுணுக்கங்களை விளக்கி அவர் எழுதிய சிற்பச் செந்நூல் என்னும் நூல் மிகவும் புகழ் வாய்ந்தது. அந்நூலை தொழில் நுட்பக் கல்வித்துறை (Directorate

of Technical Education, Government of Tamil Nadu) வெளியிட்டது. சிற்பக் கலை பயிலும் ஒவ்வொரு மாணவனும் போற்றிப் பாதுகாக்கும் பொக்கிஷம் அந்நூல். சிறப்பாக எழுதப்பட்ட அந்நூலுக்காக லலித் கலா அகாடமியின் 'கலைக்குழுச் செம்மல் விருது' திரு.ஸ்தபதிக்கு வழங்கப்பட்டது.

அதே நூலுக்காக திரு.முத்தையா செட்டியார் அவர்கள் ரூபாய் பத்தாயிரம் வழங்கினார். நிதியமைச்சர் திரு.நெடுஞ் செழியன் அவர்கள் முன்னிலையில் விழா நடைபெற்றது. திரு.கண்ணதாசன் அவர்களுக்கும் அச்சமயம் விருது வழங்கப்பட்டது. அவ்விழாவில் திரு.கணபதி ஸ்தபதி பேசும் போது, செட்டியார் பெருமக்கள் அடுத்தவர்களுக்குக்

கொடுப்பதில் இன்பம் காண்பவர்கள் என்று அவர்களை உயர்த்திப் பேசினார்.

அந்த நூல் திருப்பதி வெங்கடேஸ்வரா பல்கலைக்கழகம் தெலுங்கில் மொழி பெயர்த்து வெளியிட்டது. தற்போது அந்த நூலை பாண்டிச்சேரி அரவிந்தர் ஆசிரமம் ஆங்கிலத்தில் மொழி பெயர்த்து வெளியிட்டுள்ளது.



1997ம் ஆண்டு ஐந்திறம் நூலை விளக்கவுரையுடன் வெளியிடுதல்

சங்ககாலச் சிற்பி மயன் எழுதிய ஐந்திறம் என்ற நூலின் பாடல்கள் ஸ்தபதிக்கு நண்பர் ஒருவர் மூலமாக தஞ்சாவூர் சரஸ்வதி மகால் நூலகத்திலிருந்து கிடைக்கப் பெற்றது. அந்நூல் தொல் காப்பியத்திற்கும் முந்தைய நூலாகக் கருதப்படுகிறது. தொல் காப்பியத்திற்கு அணிந்துரை எழுதிய பரம்பாறனார் என்பவர் 'ஐந்திறம் நிறைந்த தொல்காப்பியம்' என்று எழுதுகிறார்.

அப்படிப்பட்ட ஐந்திறம் நூலின் பாடல்களைக் கிடைக்கப் பெற்றவுடன் மிகவும் மகிழ்ந்து, அந்நூலைப் பற்றி முதல்வர் திரு.

எம்.ஜி.ஆர். அவர்களிடம் விளக்கிப் பேசினார். அதைக் கேட்டு மகிழ்ந்த திரு.எம்.ஜி.ஆர். அவர்கள் தொழில் நுட்பக் கல்வித்துறை மூலமாக அந்நூலைப் பதிப்பதற்கு ஆவன செய்தார். பின்னர் தமிழர் மாநாடு ஒன்றைக் கூட்டி, அந்நூலைப் பண்டிதர்கள் நிறைந்த அம்மாநாட்டில் வெளியிட்டார்.

அப்போது கல்வி அமைச்சராய் இருந்த திரு.அரங்கநாயகம் அவர்களின் மேற்பார்வையாலும் முதல்வர் திரு.எம்.ஜி.ஆர். அவர்களின் ஆதரவினாலும் அப்புத்தகம் வெளிவந்தது. மொத்தம் ஆயிரம் பிரதிகள் வெளியிடப்பட்டன.

உரையில்லா விஞ்ஞான சூத்திரங்களாக இருந்தமையால் இவற்றை எவரும் ஆய்வு செய்திடவில்லை. அதனால் கிட்டத்தட்ட ஐந்திறம் என்ற நூல் வலுக்குறைந்து விட்டது என்று சொல்லலாம். இந்த ஐந்திற சூத்திரங்கள் இயல், இசை, நடம், சிற்பம், கட்டிடம் ஆகிய நூல்களில் அடங்கிக் கிடப்பதையும் கண்டறிந்தஸ்தபதி அவர்கள் முதலில் 1986ம் ஆண்டு திரு.எம்.ஜி.ஆர். அவர்கள் மூலம் பொது மக்களுக்கு அறிமுகப்படுத்தினார். அந்நூலில் விளக்கப் பட்டுள்ள சாஸ்த்திரங்களைப் படித்துப் புரிந்து கொண்ட விற்பன்னர்கள் சொற்பமே.

எனவே, ஸ்தபதி அவர்கள் 1997ல் திருவனந்தபுரத்தில், நடத்திய அனைத்துலக மயவிஞ்ஞான மாநாட்டில், (International Seminar on Mayonic Science & Technology) அந்நூலை இன்னும் புரியும்படி தெளிவுரையுடன், தமிழ் மற்றும் ஆங்கில

விளக்கவுரையுடன் மறுபடி வெளியிட்டார். ஆங்கில விளக்கவுரையை ஆகமப் பண்டிதர் டாக்டர் சபாரத்தினம் அவர்கள் எழுதினார்.

இன்றும் ஐந்திரம் என்னும் அந்நூலைப் பற்றித் தனது வாஸ்து வேத ஆய்வு நிறுவனத்தின் மூலமாக ஆராய்ச்சிகள் பல செய்து வருகிறார். பல கருத்தரங்குகளில் அந்நூலைப் பற்றிய விவரங்களைப் பற்றிப் பேசி வருகிறார்.

இந்திய ஜனாதிபதி திரு.அப்துல் கலாம் அவர்களைச் சந்தித்த போது கூட இதைப் பற்றிப் பேசி ஐந்திறத்தைப் பற்றி ஸ்தபதி அவர்கள் எழுதும் போதெல்லாம் அதன் பிரதியை ஜனாதிபதி அவர்களுக்கு அனுப்பி வைக்கிறார்.

1994ம் ஆண்டு கலைமகள் பத்திரிகையின் தீபாவளி மலருக்காக 'விண்ஞானக் கோவில்கள்' என்ற தலைப்பில் ஒரு கட்டுரை எழுதினார் திரு.கணபதி ஸ்தபதி. அக்கட்டுரை அனைவராலும் படிக்கப்பட்டு பெரும் வரவேற்பையும், பாராட்டையும் பெற்றதால், அக்கட்டுரையையே நன்கு விளக்கி எழுதி, விண்ஞானக் கோவில்கள் என்ற பெயரிலேயே ஒரு சிற்பி பேசுகிறான் என்ற வரிசையில் புத்தகமாக வெளியிட்டார். [திரு. கணபதி ஸ்தபதி அவர்கள் சொல்ல நினைத்த கருத்துக்கள் அனைத்தையும் புத்தகமாக வெளியிடத் தொடங்கி அவற்றிற்கு 'ஒரு சிற்பி பேசுகிறான்' என்ற வரிசைப் பெயரை இட்டார். நாளது வரை 18 புத்தகங்கள் வெளியிடப்பட்டுள்ளன. அநேக புத்தகங்கள் இரண்டாவது பதிப்பையும் அடைந்துள்ளன.]








An Incan house in Machu Picchu. Sthapati's inset drawing Shows how the roof pitch follows Vastu Vedic principles.



Foundation at Machu Picchu with Sthapati's drawings Showing the modular layout (see text).



The Toltecan area of Chichen Itza showing the Temple of the Thousand Columns and the Pyramid of the castle.
Inset : How the Pyramid of the Castle is based on a modular system -the top structure being exactly one- quarter of the base.




அப்புத்தகம் தஞ்சை தமிழ்ப் பல்கலைக் கழகத்தின் முன்னாள் துணை வேந்தர் திரு. V.I. சுப்ரமணியம் அவர்களால் நாகர் கோவிலில் வெளியிடப்பட்டது. அந்நூலில் விஞ்ஞானி ஐன்ஸ்டீன் கூறிய $E = mc^2$ என்ற தத்துவத்தை ஸ்தபதி வாஸ்து சாஸ்திரம் மூலமாக விளக்கியிருப்பதைப் பலரும் பாராட்டினர்.

தொழிலதிபர் அருட்செல்வர் திரு. பொள்ளாச்சி மகாலிங்கம் அவர்கள் அந்நூலை இரசித்துப் படித்து விட்டு ஸ்தபதிக்கு ஒரு ஆலோசனையையும் கூறினார். அப்புத்தகத்தை ஆங்கிலத்திலும் மொழி பெயர்த்து வெளியிடும்படி கூறினார். அதனால், அது அதிக மக்களைச் சென்றடையுமே என்ற ஆவல்தான் அதற்குக் காரணம்.

அவர் கூறிய அறிவுரையை சிரமேற்கொண்டு அப் புத்தகத்தை டாக்டர் சபாரத்தினம் அவர்களைக் கொண்டு

ஆங்கிலத்தில் மொழி பெயர்த்து **Temples of Space Science** என்ற பெயரில் வெளியிட்டார். இப்புத்தகமும் பெரும் பாராட்டைப் பெற்றுத் தந்தது. அதிலிருந்து ஆங்கிலத்திலும் புத்தகங்கள் அதிக அளவில் வெளியிடப்பட்டன.

OB-4 THE HINDU, Tuesday, July 3, 2001

# Principles of Vaastu

STHAPATYA VEDA: Dr. V. Ganapathi Sthapati; Dakshinaa Publishing House, Plot S-46, First Avenue, Vettuvankeni, Enjambakkam Village, Chennai-600041. Rs. 1,000.

THIS PUBLICATION, titled "Sthapatya Veda," the ancient name for Vaasthu science/Vaastu Veda, is a compendium of talks delivered by the author, a leading authority on Vaastu Shastra and a direct descendant of an illustrious lineage of scholars in traditional scriptures and temple architecture. He highlights mostly the science part of Vaastu, rather than technological aspects. The principles of Vaastu Shastra are based on a unique science of "energy and matter" and "absolute time and space", observes the author.

The structures designed on Vaastu principles create a rhythm in spatial form resulting in physical appealing and spiritually alluring creations on earth. The author draws parallels between such creations by human beings on earth and creation of the universe by the Ultimate Creator. The rhythmic vibrations in the subtle energetic space manifest the energy in the subtle state to gross state and an equation is drawn between time and space.

A building enclosing the space is surcharged with eight elemental forces, the quintessence of which is Vaastu, which takes material form. The house is a living organism with active foundations of the four gross elements at corner zones with the primal element of space (energy) [illegible] at the centre.

While explaining the central theme of the title, he has made attempts to establish that Vaasthu is a scientific [illegible] and not a religious document and qualifies Vaastu Shastra as a class by itself. Contemporary scientists may be interested in the chapter "[illegible] and resonance as applied to traditional architecture" in which the author establishes that Indian




architecture is superior and scientific. He brings to light an extension of the theory of resonance caused by identical frequencies of sound waves to the resonance of material spaces and structures of identical dimensions, two dimensional or three dimensional forms.

In the chapter, "Shilpa Vidya Rahasyopanisha Vaastu Sutropanish", it is said that out of 108 Upanishads, more important Upanishads than Brihadaranyaka and Chandokya have been set aside by the scholars. Vaastu Sutropanishad is one of the six important ones not included in the list of 108 Upanishads. Another Upanishad omitted is Agama Sara Nirnayopanishad which explains the exact meaning of 97 Rig Veda Manthras frequently recited in temple rituals. Of these, 27 manthras are not available in the printed editions of Rig Veda. However, these have been preserved and recited by the Sivacharyas of Tamil Nadu in which the exact meaning of the first Manthra of Rig Veda has been duly explained. This Manthra speaks of the five concentric belts of structure which have large implications.

Other chapters in this book include selection of building site, orientation of buildings, cities and villages, design of house buildings, basic patterns, outlines of temple architecture, selection of trees and plants around the buildings and Vaastu Puja. A few model designs based on Vaastu principles have been provided.

In the chapter on selection of building sites, the ill effects of the eastern and south-eastern side being high are said to result in the death of children and loss of wealth respectively.

The reader should not get scared by reading these lines, as compliance of all aspects are to be studied and non-compliance of one aspect should not be relied to infer the result.

In the chapter of Ayadi calculations (the process of mitigating the fate by calculating the organic form based on the birth star of an individual), the author has taken the circumference of the building as the basis, while the area of the building is taken as the base by some authorities. The method of corrections to be made in existing buildings which are not in compliance with Vaastu principles and limitations of Vaastu have not been covered in this edition.

The author is to be congratulated for the pains taken in collecting lot of materials including Vedas and Upanishads to establish that Vaastu is not a religious document but it is based on scientific principles. Discussions have been made making use of English, Sanskrit and Tamil terminologies.

One has to go through this book patiently and deeply to assimilate this science when Vaastu can be perceived in its true perspective.

C. H. GOPINATHA RAO

''கடவுளைப் படைத்தவன் யார்?'' என்று தமிழிலும் **'Who Created God?'** என்று ஆங்கிலத்திலும் திரு.கணபதி ஸ்தபதி அவர்களால் எழுதப்பட்டு வெளி வந்த புத்தகங்களாகும். அப்புத்தகங்கள் பெருமளவில் பேசப்பட்டு அதிக அளவில் பலராலும் விரும்பிப் படிக்கப்பட்டன. இப்புத்தகத்தில் அருவத்தை உருவமாய்க் காட்டும் கடவுட் படிமங்கள் பற்றி வெகு அழகாக ஸ்தபதியார் விளக்கியிருப்பார். அருவத்தில் செயல்படும் செயல்பாடும் ஒரு கணக்கில்தான் இயங்குகிறது. அப்படிமங்கள் அனைத்தும் ஒரு கணக்கிற்கு உட்பட்டதே என்றும் கூறியிருப்பார்.

**'Sthapati's Visit to Maayan Land'** என்ற ஓர் ஆங்கிலப் புத்தகத்தை ஸ்தபதி அவர்கள் மெக்ஸிகோ நாட்டிற்குச் சென்று வந்த பின்னர் எழுதினார். அந்த நாட்டில் நிலவி வந்த பண்டைய நாகரிகமான மாயன் நாகரிகத்தைப் பற்றி ஆராய்ந்து, அதுவும் இந்தியாவிலிருந்த மய நாகரிகமும் ஒன்றே என்று ஆணித்தரமாகப் படங்களுடன் விளக்கிக் கூறியிருப்பார் அந்தப் புத்தகத்தில். வெளியிட்ட புத்தகங்கள் அனைத்தும் விற்றுவிட்ட நிலையில் இரண்டாம் முறையாகப் பதிப்பிக்கப்பட்டது.

கோவில்களின் விமானம் மற்றும் கோபுரங்களின் தத்துவங்களின் பற்றி **Significance of Vimana and Gopuram** என்ற நூலில் திரு.கணபதி ஸ்தபதி ஒரே புத்தகத்தில் தமிழிலும், ஆங்கிலத்திலும் அழகாக எழுதியிருப்பார்.

'வாஸ்து புருஷ மண்டலம்' என்ற புத்தகம் தமிழ் மற்றும் ஆங்கிலம் இரண்டிலும் வெளிவந்தது. 'ஆயாதி கணனம்' என்ற

# Vastu Purusha

TALAM 2 | KOLAM 12 | May 2004 | Rs.50/-

THE CONCEPT OF
MONISTIC SAIVISM REEMERGING IN SPECTACULAR FORM IN HAWAII, USA

**One God One World ;** ஒன்றே குலம் ஒருவனே தேவன்



*A view of the upcoming all - granite Sri Sanmārga Iraivan temple, Hawaii, established by Saiva Siddhānta Church, founded by Satguru Sivāya Subramuniya Swāmy (top left), Present Chief Satguru Bodhinātha Veylanswāmi (top right)*

एक एव पुरा वेदः प्रणवः सर्ववाङ्मयः । देवो नारायणो नान्य एकोऽग्निर्वर्ण एव च ॥

புத்தகமும் தமிழ் மற்றும் ஆங்கிலத்தில் வெளிவந்தது. எந்த கட்டிடமானாலும், அது வீடோ அல்லது கோவிலோ, ஆயாதி கணக்கின்படிதான் அது கட்டப்பட வேண்டும் என்று அந்த கணிதத்தைப் பற்றி திரு.கணபதி ஸ்தபதி அவர்கள் விளக்கி எழுதிய புத்தகம் இது.

ஸ்தாபத்ய வேதம் என்ற வாஸ்து வேதத்தைப் பற்றியும், கட்டிடக் கலைப் பற்றியும் அதிக எண்ணிக்கையிலான படங்களுடன், ஸ்தபதி அவர்களால் ஆங்கிலத்தில் எழுதப்பட்டு, மிக நேர்த்தியாக வெளி வந்த புத்தகம் **Building Architecture of Sthapatya Veda** ஆகும். இப்புத்தகமும் இரண்டாம் பதிப்பிற்குத் தயாராக உள்ளது. கட்டிடக் கலை நுட்பங்கள் அனைத்தும் வெகு அழகாகப் படங்களுடன் இப்புத்தகத்தில் விளக்கப்பட்டிருக்கும். புத்தகத்தின் விலை ரூபாய் ஆயிரம் எனினும் அதிக அளவில் அனைவராலும் படிக்கப்பட்ட புத்தகமும் இதுவே. **'The Hindu'** பத்திரிகையில் இப்புத்தகத்தைப் பாராட்டி விமர்சனம் வந்தது.

'இந்திய நாட்டு விஞ்ஞானக் கலாச்சாரத்தில் விசுவகர்மர்' என்ற தலைப்பில், ஸ்தபதியார் அவர்கள் தனது குலமான விசுவகர்மப் பெருமக்கள் இச்சமுதாயத்திற்கு ஆற்றிய பணிகளைப் பற்றி விரிவாக எழுதியிருப்பார். இப்புத்தகம் முதலில் அவரால் தமிழில் எழுதப்பட்டு, பின்னர் அதே புத்தகம் அவரது மருமகள் திருமதி காயத்ரி சண்முகவேலன் அவர்களால் அழகாக ஆங்கிலத்தில் மொழி பெயர்க்கப்பட்டு வெளியிடப்பட்டது.

133 அடி உயரத்தில் கன்னியாகுமரியில் திருவள்ளுவர் சிலையைக் கட்டி முடித்த பின்னர், அதற்காக விசுவகர்ம

பெருமக்கள் ஸ்தபதியாருக்கு ஒரு விழா எடுத்தனர். அவ்விழா டாக்டர் கலைஞர் திரு. கருணாநிதி அவர்களின் தலைமையில் நடைபெற்றது. அவ்விழாவில் வெளியிடுவதற்கென 'சாதனை மலர்' என்ற புத்தகத்தை திரு.கணபதி ஸ்தபதி எழுதினார்.

அப்புத்தகத்தில் கலைஞர் அவர்களுடன் ஸ்தபதியார் சேர்ந்து பணியாற்றி அனுபவங்களைப் பற்றியும், திருவள்ளுவர் சிலை




உருவான முறையைப் பற்றியும், அதில் கடைபிடிக்கப்பட்ட பழமையான தொழில் நுட்பம் பற்றியும் விளக்கிக் கூறப்பட்டிருக்கும்.

பாரத ஜனாதிபதி டாக்டர் அப்துல்கலாம் அவர்களை ஸ்தபதியார் சந்தித்த போது தஞ்சை பிரகதீஸ்வரர் கோவில் பற்றிய விளக்கங்களை டாக்டர் அப்துல் கலாம் அவர்கள் கேட்டார்கள். அவருக்கு அக்கோவில் கட்டுமானப் பணியை விளக்கிச் சொல்வதற்காகவே **Scientific edifice of Brahadeeswara Temple, Tanjore** என்ற புத்தகத்தை ஸ்தபதியார் எழுதி வெளியிட்டார்.

அதே போல் 133 அடி உயர திருவள்ளுவர் சிலை உருவான முறையைப் பற்றி விளக்குவதற்காக **The Colossal Statue of Ayyan Thiruvalluvar** என்ற புத்தகத்தை எழுதி வெளியிட்டார்.

இவைகளைத் தவிர வேதங்களில் முதன்மையானதும் பழமையானதுமான பிரணவ வேதம் என்ற நூலை அதன் பாடல்களுடனும் ஸ்தபதி எழுதிய விளக்கவுரையுடனும் வெளியிடத் தயாராய் உள்ளது. அநேகமாக, ஸ்தபதியாரின் வாழ்க்கைக் குறிப்பை விளக்கும் இப்புத்தகத்துடன் பிரணவ வேதமும் வெளியிடப்படலாம்.

மேற்கூறிய அனைத்து புத்தகங்களும் திரு.கணபதி ஸ்தபதியின் துணைவியார் திருமதி தெக்ஷிணாவதி அம்மையார் அவர்களின் பெயரில் இயங்கி வரும் தெக்ஷிணா கலை நூற் பதிப்பகத்தின் வாயிலாக வெளியிடப்படுகின்றன.

இவைகளைத் தவிர ''வாஸ்து புருஷா'' என்ற ஆங்கிலப் பத்திரிகையை ஸ்தபதி அவர்கள் நடத்தி வருகிறார்கள். வாஸ்து மற்றும் சிற்பக் கலை தொடர்பான செய்திகள், பேராசிரியர்களின் கட்டுரைகள் என அனைத்து தரப்பு செய்திகளும் அதில் வெளியிடப்படும். இப்போது வாசகர்கள் படித்துக்

கொண்டிருக்கும் புத்தகத்தின் முதல் அத்தியாயமாக வந்துள்ள டாக்டர் அப்துல் கலாம் அவர்களுடன் திரு.கணபதி ஸ்தபதி அவர்களின் சந்திப்பு என்ற கட்டுரை முதல் முதலில் வாஸ்துபுருஷாவில்தான் வெளிவந்தது. அக்கட்டுரைக்குக் கிடைத்த வரவேற்பு மற்றும் பாராட்டுகள்தான் இந்த புத்தகம் எழுதுவதற்கு உந்து சக்தியாக இருந்தது எனலாம். வருடம் இரண்டு முறை வெளியாகும் இப்பத்திரிகைக்கு உலகம் முழுவதும் சந்தாதாரர்கள் உள்ளனர்.

புத்தகங்களை வெளியிடுவது மட்டுமன்றி ஏராளமான புத்தகங்களைப் படிப்பதிலும், பல கருத்தரங்குகளிலும், பல்கலைக் கழகங்களிலும் பல்வேறு தலைப்பிலான கட்டுரைகளை வெளியிடுவதிலும் நேரத்தைப் பெரும்பகுதி செலவழித்து மகிழ்ச்சியுடன் இருப்பதில் திரு.கணபதி ஸ்தபதி அவர்களுக்கு நிகர் அவரேதான்!

## ஸ்தபதியும் வாஸ்து விஞ்ஞானமும் ....

திரு.கணபதி ஸ்தபதியின் தந்தையாகிய திரு.வைத்தியநாத ஸ்தபதி அவர்கள் சிற்பம், வாஸ்து, வானவியல், ஜோதிடம் போன்ற பல கலைகளிலும் மாபெரும் மேதையாக இருந்தவர். தமிழ் மற்றும் சம்ஸ்கிருதத்தில் மிகுந்த பாண்டித்தியம் பெற்றவர் என்பதை சென்ற அத்தியாயங்களில் சொல்லப்பட்டது. அவைகளில் சிற்பம் மற்றும் வாஸ்துக் கலையைத் தந்தையிடமிருந்து நன்கு கற்றுத் தேர்ந்த திரு.கணபதி ஸ்தபதிக்கு அக்கலைகளை அனைவரும் அறியும்படி செய்ய வேண்டும் என்பதில் தீராத ஆவல்.

'வாஸ்து' என்பது என்ன என்பதை இங்கே சிறிது காண்போம். ஒரு கல்லை உடைத்தால், எப்படித் துகள் துகளாக உருமாற்றம் கொண்டு கண்களுக்குப் புலப்படா தூசி நிலைக்கு உருமாற்றம் கொள்கிறதோ, அதுபோலத் தூசிகளாகத், துகள்களாகப் பரவிக்கிடக்கும் அணுக்கள் நுண் அணுக்கள் என்று சொல்வதற்கு பதிலாக 'பரமாணு' என்று மாறுகிறது. இந்தக் கலைச் சொல்லை வாஸ்து சிற்ப நூல்களில் இன்றும் காணலாம்.

இந்த கண்களுக்குத் தெரியாத பரமாணுக்கள் அடிப் படையில் எந்தக் கணக்கில் சேர்ந்து, கண்களுக்குத் தெரியும் அணு எனப்பட்டு, அவ்வணுக்களின் சேர்க்கையில் தன்னைத்தானே பெருக்கிக் கொண்டு [எல்லாம் உயிர்ப் பொருளாக இருப்பதால்] கண்களுக்குப் புலப்படும் முப்பரிமாணத் தெரிப்பொருளாக மாறுகிறதோ அஃது ஒரு கணக்கியலாகும். இந்த தெரிநிலையாகிய உருநிலை ஐந்து கட்டங்களில் மேலும் வளர்ச்சியுறுகின்றது. இறுதி நிலையாகிய ஐந்தாவது

நிலையில்தான் கண்களுக்குப் புலப்படும் மற்றும் கைகளுக்குப் புலப்படும் உருப்பெருகின்றன.

இந்தக் கணக்கை வாஸ்து சிற்ப நூல்களில் வாய்பாடு என்ற தலைப்பிலும், காலத்தால் வளர்ச்சியுற்ற இந்த கணக்கைக் காலக்கணக்கு என்று சொல்லுகிறதையும் காணலாம்.

இதே கணக்கியலை உட்படுத்தி செய்யப்பட்டு, சிற்பத் துறையிலிருந்து வெளிப்பட்டவைதான் வீடுகளும், மனைகளும், கோயில்களும், சிற்பங்களும், நாடு நகரங்களும். இக்கணக்கு தோற்றிவித்த நெறியும், அமைப்பும் தெரியாத வெளியார்கள் நம் படைப்புக்களை வியந்து பார்க்கிறார்களே தவிர, படைப்பின் நுட்பத்தை அறிந்தார்கள் இல்லை. அகத்துடிப்பால் தோற்றம் கொண்ட இப்பொருள்களை ஆன்மிகப் படைப்புகள் **(Spiritual creations)** என்பர் சிற்பிகள்!

எனவே, இந்தக் கணக்கை ஓர் உச்சக் கணக்கு என்பதைக் கட்டிடக் கலை வாயிலாக சொல்லி வைத்திட்ட மயன், ''கட்டிடக்கலையே கணக்கியல் உச்சி'' என்றும் ''காலக்கூறே கணக்கியலாகி'' என்றும் கூறுகிறான். இந்தக் கணக்கியல் கடவுள் மற்றும் கட்டிடக் கணக்காகிய உலகப் பொருள்களாகக் காணப்படுவதின் உச்சம்தான் தஞ்சைப் பெருவுடையார் விமான அமைப்பில் கையாளப்பட்டிருக்கிறது என்பதை திரு.கணபதி ஸ்தபதி அவர்கள் **Scientific edifice of Brahadeeswara Temple, Tanjore** என்ற ஏட்டில் படங்களுடன் விளக்கியிருக்கிறார்.

இந்தக் கணக்கைத்தான் – கணக்கால் உருத்தரித்த பொருளைத்தான் – ''வாஸ்து'' என்று சொல்கிறோம்.

ஒவ்வொரு கட்டிடத்தையும், கோவிலையும் இக்கணக்கிற்குட்பட்டுத்தான் கட்ட வேண்டும். இந்தக் கணக்கின் மூலம் கிடைக்கும் அசைவைத்தான் உயிர்ப்பு என்றும் சாந்நித்தியம் என்றும் சொல்லி வருகிறோம். இந்தத் துடிப்புக்கு நம் ஆன்மாவின் துடிப்பு ஒத்துப் போகும் போது விளைவது ''ஆன்ம சுகம்'' என்பதாகும். **(Pleasure of resonance)**

இத்தகைய பெருமை வாய்ந்த ஒரு விஞ்ஞானத்தை, கணக்கியலைத் தற்சமயம் மக்கள் தவறாகப் புரிந்து கொள்ளும் வகையில், வியாபார நோக்கோடு அவற்றை விற்று வருகிறார்கள். பாரத ஜனாதிபதி டாக்டர் அப்துல் கலாம் அவர்கள்கூட ஸ்தபதியிடம் பேசும் பொழுது ''இத்தகைய பெருமை மிகு விஞ்ஞானத்தை வாஸ்து என்ற பெயரில் மக்கள் கேலிக்கூத்தாகி விடுகிறார்களே. பெயரை வேண்டுமானால் மாற்றி விடுங்கள்'' என்று வேடிக்கையாகக் கூறினார். ஸ்தபதி பதில் கூறுகையில் ''பெயரை மாற்ற மாட்டேன். அப்படிக் கூறுபவர்களை மாற்றி விடுகிறேன்'' என்று கூறினார்.

அவ்வாறு மாற்றும் முயற்சியை வெகு காலத்திற்கு முன்பே ஸ்தபதி அவர்கள் தொடங்கி விட்டார் என்றே கூறலாம். 1993 ம் ஆண்டு சென்னை தரமணியில் **International Seminar on Mayonic Science & Technology** என்ற தலைப்பில் ஒரு கருத்தரங்கை அவரது சொந்தச் செலவில் நடத்தினார். இக்கருத்தரங்கில் பல அறிஞர்களும், பேராசிரியர்களும் [சுமார் 400 பேர்] கலந்து கொண்டு தங்கள் ஆராய்ச்சியின் பயனான கட்டுரைகளை வழங்கினார்கள். இதன் மூலம் மயன் என்ற ஒரு




1993 ம் ஆண்டு சென்னையில் நடைபெற்ற கருத்தரங்கு

பல்கலை விற்பன்னர் மனித உடல் தாங்கி பண்டைக் காலத்தில் வாழ்ந்து வந்தான் என்று உலகறியச் செய்யப்பட்டது.

ஐந்து பல்கலைக்கழகங்களின் துணை வேந்தர்கள் மற்றும் முன்னாள் துணை வேந்தர்கள் இதில் கலந்து கொண்டு சிறப்பித்தனர். அண்ணா பல்கலைக்கழக துணைவேந்தர் டாக்டர் M. அனந்த கிருஷ்ணன் அவர்கள், தஞ்சை தமிழ்ப் பல்கலைக் கழகத்தின் முன்னாள் துணைவேந்தர் டாக்டர் V.I. சுப்ரமணியம் அவர்கள், கர்நாடகாவிலுள்ள ஹம்பி பல்கலைக் கழகத்தின் துணைவேந்தர் டாக்டர் சந்திரசேகர கம்பாரா அவர்களும், பாண்டிச்சேரி பல்கலைக் கழகத்தின் துணைவேந்தர் டாக்டர் A. ஞானம் அவர்களும், தஞ்சை தமிழ்ப் பல்கலைக் கழகத்தின் முன்னாள் துணை வேந்தர் டாக்டர் C. பாலசுப்ரமணியம் அவர்களும் பங்கேற்றனர்.

முன்னாள் கல்வி அமைச்சர் திரு. C. அரங்கநாயகம் அவர்களும் பங்கேற்று விழாவினைச் சிறப்பித்தார். அத்தனை அறிஞர்களுக்கும் இடவசதி மற்றும் உணவு வசதி அனைத்தும்

ஏற்பாடு செய்து கொடுத்து, கட்டுரை வழங்கிய அனைவரையும் கௌரவித்தார். இதற்காக ஏறக்குறைய ரூபாய் ஐந்து இலட்சங்கள் வரை செலவழித்தார்.

ஜெர்மனியிலுள்ள மியூனிச் பல்கலைக்கழகத்தில் பேராசிரியராகப் பணிபுரியும் திரு. மாத்யாஸ் சாமுவேல் லாப்சர் என்பவர் திரு.கணபதி ஸ்தபதியை அவரது ஆராய்ச்சி தொடர்பாக சந்தித்தார். அப்போது, ஸ்தபதியார் வாஸ்து விஞ்ஞானத்தைப் பரப்புவதற்கு மேற்கொண்டு வரும் முயற்சிகள் பற்றியும், அதற்காக அவர் நடத்தி வரும் கருத்தரங்குகள் பற்றியும் அறிந்தார்.

அவரது மனைவி திருமதி ஹில்டே லிங்க் என்பவர் வாஸ்து விஞ்ஞானத்தில் பெரும் ஈடுபாடு கொண்டவர். கணவர் மூலமாக திரு.கணபதி ஸ்தபதியின் பணிகள் பற்றி அறிந்து, அவர் சென்னையில் நடத்தவிருக்கும் வாஸ்து கருத்தரங்கில் கலந்து கொள்ள விரும்பினார். எனவே, ஜெர்மனியிலுள்ள மியூனிச் பல்கலைக் கழகத்தை அணுகினார். பல்கலைக்கழகமும் மகிழ்ச்சியுடன் சம்மதித்து திருமதி ஹில்டே லிங்க் அவர்களுக்கு சென்னை சென்று, கருத்தரங்கில் பங்கு கொள்ள அனுமதி அளித்து, அதற்கான முழுச்செலவையும் ஏற்றுக் கொண்டது.

அவ்விதம் கருத்தரங்கில் கலந்து கொள்ள சென்னை வந்த திருமதி ஹில்டே லிங்க், கருத்தரங்கில் கலந்து கொண்டு, அதன்பின் திரு.ஸ்தபதியின் அன்புக்குப் பாத்திரமானார். அவரைத் தனது தந்தையாகவே எண்ணி மதிப்பும் பாசமும் வைத்து, இன்றளவிலும் அவருக்குக் கடிதம் எழுதும் போது ‘அன்புள்ள அப்பாவிற்கு’ **(My dear father)** என்று தொடங்கிதான் எழுதுவார்.



திரு.கணபதி ஸ்தபதி திருமதி ஹில்டே லிங்க் மற்றும் அவரது கணவருடன்

ஸ்தபதியும் அவரை மகள் என்றுதான் அன்புடன் அழைப்பார். அவருக்கு நமது இந்தியக் கலாச் சாரப்படி கமலா என்று பெயர் சூட்டி உள்ளார். அவரும் தனது பெயரை ஹில்டே கமலா லிங்க் என்று குறிப்பிட்டுக் கடிதங்கள் எழுதுவார். இவ்வாறு சென்னையில் நடந்த கருத்தரங்கின் மூலம் வெளிநாடு களிலும் ஸ்தபதியார் பரப்ப விரும்பும் வாஸ்து விஞ்ஞானம் பிரபலமானது.

இதற்குப் பிறகு மறுபடி திருவனந்தபுரத்தில் இரண்டாவது முறையாக வாஸ்து பற்றிய கருத்தரங்கை ரூபாய் 15 இலட்சம் செலவில் 1997ல் நடத்தினார். இக்கருத்தரங்கு மிகவும் பிரம்மாண்டமான முறையில் நடைபெற்றது. திருவிதாங்கூர் மாமன்னர் திரு.உத்திராடம் திருநாள் மார்த்தாண்ட வர்மா அவர்கள் கருத்தரங்கைத் தொடங்கி, துவக்க உரை ஆற்றினார்.

அவரது உரையில், பண்டைய பாரம்பரிய விஞ்ஞான முறைகளையும், தற்கால அறிவியல் முறைகளையும் இணைக்க வேண்டியதன் அவசியத்தை எடுத்துரைத்தார். திருவிதாங்கூர் இளவரசி அஸ்வதித் திருநாள் கௌரிலட்சுமிபாய் அவர்கள், குத்துவிளக்கு ஏற்றி கருத்தரங்கைத் தொடங்கி வைத்ததுடன், கேரள நாட்டின் கட்டிடக்கலையைப் பற்றி ஆழமான

கருத்துக்களைக் கொண்ட ஓர் ஆய்வுக் கட்டுரையைப் படித்தார். இந்தியர்களும், வெளிநாட்டவர்களும் பெருமளவில் [சுமார் 400 பேர்] கலந்து கொண்டனர். அறிஞர்களும், பேராசிரியர்களும் தங்கள் ஆராய்ச்சி கட்டுரைகளை சமர்ப் பித்தனர். அருட்செல்வர் டாக்டர் மகாலிங்கம் அவர்கள், வாஸ்து விஞ்ஞானத்தின் பெருமையையும் அதன் முக்கியத்துவத்தையும் வலியுறுத்தினார். பல் கலைக்கழகங்கள் வாஸ்து விஞ்ஞானத்தைப் பாட மாக வைத்துப் பட்டப் படிப்புகளைத் தொடங்க வேண்டும் என்றார்.



திருவிதாங்கூர் இளவரசி குத்து விளக்கு ஏற்றித் தொடங்கி வைக்கிறார்

பேராசிரியர் ஸ்ரீதர மேனன், யாதுகிரி இராமானுஜமுனி, மேல் கோட்டை ஜீயர் சுவாமிகள், இத்தாலி நாட்டைச் சேர்ந்த மகாதேவானந்தா சுவாமிகள், அமெரிக்க நாட்டைச் சேர்ந்த தேவராசன், ஆஸ்திரேலியா நாட்டைச் சேர்ந்த ஆலன் குரோக்கர் ஆகியோர் ஆசியுரை வழங்கினார்கள். நன்றியுரை வழங்கிய திரு.கணபதி ஸ்தபதி அவர்கள் மாநாட்டின் நோக்கம் செவ்வனே நிறைவேறியது குறித்துப் பெரும் மகிழ்ச்சி தெரிவித்தார். இக்கருத் தரங்கிற்கும் திருமதி ஹில்டே லிங்க் அவர்கள் தனது சொந்த செலவில் கணவருடன் வந்திருந்து கலந்து கொண்டார்.

அதற்குப்பிறகு, ஸ்தபதியாரின் வாஸ்து ஆராய்ச்சிக்குப் பெரும் உதவி செய்து வருகிறார். சமீபத்தில் இந்தோ னேஷியாவில் அங்கவர்வாட் என்ற இடத்தில், வாஸ்து விஞ்ஞான

முறைப்படி கட்டப்படும் கோவில்களில் ஸ்தபதிகள் பயன்படுத்தும் மண்டூகபதம் மற்றும் பரமசாயீக பதம் ஆகியவற்றின் படங்கள் அங்குள்ள ஒரு கோவிலில் தரையில் பதிக்கப் பட்டுள்ளதாகத் தமது ஆராய்ச்சியின் மூலம் கண்டறிந்துள்ளதாகக் கூறினார். அவ்விடத்திற்கு திரு.ஸ்தபதியுடன் சென்று மேலும் ஆராய்ச்சிகள் செய்வதற்கு ஏற்பாடுகள் அனைத்தும் செய்திருந்த வேளையில் சமீபத்தில் ஏற்பட்ட சுனாமி காரணமாக அப்பயணம் தற்காலிகமாக நிறுத்தப்பட்டது. பின்னாளில், இருவரும் சேர்ந்து செல்வார்கள். அவ்வாறு சென்று ஆராய்ச்சிகள் செய்திடின், நமது விஞ்ஞானம் உலகளாவிப் பரவின செய்திகள் வெளியாகும் என்பது திண்ணம்.

இவரைப் போலவே, ஸ்தபதியின் ஆராய்ச்சிப்பணிகளில் உதவி வரும் மற்றொருவர் டாக்டர் S. பத்மநாபன் என்பவர். இவர், கன்னியாகுமரி வரலாற்றுப் பண்பாட்டு ஆய்வு மையத்தின் நிறுவனர் மற்றும் பொதுச் செயலர். திருவள்ளுவரது திருக்குறளைப் பற்றி தீவிர ஆராய்ச்சி செய்து வருபவர். திருக்குறளில் பயன்படுத்தப்பட்ட பல சொற்கள், பழக்க வழக்கங்கள், கன்னியாகுமரி மாவட்டத்தில் மட்டுமே புழக்கத்தில் இருப்பவை என்பதைக் கண்டறிந்து, திருவள்ளுவரே கன்னியாகுமரி மாவட்டத்தில் பிறந்தவர்தான் என்பதை நிரூபிக்கப் பல ஆராய்ச்சிகள் செய்து வருகிறார்.

அண்மையில் திருவள்ளுவர் பெயரால் அமைந்த ஒரு மலையையும், ஒரு நாட்டையும் குமரிமாவட்டத்தில் கண்டு பிடித்து வெளியிட்டுள்ளார். தமது ஆராய்ச்சிப் பணிகளுக்காகவே, அவர் பார்த்து வந்த வங்கிப் பணியிலிருந்து விருப்ப ஓய்வு பெற்றவர்.

திரு.கணபதி ஸ்தபதி கன்னியாகுமரியில் 133 அடி உயரத்தில் திருவள்ளுவர் சிலை அமைக்கும் பணியில் ஈடுபட்டிருந்த போது, அவருக்கு டாக்டர் பத்மநாபன் அறிமுகமானார். அவர் செய்து வரும் ஆராய்ச்சிகள் பற்றி ஸ்தபதியிடம் விளக்கிக் கூறி, நாளடைவில் ஸ்தபதியின் அன்புக்குப் பாத்திரமானவர்.

ஸ்தபதி கூறி வரும் மயன் என்பவனைப் பற்றிய ஆராய்ச்சி களையும் மேற்கொள்ளத் தொடங்கினார். கன்னியாகுமரி மாவட்டத்தில் 'மயன்பறம்பு' என்ற பெயரில் ஒரு குன்று உள்ளிட்ட இடமே இருப்பதைக் கண்டுபிடித்த அவர், மயன் பற்றிய செய்திகளையும், கடற் கோளால் அடித்துச் செல்லப்பட்ட குமரிக்கண்டம் பற்றியும் ஆராய்ச்சிகள் செய்து வருகிறார். தனது ஆராய்ச்சி செய்திகளை 'ஆய்வுக் களஞ்சியம்' என்ற பத்திரிகையில் தொடர்ந்து வெளியிட்டு வருகிறார்.

திரு.கணபதி ஸ்தபதி அவர்கள் இந்திய ஜனாதிபதியிடம் சில்பகுரு பட்டம் வாங்கிய போது அவரும் புதுடெல்லி வந்திருந்து, நாகர் கோவிலைச் சேர்ந்த பிரபல ஏவுகணை விஞ்ஞானியும், குடியரசுத் தலைவரின் நெருங்கிய நண்பருமான பத்மஸ்ரீ டாக்டர் ஆ.சிவதாணுப் பிள்ளையின் உதவியுடன் குடியரசுத் தலைவர்



டாக்டர் பத்மநாபன் திரு.கணபதி ஸ்தபதியுடன்



டாக்டர் பத்மநாபன், டாக்டர் V. I. சுப்ரமணியம், திரு.கணபதி ஸ்தபதி மற்றும் திரு. பொள்ளாச்சி மகாலிங்கம்

மாளிகைக்குச் சென்று, டாக்டர் அப்துல் கலாம் அவர்களை ஸ்தபதியுடன் சென்று சந்தித்து, திருவள்ளுவர் தொடர்பாக அவர் செய்து வரும் ஆராய்ச்சிப் பணிகள் பற்றி குடியரசுத் தலைவருக்கு விளக்கிக் கூறி விட்டு வந்தார்.

பழகுவதற்கு எளிமையான மற்றும் அன்பான மனிதர். திரு.கணபதி ஸ்தபதி திருவனந்தபுரத்தில் வாஸ்து கருத்தரங்கு




மைசூரில் 1994ம் ஆண்டு நடைபெற்ற கருத்தரங்கு

நடத்திய போது இவர் ஆற்றிய பணி மகத்தானது. இன்று வரை திரு.கணபதி ஸ்தபதியிடம் மிகுந்த மரியாதையுடனும், பாசத்துடனும் பழகி வரும் ஓர் அற்புதமான மனிதர் டாக்டர் பத்மநாபன் அவர்கள்!

இவற்றைத் தவிர திரு. கணபதி ஸ்தபதி அவர்கள் ஏறக்குறைய 100 கருத்தரங்குகளில் கலந்து கொண்டு நமது பாரம்பரிய வாஸ்து விஞ்ஞானத்தின் மகத்துவத்தை அனைவரும் உணரும் வண்ணம் வெவ்வேறு தலைப்புகளில் பல கட்டுரைகளைச் சமர்ப்பித்துள்ளார்.

முன்னாள் தமிழக மற்றும் மத்திய அமைச்சரும், மகாராஷ்டிர மாநில முன்னாள் ஆளுநருமான திரு.C. சுப்ரமணியம் அவர்கள் தலைமை தாங்க, ''வாஸ்து விஞ்ஞானம்'' **(Vaastu Science)** என்ற தலைப்பில் 1994 ம்ஆண்டு சென்னை அருங்காட்சியகத்திலும், ''கணக்கியல்'' **(The Scale)** என்ற தலைப்பில் 1994ம் ஆண்டு, இந்தியத் தொழில்



அமெரிக்கா வாஷிங்டனில் 2001ம் ஆண்டு நடைபெற்ற தொழிற் பட்டறை

நுட்பக் கழகம், மும்பையிலும் (I.I.T., Mumbai), ''இந்தியக் கலை மற்றும் கலாச்சாரத்திற்கு சிற்பிகளின் பங்களிப்பு என்ற தலைப்பில் 1994ம் ஆண்டு மைசூரிலும் (Shilpis and their contribution to the Indian culture and civilisation) , ''வாஸ்து சாஸ்திரம் ஒரு விஞ்ஞானம்'' (Vaastu Shastra as a Science) என்ற தலைப்பில் பூனாவிலும், ''துருவபேர சாந்நித்யம் - அருவத்தை உருவமாக்கித் தந்த வாஸ்து கணிதம்'' என்ற தலைப்பில் சென்னைப் பல்கலைக்கழக வைணவத் துறையில் 1997ம் ஆண்டு ஒரு கட்டுரையும், 'Engineering aspects of Scientific Vaastu' என்ற தலைப்பில் 1998 ம்ஆண்டு ஹைதராபாத் நகரிலும், 'Indian Science with reference to Vaastu', என்ற தலைப்பில் 1998ம் ஆண்டு இலங்கையிலும், 1998ம் ஆண்டு 'Science & Technology in Ancient India' என்ற தலைப்பில் புதுடெல்லி பொறியியல் கல்லூரியிலும், கோழிக்கோட்டில் 1998 ம் ஆண்டு 'Vaastu Vidya 98' என்ற தலைப்பிலும், சென்னை அண்ணா பல்கலைக் கழகத்தில் 1998ம் ஆண்டு 'Interpretation of $E = mc^2$ in the light of Vaastu Shastra' என்ற தலைப்பிலும், ஜெர்மனியிலுள்ள மியூனிச் பல்கலைக் கழகத்தில் 1998ம் ஆண்டு 'A Shilpi Speaks' என்ற தலைப்பிலும், இலண்டன் Middlesex University பல்கலைக்கழகமும் கேரள ஆயுர்வேதக் கல்லூரியும் இணைந்து 1999 ம் ஆண்டு நடத்திய கருத்தரங்கில் 'Sthapatya Veda & Ayur Veda' என்ற தலைப்பிலும், இராஜபாளையத்தில் 2000ம் ஆண்டு 'Scientific Vaastu' என்ற தலைப்பிலும், 2001 ம் ஆண்டு இராஜபாளையத்தில் 'Let Vaastu rule the nest' என்ற தலைப்பிலும், 2001 ம் ஆண்டு புதுடெல்லியில் திட்டக்கமிஷன்

தலைவர் தலைமையில் **'Vaastu Shastra - Myth and Reality'** என்ற தலைப்பிலும், 2002ம் ஆண்டு அமெரிக்காவின் ஓமஹாவில் **'Significance of Temple Form & Temple Complex'** என்ற தலைப்பிலும், 2003 ம் ஆண்டு இராஜஸ்தான் மாநிலத்திலுள்ள பிர்லா இன்ட்ஸ்டிடியூட் ஆஃப் டெக்னாலஜியில் **(Birla Institute of Technology, Pilani) 'Vedic Architecture and what was there before a Big Bang?'** என்ற தலைப்பிலும், சமர்ப்பிக்கப்பட்ட கட்டுரைகள் குறிப்பிடத்தக்கவை எனலாம்.



சென்னையில் 2002ம் ஆண்டு நடைபெற்ற தொழிற் பட்டறை

இவை தவிர **(Work shop)** எனப்படும் தொழிற் பட்டறைகளை வெவ்வேறு ஊர்களில் அதிக அளவில் நடத்தி மாணவர்களுக்கும், பொறியாளர்களுக்கும் விழிப்புணர்வு ஊட்டி வருகிறார். இப்பட்டறைகள் மூன்று அல்லது நான்கு நாட்கள் தொடர்ந்து நடைபெறும். வாஸ்து விஞ்ஞானத்தைப் பாடமாகவும் **(Theory)**, செய்முறை விளக்கங்களாகவும் **(Practicals)** கற்றுக் கொடுப்பார். அண்ணா பல்கலைக் கழகத்திலிருந்து பேராசிரியர்

## சென்னையில் 2005ம் ஆண்டு நடைபெற்ற தொழிற் பட்டறையிலிருந்து சில காட்சிகள்



வகுப்பறையில்



வகுப்பறையில்



திரு.ஜாக் ஸ்தபதியுடன்



திருமதி டோரிஸ் ஸ்தபதியுடன்



திரு.மைக்கேல் பார்டன் ஸ்தபதியுடன்



திரு. ரேன்டி ஸ்தபதியுடன்



திரு.ரொனால்ட் குவின்



திருமதி ஓல்கா ஸ்தபதியுடன்

களை வரவழைத்து விரிவுரை ஆற்றச் செய்வார். ஆகம சாஸ்திரங்களை ஆகமப் பண்டிதர் டாக்டர் S.P. சபாரத்தினம் அவர்கள் கற்பிப்பார்.

இவ்வாறான தொழிற்பட்டறைகளை 1994ம் ஆண்டு சேலத்திலும், 1995ம் ஆண்டு அண்ணா பல்கலைக் கழகத்திலும், 1999ம் ஆண்டு சேலத்திலும், 2000 ம் ஆண்டு இராஜ பாளையத்திலும், 2001ம் ஆண்டு மேரிலேண்ட் (Mary land) வாஷிங்டன் DC (Washington DC), அமெரிக்காவிலும், 2002ம் ஆண்டு சென்னையிலும், 2004ம் ஆண்டு மறுபடி சென்னையிலும், சமீபத்தில் பிப்ரவரி 2005ல் சென்னையில் அவரது அலுவலகத்திலும் நடத்தியுள்ளார்.

இந்தியர்களைத் தவிர அமெரிக்கா, ரஷ்யா, ஆஸ்திரியா போன்ற நாடுகளிலிருந்து வெளிநாட்டவர் நமது பாரம்பரிய விஞ்ஞானமான வாஸ்து விஞ்ஞானத்தை நேர்முகமாக அறிந்து அதைச் சரிவரக் கற்பதற்கு திரு.கணபதி ஸ்தபதி அவர்கள்தான் சரியான ஆசிரியர் என்று அவர் எழுதிய புத்தகங்கள் மூலம் அறிந்து, அவரைத் தொடர்பு கொண்டு சென்னை வருகின்றனர்.

அவ்வாறு வருபவர்கள் குறைந்தது 1 மாதம் இங்கு தங்கி, வாஸ்து விஞ்ஞானத்தை ஊன்றி கற்றுச் செல்கின்றனர். [ஸ்தபதி கட்டி வைத்துள்ள மயசபை என்னும் கட்டிடத்தில் 3 பேர் தங்கலாம். 3 பேருக்கு மேல் ஒரே சமயத்தில் வந்தால் அருகிலுள்ள ஹோட்டல்களில் தங்க ஏற்பாடு செய்து கொடுப்பார்.] வருபவர்கள் அனைவருமே பெரும்பாலும் பொறியா ளர்களாகவோ அல்லது கட்டடிடக் கலை வல்லுநர்களாகவோ இருப்பர்.

கற்றுச் சென்றதை அவர்கள் ஊர்களுக்குச் சென்று பலருக்கும் கற்பித்தும், வாஸ்து விஞ்ஞான அடிப்படையில் கட்டிடங்களைக் கட்டியும் வருகின்றனர். ஒரு சிலர் தொடர்ந்து பலமுறை இந்தியா வந்து திரும்புவர். திரு.மைக்கேல் பார்டன் **(Mr.Michael Borden)** என்ற அமெரிக்கர் 1995 லிருந்து 2 வருடங்களுக்கு 1 முறை வந்து 1மாதம் போல் தங்கி விட்டுச் செல்வார். திரு.ரொனால்ட் குவின் **(Mr.Ronald Quinn)** என்ற அமெரிக்கர் கொலராடோ **(Colorado)** பகுதியிலிருந்து 2002ம் வருடம் வந்து 2 மாதம் தங்கி படித்து விட்டு சென்றார். இவர் மறுபடி 2005 ஆகஸ்டில் வருகிறார்.

திருமதி.ஓல்கா சொக்கலோவா **(Mrs.Olga Sokolova)** என்ற இரஷியப் பெண்மணி [அமெரிக்காவில்] வசிப்பவர்] பிப்ரவரி 2005ல் வந்து 1 மாதம் தங்கி வாஸ்து விஞ்ஞானம் பயின்றார். இவருடன் திரு.ராண்டி **(Mr.Randy Cannare)** என்ற அமெரிக்கரும், திரு. ஜாக் **(Mr.Jock DeSwart)** என்ற அமெரிக்கரும், திருமதி.டோரிஸ் **(Mrs.Doris Buchner)** என்ற ஆஸ்திரியப் பெண்மணியும் வந்திருந்தனர்.

வாஸ்து விஞ்ஞானத்தைக் கற்பதற்காக திரு.கணபதி ஸ்தபதியை வந்தடைந்தது தங்கள் வாழ்வில் பெற்ற பெரும் பேறு என்று மகிழ்ந்து மிகவும் அக்கறையுடன் கற்றுச் செல்கின்றனர். அவர்கள் அனைவரையும் ஸ்தபதியார் சிதம்பரம் நடராஜர் கோவிலுக்கும், தஞ்சை பிரகதீஸ்வரர் ஆலயத்திற்கும் அழைத்துச் சென்று நமது பாரம்பரிய கோவில்கள் பற்றிய அறிவியல்

நுட்பங்களை விளக்கினார். அனைவரும் பெருமகிழ்ச்சி அடைந்தனர்.

இவ்வாறு நமது பாரம்பரிய விஞ்ஞானமான வாஸ்து விஞ்ஞானத்தை, உலக முழுவதும் உள்ள மக்கள் அனைவரும், கற்க வேண்டும் என்று 78ல் அடி வைக்கப் போகும் இந்த வயதிலும் ஓர் இளைஞனைப் போல் சுறுசுறுப்பாக செயல்பட்டு வருகிறார் திரு.கணபதி ஸ்தபதி அவர்கள்!

சங்ககாலச் சிற்பச்சித்தன் மயனுக்கு, மாமல்லபுரம் அருகே உள்ள வடகடும்பாடி என்ற ஊரில் அவருக்கு சொந்தமான பட்டறை இருக்கும் இடத்தில் ஒரு மாபெரும் மணிமண்டபம் அமைக்க எண்ணியுள்ளார். முற்றிலும் கருங்கற்களால், அழகிய வேலைப்பாடுகளுடன், நடுவில் மயனது சிலையுடன் அமையவிருக்கும் இம்மண்டபம் கட்டி முடிக்க சுமார் 2 கோடி ரூபாய் செலவாகும் என்று எதிர்பார்க்கப்படுகிறது. திரு. கணபதி ஸ்தபதி அவர்கள் அவரது சொந்தப் பணத்தைக் கொண்டு மண்டபம் கட்டத் தொடங்கி விட்டார். ஒரு சிறு பகுதிக்கு அஸ்திவாரம் முடிக்கப்பட்டு, மயனது சிலை செதுக்கும் பணியும் தொடங்கப்பட்டு விட்டது.

அவரது இந்த இமாலயப் பணியைப் புரிந்து கொண்டு, மக்கள் அளிக்கும் நன்கொடையில் முழுவதும் கட்டி முடிக்கப்படும். அவ்வாறு முடிக்கப்பெறின், மாமல்லபுரத்திற்கு வருகை தரும் சுற்றுலாப் பயணிகள், கண்டிப்பாக அம்மண்டபத்திற்குச் சென்று, அழகிய சிற்ப வேலைப்பாடுகளையும், மண்டபம் கட்டப்பட்டுள்ள

நேர்த்தியையும் கண்டு மகிழ்ந்து விட்டுத்தான் செல்வர் என்பது உறுதி.

அவர் வாழ்நாளிலேயே அம்மண்டபம் கட்டப்பட்டு, அவரது அவா பூர்த்தி அடைய வேண்டும்! அன்னார் இன்னும் பல்லாண்டு நீடுழி, நோய் நொடியின்றி வாழ இறைவன் அருள் புரியட்டும்!!



திரு.கணபதி ஸ்தபதியின் கைவண்ணத்தில்
உருவான மயனது திருவுருவம்

சங்ககாலச் சிற்பச் சித்தன் மாமுனி மயனுக்கு திரு.கணபதி ஸ்தபதி கட்ட எண்ணியுள்ள விஞ்ஞானக் கலைக் கூடத்தின் வரைபடம் அடுத்த பக்கத்தில்

சங்க காலச் சிற்பச் சித்தன் மாமுனி மயன்
விண்ஞானக் கலைக் கூடம்



சங்க காலச் சிற்பச் சித்தன் மாமுனி மயன்
விண்ஞானக் கலைக் கூடம்



## ஹவாய் ஸ்ரீ சிவாய சுப்ரமுனிய சுவாமிகள் அவர்களுடன் ....

திரு.கணபதி ஸ்தபதி அவர்கள் திருக்கோவில் பணிகள் அதிக அளவில் செய்ததால் அவருக்கும் ஆன்மிகத் தொடர்புடைய மத குருமார்களுக்கும் சற்று கூடுதலாகவே நெருக்கம் உண்டு.

அவ்வகையில் ஸ்ரீ இரமண மகரிஷிகள், காஞ்சி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சுவாமிகள், மேல்மருவத்தூர் ஸ்ரீ பங்காரு அடிகளார், இரத்தினகிரி ஸ்ரீபாலமுருகனடிமை போன்றவர்களுடன் தொழில் நிமித்தம் பழகினாலும், அவர்கள் அனைவருடனும் மிகுந்த மதிப்புடனும், மரியாதையுடனும் பழகுவார். [அவரது தந்தையின் அறிவுரையின்படி எஜமானருக்குப் பணிவுடன் இருப்பதும், எஜமானத் துரோகம் செய்யாதிருப்பதும் திரு.கணபதி ஸ்தபதியின் தலையாய குறிக்கோள்.]

அவர்களும் ஸ்தபதியின் மீதும், அவருடைய அறிவாற்றல் மீதும், அவருடைய பாரம்பரியம் மிக்க தொழிலின் மீதும் மிகுந்த மதிப்பும், மரியாதையும் வைத்திருந்து ஸ்தபதியுடன் அன்புடனும் பாசத்துடனும் பழகுவர்.



ஸ்ரீ சிவாய சுப்ரமுனியசுவாமிகள்

மேற்கூறிய அனைவரும் தமிழ்நாட்டைச் சேர்ந்தவர்கள்; தங்கள் ஆன்மிகப் பணி தொடர்பான விஷயங்களை தமிழ்நாட்டிலேயே நடத்துபவர்கள். ஆனால்,

அமெரிக்காவில், ஹவாய்த் தீவிலுள்ள குவாய் என்ற இடத்தில் மிகப் பெரிய ஆசிரமம் ஒன்றை அமைத்துக் கொண்டு இந்து மதத்தின் மீது மிகுந்த ஈடுபாடு கொண்டு, அதற்காகப் பல பணிகள் செய்து வரும் ஸ்ரீ சிவாய சுப்ரமுனிய சுவாமிகள் என்பவர் திரு.கணபதி ஸ்தபதி அவர்களுடன் பல வருடங்களாகத் தொடர்பு கொண்டவர்; ஸ்தபதியின் மீது மிகுந்த அன்பும், மதிப்பும் கொண்டவர்; ஹவாயில் ஒரு மிகப் பெரிய கோவில் ஒன்றைக் கட்டுவதற்கு ஸ்தபதியைப் பணித்தவர்.

ஸ்ரீ சிவாய சுப்ரமுனிய சுவாமிகள் பிறப்பால் ஓர் அமெரிக்கர். [திரைப்படங்களில் நடனம் ஆடிக் கொண்டிருந்தவர்.] இந்து மதத்தின் மீதும், அதன் கோட்பாடுகள் மீதும் தீவிரப் பற்று வைத்து இந்து மதத் துறவியானவர். ஒன்றே கடவுள் என்ற கொள்கையில் நம்பிக்கை உடையவர். இலங்கையிலுள்ள ஸ்ரீ யோக சுவாமிகள் என்பவரின் சீடராக இருந்து பின்னர் ஹவாய்த் தீவிலுள்ள குவாய் என்ற இட்த்தில் சுமார் 10 ஏக்கர் பரப்பளவில் ‘சன்மார்க இறைவன் கோவில்’’ என்ற பெயரில் ஓர் ஆலயத்தை நிறுவுவதற்கு முனைந்து அதை நிறைவேற்றுவதற்கு திரு.ஸ்தபதியை அணுகினார்.

எனவே, ஸ்தபதியை உடனடியாக அமெரிக்கா வரும்படி அழைப்பு விடுத்தார். 1993 ம் ஆண்டு அமெரிக்காவிலுள்ள ஹவாய்த் தீவை வந்தடைந்த திரு.ஸ்தபதியை அன்புடன் வரவேற்று, அவருக்கு நேர்ந்த ஒரு விநோத அநுபவத்தை ஸ்தபதியிடம் கூறினார்.

'அது கனவா அல்லது விழிப்பு நிலையா என்று கூற முடியாத நிலை. ஆசிரமத்தின் தோட்டத்தில் உள்ள ஒரு சிறிய குன்றின் மேல் ஜடாமுடியுடன் சின்முத்திரையுடன் தக்ஷிணாமூர்த்தி தெற்கு திசை நோக்கி அமர்ந்திருக்கிறார். எதிரில் ஸ்ரீ சுப்ரமுனிய சுவாமி நின்றிருக்கிறார். தக்ஷிணா மூர்த்தி இவரை நோக்கி ''வா'' என்று சைகையால் அழைக்கிறார். [**He beckoned me. - Sri Sivaya Subramuniya Swamy)** அழைப்பை ஏற்று இறங்கி அவர் அருகில் வந்ததும், கழுத்து பாகத்திலிருக்கும் தனது ஜடாமுடியை நீக்கிக் காட்டுகிறார் தக்ஷிணா மூர்த்தி. அடடா! அண்ட சராசரங்கள் அனைத்தும் தெரிகின்றது. மெய் சிலிர்த்துப் புளகாங்கிதம் அடைகிறார் சிவாய சுப்ரமுனிய சுவாமிகள்.'

இந்த நிகழ்ச்சியை ஸ்தபதியிடம் விவரித்தார் ஸ்ரீ சிவாய சுப்ரமுனிய சுவாமிகள். அந்த இடத்தில் சிவனுக்காக ஓர் ஆலயம் அமைக்க இருப்பதாகவும், அதை திரு.ஸ்தபதியே கட்டித் தர



தக்ஷிணா மூர்த்தி அமர்ந்ததாகக் கூறப்படும் குன்றினை திரு.ஸ்தபதி பார்வையிடுகிறார்




ஸ்ரீ சிவாய சுப்ரமுனியசுவாமிகள் கையொப்பமிட்டு ஒப்புதல் அளித்த வரைபடம்(வடக்கு மூலையில் உள்ளது தக்ஷிணாமூர்த்தி அமர்ந்த குன்று)

வேண்டும் என்று கூறினார். அதைக் கேட்டு மகிழ்ந்த ஸ்தபதி, 'தக்ஷிணா மூர்த்தி அமர்ந்திருந்த மலை எங்குள்ளது?' என்று

கேட்டார். ஸ்ரீ சுப்ரமுனிய சுவாமிகள் நின்றிருந்ததாகக் கூறப்படும் இடத்திற்கு எதிரே ருத்திராட்ச மரங்கள் நிறைந்த அடர்ந்த காடு. அதனுள்ளேதான் அந்த குன்று இருக்க வேண்டும் என்று நினைத்து, அதைத் தேடிப் பார்ப்பது என்று முடிவாயிற்று. உடனே, அந்த இடத்திற்கு எதிரே இருந்த ருத்திராட்ச மரங்களை ஒரு குறிப்பிட்ட தூரம் வரை வெட்டி வழி ஏற்படுத்தி விட்டுப் பார்ப்பது என்றும் முடிவாயிற்று.



ஆலயத்தின் சேர்மானப் பணிகள் பெங்களூரில் தற்காலிகமாக சேர்க்கப்பட்டு திரு.ஸ்தபதியின் பார்வைக்காக வைக்கப்பட்டுள்ளது

அதன்படி இயந்திரங்கள் கொண்டு ஒரு குறிப்பிட்ட தூரம் வரை ருத்திராட்ச மரங்கள் வெட்டப்பட்டதில் சற்று தூரத்திலேயே தென்பட்டது அந்தச் சிறிய குன்று. அதைப் பார்த்ததும் அனைவருக்கும் மகிழ்ச்சி. ‘பஞ்சப் பிரகாரம்’ எனப்படும் ஐந்து பிரகாரங்களைக் கொண்ட ஆலயமாகக் கட்டுவது என்றும், அந்தக்

குன்றை பஞ்ச லிங்கத் திருக்கோவிலாகக் கட்டுவது என்றும் தீர்மானிக்கப்பட்டு, அங்கேயே தங்கி இரண்டே நாட்களில் கோவிலுக்கான வரைபடத்தை ஸ்தபதி தயாரித்துக் கொடுத்தார்.

அதைப் பார்த்த சிவாய சுப்ரமுனிய சுவாமிகள் மகிழ்ந்து, உடனே ஒப்புதல் அளித்தார். ஒப்புதல் அளித்ததாக வரைபடத்தில் கையொப்பம் இட்டுத் தரும்படி ஸ்தபதி வேண்டிக் கொண்டதின் உடனடியாகக் கையொப்பம் இட்டுக் கொடுத்தார். அந்த



ஸ்ரீ சிவாய சுப்ரமுனியசுவாமிகள் முன்னிலையில் கற்பணிகள் தொடக்கம்

வரைபடம்தான் இன்றும் ஸ்தபதி பாதுகாத்து வருகிறார். சிவாய சுப்ரமுனிய சுவாமிகள் மறைந்து விட்டாலும் அவர் கையொப்பம் இட்டுத் தந்த வரைபடம் இன்றும் போற்றிப் பாதுகாக்கப்பட்டு வருகிறது. வரைபடத்தின்படி திருப்பணிகள் தொடங்கப்பட்டு இன்றும் நடந்து வருகிறது. முற்றிலும் கருங்கல்லால் ஆன கோவிலாக இது இருக்கும். ஆன்மிக அன்பர்கள் அளித்து வரும் நன்கொடையினால் இத்திருப்பணிகள் நடைபெற்று வருவதால், மெதுவாகத்தான் நடைபெறுகிறது.



இந்தியாவில் பெங்களூரில் அதற்கான கற்பணிகள் நடைபெறுகிறது. திரு.கணபதி ஸ்தபதி அவர்கள் மாதம் ஒரு முறை பெங்களூர் சென்று பணிகளை மேற்பார்வையிட்டு வருகிறார். பணிகள் முடிய முடிய உடனே ஹவாய்க்கு அனுப்பப்பட்டு அங்கு சேர்மாணப்பணிகள் நடைபெற்று வருகின்றன. திரு.கணபதி ஸ்தபதியின் பிரதான மாணவரும், அவரது அலுவலகத்தில் பணிபுரியும் சிற்பிகளிலேயே மூத்தவரும், அனுபவம் மிக்கவருமான திரு. சண்முகம் ஸ்தபதி அவர்களின் மேற்பார்வையின் பேரில் சேர்மானப் பணிகள் ஹவாயில் நடைபெறுகிறது. அவர் ஹவாயிலேயே தங்கிப் பணிகளைச் செவ்வனே செய்து வருகிறார்.

தெற்கு முகமாக அமையப் பெற்ற சிவன் கோவிலாக இது அமையப் போகிறது. தமிழ்நாட்டிலேயே ஆவுடையார் கோவில் என்ற இடத்தில் உள்ள சிவன் கோவில்தான் தெற்கு முகமாக அமையப் பெற்ற சிவன் கோவிலாகும். அதிலும் வெறும் ஆவுடை

மட்டுமே உண்டு. சிவலிங்கம் இருக்காது. தினமும் அன்னத்தினால் சிவலிங்கம் செய்து பூசை நடத்துவர். ஆனால், ஹவாயில் அமையப் போகும் திருக்கோவில் தெற்கு பார்த்த சிவன் கோவிலாக இருக்கும். சிவலிங்கம் 'ஸ்படிகம்' எனப்படும் பொருளினால் செய்யப்பட்டு இருக்கும். ஆவுடை அநேகமாக தங்கம் அல்லது வெள்ளியினால் செய்யப்படலாம் என்று எதிர்பார்க்கப் படுகிறது.

இந்தக் கோவில் நன்றாக அமைய வேண்டும் என்று பெரிதும் விரும்பிய ஸ்ரீ சிவாய சுப்ரமுனிய சவாமிகள் இன்று நம்மிடையே இல்லை. 2000 ம் ஆண்டு அவர் சமாதியடைந்தார். அவருக்குப் பிறகு மடத்துப் பொறுப்பை ஏற்று நடத்தி வரும் ஸ்ரீ போதி நாத சுவாமிகள் கோவில் பணிகள் தடையின்றி நடைபெறுவதற்குப் பெரிதும் பாடுபட்டு வருகிறார்.

இக்கோவிலின் தனிச்சிறப்பு என்னவென்றால் கருங்கல்லால் சிற்பங்களையும், கோவில் தூண்களையும் செதுக்கும் போது எந்த விதமான இயந்திரங்களையும் உபயோகிக்கக் கூடாது என்றும் கைகளால் உளி கொண்டு மட்டுமே செதுக்கப்பட வேண்டும் என்றும் அன்பான வேண்டுகோள் விடுத்தார் ஸ்ரீசிவாய சுப்ரமுனிய சுவாமிகள் அவர்கள். காரணம், செய்யும் கரங்களின் மூலம் அவர்களின் ஆன்ம பலம் செய்யும் பொருளிலே சேரும் என்பதில் அவருக்கு நம்பிக்கை. இயந்திரங்களின் துணை கொண்டு செய்யும் போது அத்தகைய ஆன்ம பலத்தை எதிர்பார்க்க முடியாது அல்லவா? இக்கருத்தைப் பெரிதும் இரசித்த ஸ்தபதி, சிற்பம் செதுக்குவதிலும், கற்களை வெட்டுவதிலும் வட பாரம்பரியமான முறையையே பின்பற்றுகிறார்.

கருவறை விமானம் கருங்கல்லிலே அழகிய வேலைப்பாடுகளுடன் விளங்குகிறது. அதைத் தங்க முலாம் பூச விரும்பிய ஸ்ரீ சிவாய சுப்ரமுனிய சுவாமிகள், கருங்கல்லில் செய்யப்பட்ட வேலைப்பாடுகள் அனைத்தும் தங்க முலாம் பூசப்பட்ட உடன் தெளிவாகத் தெரிய வேண்டும் என்பதில் உறுதியாக இருந்தார்.

எனவே, அதற்குத் தேவையான நவீன விஞ்ஞான யுக்தியைக் கண்டுபிடிக்கும்படி கேட்டுக் கொண்டு, அதன்படி அமெரிக்கர்கள் கண்டுபிடித்த முறையின்படி, விமானத்திற்குத் தங்க முலாம் பூசப்பட்டது. எப்படியெனில், முதலில் தாமிரத்தை உருக்கி, பிரஷ் கொண்டு கருங்கல்லின் மேல் வர்ணம் அடிப்பது போல் அடித்து விடுவர். [காண்க படம் ]

பின்னர் அதன் மேல் தங்கத்தில் ரேக்குகள் எனப்படும் மெல்லிய பட்டைகளாகச் **(Gold Flakes)** செய்து அதன் மேல் ஒட்டி விடுவர். முழுவதும் ஒட்டி முடிந்த பின்னர் விமானம் அதன் கருங்கல் வேலைப்பாடுகள் முழுவதும் தெரியும் வண்ணம் அழகுற விளங்குகிறது. [காண்க படம்] இவ்வாறு, அக்கோவிலை சிறப்பாகவும், சாந்நித்யம் மிக்கதாகவும் அமைக்க அரும்பாடு பட்டவர் ஸ்ரீ சிவாய சுப்ரமுனிய சுவாமிகள் அவர்கள்.

ஸ்ரீசிவாய சுப்ரமுனிய சுவாமிகள் இப்பூவலகில் இல்லா திருந்தால் என்ன? அவரே கூறியுள்ளது போல எங்கிருந்தோ அவர் கோவிலின் வளர்ச்சியை நாள் தோறும் கண்டு களித்துக் கொண்டுதான் இருக்கிறார். **(I will see from my astral body. - Sri Sivaya Subramuniya Swamy)**

## சம்ஸ்கிருத ஆசிரியர் திரு.நாகராஜ் சர்மா அவர்களுடன்....

பள்ளியில் நல்ல மதிப்பெண் பெற்றிருந்தும், பொறியியல் கல்லூரியில் சேருவதற்குக் குடும்பத்தில் நிலவும் வறுமை இடம் கொடுக்காததால், பகவான் இரமண மகரிஷியின் வழிகாட்டுதலின்படி காரைக்குடி அழகப்பா கலைக்கல்லூரியில் 1947ம் வருடம் கணிதம் படிக்கச்சேர்ந்தார் திரு.கணபதி.

அந்த வருடம்தான் அந்தக் கல்லூரியே தொடங்கப் பெற்றது. கணிதம் பயின்றாலும், துணைப்பாடமாக ஒரு மொழி கற்றுக் கொள்ள வேண்டும் என்ற போது திரு.கணபதி தேர்ந்தெடுத்தது சம்ஸ்கிருதத்தைத்தான். அவரது தந்தையார் முழுவதும் கற்றுத் தேர்ந்திருந்த சில்ப சாஸ்திரம், மான சாரம், வாஸ்து நூல்கள் அனைத்தும் சம்ஸ்கிருதத்திலேயே இருந்ததால் தானும் அவைகளைப் படிக்க வேண்டும் என்ற பேராவல்தான் அதற்குக் காரணம்.

[சம்ஸ்கிருதத்தை நன்கு கற்று மேற்சொன்ன அனைத்து நூல்களையும் திரு.கணபதி ஸ்தபதி அவர்கள் கற்றுத் தேர்ந்தாலும், அவருக்கு பிடித்தமான நூல்கள் காளிதாசனது நூல்கள்தான் என்பது தனிக்கதை. இன்றும் அவர் பேசும்போது உதாரணங்களுக்கு உடனடியாக அவர் கூறுவது காளிதாசனது மேகசந்தேசம், சாகுந்தலம் போன்றவைதான். அவர் அவைகளைத் தெளிவான சம்ஸ்கிருதத்தில் கூறுவதை எத்தனை முறை கேட்டாலும் திகட்டாது].

இத்தகைய தேர்ந்த சம்ஸ்கிருத அறிவிற்கு, அவர் நன்றியுடன் நினைவு கூர்வது அவரது ஆசிரியர் திரு.நாகராஜ சர்மா அவர்களைத்தான். காரைக்குடி அழகப்பா கல்லூரியில், திரு.கணபதி ஸ்தபதிக்கு சம்ஸ்கிருதம் கற்றுத் தந்தவர். புதிதாகத் தொடங்கப் பெற்ற கல்லூரி என்பதால் ஆசிரியர் அனைவரும்







ஆசிரியரும் மாணவரும்

புதிதாக சேர்ந்தவர்கள். திரு.கணபதியுடன் சேர்த்து மொத்தம் மூன்று மாணவர்கள்தான் சம்ஸ்கிருதம் படிக்கச் சேர்ந்தனர். ''நல்ல வேளை! நீங்களாவது சேர்ந்தீர்களே. நீங்களும் விலகி விட்டால் என்னை வேலையை விட்டே அனுப்பி விடுவார்கள்'' என்று திரு.நாகராஜ சர்மா நகைச்சுவையாகக் கூறுவாராம்.

அவர் சம்ஸ்கிருத ஆசிரியர் மட்டுமல்ல. ஆங்கிலத்திலும் மிகுந்த புலமை பெற்றவர். (Silver Tongued Srinivasa Shastri என்று ஆங்கிலேயர்களாலேயே அழைக்கப்படும் ஸ்ரீனிவாச சாஸ்திரி அவர்களிடம் ஆங்கிலம் பயின்றவர்.] அவரிடம் பயின்ற காரணத்தால் திரு.கணபதி ஸ்தபதி அவர்களும் ஆங்கிலத்தில் உயர்தரமாக எழுதுவார்.

பட்டப்படிப்பு முடிந்து வேலை தேடிக் கொண்டிருக்கும் காலகட்டங்களில், திரு.நாகராஜ சர்மா அவர்களிடம் ''சம்ஸ்கிருதம் படித்ததே வீண்தானோ?'' என்று மிகவும் வருத்தத்துடன் கேட்பார் திரு.கணபதி.

அதற்கு அவரது ஆசிரியர் ''கவலைப்படாதே கணபதி, படித்த படிப்பு நிச்சயம் வீண் போகாது. ஒரு நாள் நீ உலகம் முழுவதும் அறியும் பெரிய மனிதனாக வருவாய்'' என்று தேற்றினார்.

அவரது வாக்கு பலித்து, அவர் சொல்லிக் கொடுத்த சம்ஸ்கிருதத்தின் துணை கொண்டு சாஸ்திரங்களைக் கற்றுத்தேர்ந்து, திரு.கணபதி ஸ்தபதி அவர்கள் அனைவரும் அறியும் பெரிய நிலைக்கு வந்ததும் ஒரு நாள் மிகப் பெரிய பொதுக்

கூட்டத்தில், [மயிலை குப்புசாமி சாஸ்த்ரி ஹால்] அறிஞர்கள் நிரம்பிய கூட்டத்தில், அவர் உரையாற்றிக் கொண்டிருந்தார். அவர் உரையாற்றுகிறார் என்று தெரிந்து அக்கூட்டத்திற்கு வந்திருந்த திரு.நாகராஜ சர்மா அவர்கள், மிகுந்த நெரிசல் காரணமாக உள்ளே வரமுடிவில்லை. எனவே, வாசலிலேயே நின்று அவரது மாணவன் பேசுவதை மகிழ்ச்சியுடன் கேட்டுக் கொண்டிருந்தார்.

கூட்டம் முடிந்து, வெளியே வந்த திரு.கணபதி ஸ்தபதி அங்கே கூட்டத்தில் அவரது மதிப்பிற்குரிய ஆசிரியர் நிற்பதைப் பார்த்து, விரைந்து வந்து அவரை நலம் விசாரித்தார். அவரால் உள்ளே வரமுடியவில்லை என்பதைக் கேட்டதும் மிகுந்த வருத்தமடைந்தார். ஆனால், ஆசிரியரோ அதைப் பற்றிக் கவலைப் படாமல் அவரது மாணவன் அருமையாகப் பேசியதைப் பற்றியும், அவர் மேற்கோள் காட்டிய சம்ஸ்கிருத சுலோகங்களைப் பற்றியும் மகிழ்ந்து பாராட்டினார். அந்தப் பாராட்டைக் கேட்டு மனம் உருகினார் மாணவன். இவ்வாறு ஓர் உணர்ச்சிக் காவியம் அன்று அரங்கேறியது.

இன்று வரை, அவரிடம் அடிக்கடி தொலைபேசியில் உரையாடி நலம் விசாரிப்பார். அன்னாருக்குத் தற்போது 88 வயதாகிறது. ஒரு முறை திரு.கணபதி ஸ்தபதி அவர்கள், தனது துணைவியாரையும் அழைத்துக் கொண்டு சென்னை அண்ணா நகரில் உள்ள அவரது இல்லத்திற்குச் சென்று, வணங்கி ஆசி பெற்றார். இடையில் வெகு நாட்கள் பார்க்க இயலாமல் நீண்ட

நாட்களுக்குப் பிறகு சந்தித்ததால் அன்று மற்றோர் உணர்ச்சிக் காவியம் அரங்கேறியது.

இருவரும் ஒருவரையொருவர் ஆரத் தழுவிக் கொண்டு கண்ணீர் விட்டதும், 77 வயதா கியதால் சிறிது சிரமப் பட்டேனும் ஆசிரியர் காலில் விழுந்து ஆசிகள் வாங்கியதும், கண்ணீர் மல்க ஆசிரியர் நின்றதும், இன்றும் ஒரு மாணவனைப் போல மரியாதை கலந்த பக்தியுடன் திரு.கணபதி ஸ்தபதி அவர்கள், தான் எழுதப் போகும் நூல்களின் கையெழுத்துப் பிரதியைக் காட்டி ஆசிரியரிடம் சந்தேகங்கள் கேட்டதும், இத்தனை வயதாகியும் கேட்கும் திறன் நன்கு செயல்படும் ஆசிரியர் மாணவனின் சந்தேகங்களுக்குப் பொறுமையாக விடையளித்ததும் காணக் கிடைக்காத காட்சிகள். நூலாசிரியருக்கு அந்த காட்சியை நேரில் காணும் வாய்ப்பு கிடைத்தது பெரும் பாக்கியமே !

தற்போது அடிக்கடி தொலைபேசி வாயிலாகப் பேசிக் கொள்கின்றனர். சுனாமியினால் சென்னையில் கடல் கொந்தளிப்பு ஏற்பட் டதும், கிழக்குக் கடற்கரைச் சாலையில் திரு.கணபதி ஸ்தபதியின் இல்லம் இருப்பதால், திரு.நாகராஜ சர்மா அவர்கள் உடனடியாகத் தொடர்பு கொண்டு ''பாதிப்பு ஏதும் இல்லையே'' என்று அன்போடு வினவினார். புதிதாகப் புத்தகம் வெளி யிட்டதும் அவருக்கு மறக்காமல் ஒரு பிரதியை அனுப்பி அவரது கருத் தைக் கேட்பார் திரு. ஸ்தபதி அவர்கள்.

இந்த அன்பு தூய அன்பு, பிரதிபலனை எதிர்பாராத அன்பு, ஒரு மாணவனுக்கு ஆசிரியரிடம் உள்ள மரியாதை கலந்த அன்பு,

ஆசிரியருக்கு தன்னிடம் படித்த மாணவன் இன்று உலகம் போற்றும் சிற்பியாக, நடுக்கடலில் நின்றாலும் சுனாமியினாலும் அழியாத மாபெரும் திருவள்ளுவர் சிலையைச் செய்து அனைவரின் பாராட்டுதலையும் அடைந்துள்ளானே என்ற பிரமிப்பும், பெருமையும், மகிழ்ச்சியும் கலந்த அன்பு!

அந்த அன்பு இக்காலத்தில் காண்பதற்கு மிகவும் அரிதான ஒன்றாகும்!

## ஓவியர், நடிகர் திரு.சிவகுமார் அவர்களுடன்..

திரு.கணபதி ஸ்தபதி அவர்கள் சிற்பத்துறையில் நெடுங்காலமாகப் பணியாற்றி வருவதால், ஓவியர்களை அதிக அளவில் அவருக்குப் பரிச்சயம் உண்டு. அவர் விரும்பும் ஓவியர்களில் திரு.ஜெயராஜ், திரு.ம.செ., திரு. சிவகுமார், திரு. மாரி அனந்தன் போன்றோர் குறிப்பிடத்தக்கவர்கள். ஸ்தபதியே ஓர் அருமையான ஓவியர். மாணவர்களுக்குப் பாடம் நடத்தும்போது கரும்பலகையில் மிகவும் சுலபமாக அவர் இழுக்கும் கோடுகள் ஓவியமாவது கண்டு அனைவரும் வியப்படைவது உண்டு.

ஓவியம் வரையும் ஆற்றலே சிற்பத்தொழிலுக்கும், அதன் எழிலுக்கும் ஆதாரம் என்று விளக்குவார். சிற்பத்தைக் கண்ணால் பார்த்து மகிழும் கவிதை என்றும் சுவைபட விளக்குவார். கடவுளையே மனித வடிவத்தில் கவிதையாகத்தானே படைக்கிறார்கள்?

பிரபல நடிகர் சிவகுமார் அவர்கள், அடிப்படையில் ஓர் ஓவியர் அவரே கூறியிருப்பது போல் 'ஓவியம் தான் அவருக்குத் தாய் வீடு. ஸ்தபதியைப் போன்ற சிற்பிகளும், ஓவியர்களும் அவருடைய பெரியப்பா, சித்தப்பா போன்றவர்கள்!' எனலாம்.

பிரபல இயக்குநர் திரு.பாலசந்தர் அவர்கள் மகன் திரு.பாலகைலாசம் அவர்கள் திருமணத்தின் போதுதான் திரு. சிவகுமாரை ஸ்தபதி சந்தித்தார். [அத்திருமணத்தில் அனைவரையும் வரவேற்கும் பணியை திரு.சிவகுமார் ஏற்றிருந்தார்.] அதற்குப் பிறகு சில திரைப்படங்களில் அவரைப் பார்த்ததுடன் சரி. அதுவும் அவர் நடித்த 'சிந்து பைரவி' படத்தை ஸ்தபதி அவர்கள் மிகவும் இரசித்துப் பார்த்தார்.

சமீபத்தில் ஓவியர் திருஞானம் அவர்கள் எழுதிய 'வண்ணக் கோடுகள்' என்ற புத்தகத்தை வெளியிடும் விழா நடை பெற்றது. புத்தகத்தை திரு.கணபதி ஸ்தபதி அவர்கள் வெளியிட திரு.சிவகுமார் அவர்கள் அதைப் பெற்றுக் கொண்டார்.

விழா தொடங்கும் முன் திரு.சிவகுமார் அவர்கள் ஸ்தபதி அமர்ந்திருக்கும் நாற்காலியின் அருகில் வந்து ''ஐயா! நான் நீண்ட நாட்களாக உங்களை சந்திக்க வேண்டும் என்று ஆவல் கொண்டிருந்தேன். மாலை கோவை செல்ல வேண்டிய நிகழ்ச்சி இருந்தும், இவ்விழாவில் நீங்கள் பங்கு கொள்கிறீர்கள் என்றதும் உடனே ஒப்புக் கொண்டேன்.'' என்றார்.

ஓவியக் கலைஞர்களும், சிற்பக் கலைஞர்களும் நிறைந்த கலை விழாவாக அது அமைந்தது. ஓவியர் திருஞானம் அவர்களும் ஸ்தபதி சிற்பக் கல்லூரி முதல்வராக இருந்த போது அவரிடம் பயின்ற மாணவர். விழாவிற்கு வந்திருந்த பலர் ஸ்தபதியிடம் பயின்ற மாணவர்கள்தான்.

அவ்விழாவில் ஸ்தபதியார் பேசும் போது 'திரு.சிவகுமார் அவர்கள் ஒழுக்க சீலர்' என்று பாராட்டிப் பேசினார். ஒழுக்கமாக இருத்தல், பொறாமைப் படாது இருத்தல், பொய் பேசாது இருத்தல், நேர்மையாக இருத்தல், எஜமானத் துரோகம் செய்யாதிருத்தல், தொழில் நாணயம் போன்ற குணங்கள் ஸ்தபதியாருக்கு மிகவும் பிடித்த குணங்கள். அவரும் அப்படித்தான் இருப்பார். அவரைச் சுற்றி உள்ளவர்களும் அப்படித்தான் இருக்க வேண்டுமென நினைப்பார். அதிலிருந்து தவறினார் என்று தெரிந்தால், எவ்வளவு நெருங்கிய சொந்தமோ, பந்தமோ, நட்போ, எது பற்றியும் கலைப்படாமல் அவர்களை விலக்கி விடுவார்.

புத்தக வெளியீட்டு விழாவில் திரு.சிவகுமார் அவர்கள், தஞ்சாவூர் பிரகதீஸ்வர் கோவில் ஓவியம் ஒன்றை ஸ்தபதியாருக்குப் பரிசளித்தார். அந்த ஓவியத்தின் சிறப்பு என்னவென்றால் அது திரு.சிவகுமாரே வரைந்த ஓவியம். 1.6.1962 அன்று காலை 8 மணியிலிருந்து மாலை 4மணி வரை, அங்கேயே அமர்ந்து வரைந்த கவின்மிகு ஓவியம்! கோவிலைக் கண் முன்னே கொண்டு வந்து நிறுத்தும் தத்ரூபமான ஓவியம்!!

அவ்விழாவில் திரு.சிவகுமார் அவர்கள் பேசும் போது இந்த ஓவியம் வரைந்தமுறை பற்றிப் பேசிவிட்டு, மேலும் இது போன்று ஏறக்குறை 5000 ஓவியங்கள் வரைந்திருப்பதாகக் குறிப்பிட்டார். மாபெரும் இமாலயப்பணி! இவர் ஓர் ஓவியராகவே இருந்து விட்டிருக்கலாமோ என்று திரு.கணபதி ஸ்தபதி அவர்கள் ஆதங்கத்துடன் குறிப்பிட்டதுண்டு.

மேலும் திரு.சிவகுமார் பேசும் போது ''திரு.ஸ்தபதி அவர்களுக்கு நான் ஓவியத்தைத் தந்த போது அக்கோவிலைக் கட்டியவர் அவரது மூதாதையர் தான் என்று பெருமையுடன் கூறினார். வெறும் ஓவியம் மட்டுமின்றி, அதை முப்பரிமாண சிற்பமாகச் செய்யும் திரு.கணபதி ஸ்தபதி அவர்கள் வாழும் காலத்தில் நாமும் வாழ்வது மிகவும் பெருமைப்பட வேண்டிய விஷயம். வெறும் ஓவியம் வரைந்தாலே நமக்கு சந்தோஷமாக இருக்கிறது. இவரோ 133 அடி உயர திருவள்ளுவர் சிலையைக் கருங்கல்லில் செய்து கொடுத்திருக்கிறார். அது எவ்வளவு பெருமைப்பட வேண்டிய செய்தி'' என்ற பாராட்டிப் பேசினார்.

மாபெரும் நடிகர், தலைசிறந்த ஓவியர், அவர் இவ்வளவு திறந்த மனதுடன் ஸ்தபதி அவர்களைப் பாராட்டியது கண்டு அவர் பெரு மகிழ்ச்சி அடைந்தார்.



அவ்விழா முடிந்த அடுத்த வாரமே, திரு. சிவகுமார் எழுதிய, அவரது வாழ்க்கை வரலாறான ''இது ராஜபாட்டை அல்ல'' என்ற புத்தகத்தை ஸ்தபதியாருக்கு அனுப்பி விட்டு, அவரிடம் தொலைபேசியில் அரைமணிக்கும் மேலாக அன்புடன் நலம் விசாரித்தார். அப்புத்தகத்தை நிதானமாகப் படிக்கும்படி கூறினார். ஸ்தபதியாரோ புத்தகத்தைக் கையில் எடுத்தவர் கீழே வைக்கவே மனமின்றி ஒரே நாளில் படித்து முடித்து விட்டார்! அவ்வளவு சுவரஸ்யமாக இருந்தது அப்புத்தகம்!



மனிதன் பூமியில் பிறந்து விட்டால் மட்டும் பெருமையில்லை. அவன் ஒரு கலைஞனாகப் பிறந்து விட்டால் அதை விடப் பெருமை! அவனே அடக்கத்துடனும், ஒழுக்கத்துடனும் நிறை குடமாக இருந்து விட்டால் அதை விடப் பெருமை! இவ்வகையில் திரு.கணபதி ஸ்தபதி, திரு.சிவகுமார் போன்றவர்கள் வாழும் உதாரணங்கள்!

## கௌரவ டாக்டர் விருது...

திரு.கணபதி ஸ்தபதி அவர்களுக்கு 'ஸ்தாபத்ய வேதம்' என்று அழைக்கப்படும் வாஸ்து விஞ்ஞானம் தொடர்பான அளவுகடந்த ஞானத்தைப் பற்றி இதுவரை வந்த அத்தியாயங்களில் ஏராளமாக படித்தோம். மிகப் பழமையான அந்த விஞ்ஞானத்தை உலகம் முழுவதும் பரப்ப வேண்டும், அதனால் உலக மக்கள் அனைவரும் பலனடைய வேண்டும் என்ற பேரவா உடையவர் அவர்.

எந்த பொதுக் கூட்டத்தில் பேசினாலும் இது பற்றிப் பேசாமல் இருக்க மாட்டார். எந்த பல்கலைக் கழகமும், பொறியியல் கல்லூரியும் இந்த விஞ்ஞானத்தைக் கற்றுத் தர முன்வரவில்லையே என்ற ஏக்கம் திரு.ஸ்தபதி அவர்களுக்கு எப்போதும் உண்டு. இந்நிலையில் ஹாலந்திலுள்ள மஹரிஷி மகேஷ்யோகி அவர்களின் வேதப் பல்கலைக்கழகம் **(Maharishi Vedic University, Holland)** 'ஸ்தாபத்ய வேதம்' என்ற பாடத்தைக் கற்பிப்பதற்காகவே ஒரு தனிப்பிரிவே வைத்துக் கொண்டுள்ளது என்று அவருக்குத் தெரிய வந்ததும், மகிழ்ந்து அதைப்பற்றிய கருத்துக்களை நண்பர்களுடன் மகிழ்ச்சியுடன் பகிர்ந்து கொண்டார்.

அதே போல், ஹாலந்திலுள்ள வேத பல்கலைக் கழகமும், இந்தியாவில், தமிழ்நாட்டில் வசிக்கும் திரு.கணபதி ஸ்தபதி என்பவரும் 'ஸ்தாபத்ய வேதம்' என்ற பெயருடைய விஞ்ஞானத்தைக் கற்றுத் தேர்ந்து, அதில் விற்பன்னராய் உள்ளார்

என்றும், அதைப் பற்றி ஏராளமான ஆராய்ச்சிகள் செய்து, அதிக அளவில் தொழிற்பட்டறைகளையும், ஆராய்ச்சி மாநாட்டுக்களையும் நடத்தி வருகிறார் என்றும் கேள்விப்பட்டு, அவரை ஹாலந்திற்கு வரவழைத்து, அவரைக் கேள்விகள் கேட்டு, தங்களுக்குள்ள சந்தேகங்களை எல்லாம் நிவர்த்தி செய்து கொள்ள விரும்பியது.

அதன் பொருட்டு, அவரை ஹாலந்திற்கு வரும்படியும், வரும் போது, அவர் ஆராய்ச்சி தொடர்பாக எத்தனை பேரை வேண்டுமானாலும் அழைத்து வரலாம் என்றும், உடனடியாக வர வேண்டும் என்றும், அதற்கான அத்துணை ஏற்பாடுகளையும், செலவுகளையும் பல்கலைக்கழகமே கவனித்துக் கொள்ளும் என்றும் ஸ்தபதிக்குத் தகவல் அனுப்பினர்.

அவர் மிகவும் மதிக்கும் வாஸ்து விஞ்ஞானத்தை வெளிநாட்டில் போய் விளக்குவதற்கு ஒரு வாய்ப்பு வந்ததே என்று மகிழ்ந்த திரு.கணபதி ஸ்தபதி, அவரது நெருங்கிய நண்பரான பொறியாளர் திரு.இராம மூர்த்தி அவர்களையும், மற்றொரு நெருங்கிய நண்பரான அகமப் பண்டிதர் டாக்டர் சபாரத்தினம் அவர்களையும் அழைத்துக் கொண்டு 1995ம் ஆண்டு ஹாலந்து சென்றார்.

அவர்களை அன்புடன் வரவேற்ற பல்கலைக்கழக நிர்வாகிகள், மறுநாளே ஸ்தபதியுடன் கலந்துரையாடலுக்கும், கேள்வி பதில் பிரிவிற்கும் ஏற்பாடு செய்தனர். அக்கலந்துரையாடலின் போது, மஹரிஷி ஸ்ரீ மகேஷ் யோகி

அவர்கள் நடுவிலும், சுமார் 15 அல்லது 20 பேராசிரியர்கள் ஒரு புறமும், திரு.கணபதி ஸ்தபதி அவர்கள் மறுபுறமும் அமர்ந்திருந்தனர். பேராசிரியர்கள் அனைவரும் அவர்களுக்கு ஏற்பட்டுள்ள அனைத்து கேள்விகளையும் கேட்டனர். 'வஸ்து, வாஸ்து என்றால் என்ன?, வாஸ்து சாஸ்திரத்தால் என்ன பயன்?, அந்த விஞ்ஞானத்தினால் மக்களுக்கு என்னென்ன நன்மைகள் ஏற்படும்?, அந்த விஞ்ஞானம் தற்காலத்திற்கும் பயன்படுமா?, பழங்காலத்தில் அந்த விஞ்ஞானத்தைப் பயன்படுத்திக் கட்டப்பட்டுள்ளவை யாவை?' போன்ற கேள்விகள் இவைகளில் அடங்கும். ஸ்தபதி அவர்களும், வாஸ்து விஞ்ஞானத்தைப் பற்றிய அவரது பரந்த அறிவினால், அவருக்கே உரிய வாக்கு வன்மையுடனும், நூல்களையும், ஸ்லோகங்களையும் மேற்கோள்கள் காட்டி, தெளிவாகவும், ஆணித்தரமாகவும் விளக்கிப் பேசினார். மஹரிஷி ஸ்ரீ மகேஷ் யோகி அவர்கள் அமைதியாக அமர்ந்து, அனைத்தையும் கவனித்துக் கொண்டிருந்தார். இவை அனைத்தும் வீடியோ மூலமாகப் பதிவாகிக் கொண்டிருந்தது.

இதைப் படித்துக் கொண்டிருக்கும் அனைவருக்கும் இப்பொழுது ஓர் ஐயம் எழலாம். இந்தக் கேள்விகளுக்கெல்லாம் ஸ்தபதி என்ன பதில்கள் அளித்தார் என்று தோன்றலாம். திரு.கணபதி ஸ்தபதி அவர்கள் எழுதியுள்ள பல புத்தகங்களில் அதற்குண்டான பதில்களை விளக்கியுள்ளார். அந்த புத்தகங்களைப் படித்தாலே அத்துணை கேள்விகளுக்குண்டான விடை கிடைத்து விடும். திரு. ஸ்தபதி அவர்கள் பேசியதைப் போல் எழுதுவதற்கும்

வடக்கு

வட மேற்கு | வட கிழக்கு

பாம்பு களால் தொல்லை
விளைந்து பிரம்ம உணர்வு பெறுவான்
சிறப்பு எய்துவான்
பக்கு சிலனாய் இருப்பான்
நீசில் இறப்பான்
வயிற்று நோய்
பெண்களால் குல நாசம்

| | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|
| வாத நோய் ← | வாயு | | | பல்லாடன் | | புஜகன் | | | ஈசன் → வீடு தீக்கிரையாகும் |
| பாண்டுநோய் ← | | ருத்ரன் | | | | | | ஆபன் | → செல்வம் தரிக்கும் |
| மெலிவும் அழிவும் ← | | | | | | | ஆப வத்ஸன் | | ஜயந்தன் → வெற்றி |
| திலத்தோறும் களைப்பு ← | அசுரன் | | | | | | | | இந்திரன் → பெருமை |
| நண்பர்களால் திருட்டு ← | | மித்ரன் | | | பிரம்ம பதம் | | | ஆர்யமன் | → புத்ர நாசம் |
| நற்குணம் ← | புஷ்ப தந்தன் | | | | | | | | சத்யன் → நட்பு கெடும் |
| எல்லா நன்மை ← | சுக்ரீவன் | | இந்திரன் | | | | சவிதன் | | → குடும்பத் தலைவன் விலகிடுவான் |
| அமைதி ← | | ஜயன் | | | விவஸ் வான் | | | சவித்ரன் | → விநாசம் (பேரழிவு) |
| | நிருதி | | | கந்தர் வன் | | | விததன் | | அக்னி → குடும்பத் தலைவன் இறப்பான் |

மேற்கு | கிழக்கு

தென் மேற்கு | தென் கிழக்கு

மரணம்
பலிக் அழியும்
விபத்து
எல்லாப் பணிகளும் ஓங்கும்
எல்லாம் அழிந்து மரணம் ஏற்படும்
செல்வம் பெருகிடும்
பதி இறப்பான்
வறுமை

தெற்கு

மூல நூல் : 'வாஸ்து வித்யா' மற்றும் 'பிரஹத் சம்ஹிதா'



MAHARISHI VEDIC UNIVERSITY

His Holiness Maharishi Mahesh Yogi

Founder of Maharishi Vedic University

HEREBY CONFERS THE

HONORARY DOCTORAL DEGREE IN MAHARISHI'S VEDIC SCIENCE

ON

SHRI VAIDYANATHAN GANAPATI STHAPATI

SHRI VAIDYANATHAN GANAPATI STHAPATI



கெரளவ டாக்டர் விருது

கடினம். எனவே, இப்புத்தகத்தில் அதைப்பற்றி விளக்கிக் கூறப் போவதில்லை.

கேள்வி பதில் பகுதி முடிந்ததும், செய்முறை விளக்கப் படங்களுடன் விளக்கும்படி வரைபடத் தளத்திற்கு திரு.ஸ்தபதி அவர்களை அழைத்துச் சென்றனர். அங்கு ஸ்தபதி பக்கம் 286ல் கொடுக்கப்பட்டுள்ள படத்தினை வரைந்து, ஒரு வீடு என்றிருந்தால், அதற்கு எந்தெந்த திசையில் வாசல் இருந்தால் என்னென்ன பலன்கள் உண்டாகும் என்று அழகாகப் படம் வரைந்து விளக்கினார்.

அவ்விளக்கங்களைக் கேட்டு பேராசிரியர்கள் பெருமகிழ்ச்சி அடைந்தனர். உடனே, மஹரிஷி ஸ்ரீ மகேஷ் யோகி அவர்களே, ஸ்தபதியை பல்கலைக்கழக வளாகத்திலேயே அமைந்துள்ள, அவர் வசிக்கும் இல்லத்திற்கு அழைத்துச் சென்று, அது சரியாக அமைக்கப்பட்டிருக்கிறதா என்று கேட்டுத் தெரிந்து கொண்டார். ஸ்தபதியும் பார்த்து விட்டு சில மாற்றங்களைக் கூறினார்.

இவை அனைத்தும் முடிந்த பிறகு, ஸ்தபதியும் அவருடன் வந்திருந்த இருவரும் அவர்கள் தங்கும் இடத்திற்குச் சென்று விட்டனர். பேராசிரியர்கள் கேட்ட கேள்விகளுக்கு ஸ்தபதி அளித்த பதில்களையும், பதில் அளித்த முறையையும் பாராட்டிப் பேசினர் திரு.இராமமூர்த்தி அவர்களும், டாக்டர் சபாரத்தினம் அவர்களும்.

மறுநாள் மறுபடி ஸ்தபதியை முன்தினம் கேள்வி கேட்ட அதே கூடத்திற்கு அழைத்து வந்து, அவரது வாஸ்து விஞ்ஞான

விளக்கத்தைப் பாராட்டிப் பேசி, இத்தகைய ஓர் அபூர்வமான விஞ்ஞானத்தைக் கற்றுத் தேர்ந்தமைக்காக திரு.கணபதிஸ்தபதி அவர்களுக்கு ‘கௌரவ டாக்டர் விருது’ அளிப்பதாகப் பல்கலைக் கழகம் மகிழ்ச்சியுடன் அறிவித்தது. பட்டமளிப்பு விழா மிகவும் பிரம்மாண்டமான முறையில் நடைபெற பல்கலைக்கழகம் ஏற்பாடு செய்திருந்தது. சுமார் 150க்கும் மேற்பட்ட மேல்நாட்டு அறிஞர்கள் சூழ்ந்திருந்த மாபெரும் சபையினில் திரு.கணபதி ஸ்தபதிக்கு டாக்டர் பட்டம் வழங்கப்பட்டது.

இதனதால் பெரிதும் மகிழ்ச்சி அடைந்த திரு.ஸ்தபதி, இதைக் கண்டு மகிழ தன் தந்தை இல்லையே என்று வருத்தமுற்றார். இந்தியாவின் பழமை வாய்ந்த விஞ்ஞானமான வாஸ்து விஞ்ஞானத்திற்காக, இந்தியாவில் உள்ள எந்தப் பல்கலைக் கழகமும் செய்யாத ஒரு கௌரவத்தை, ஹாலந்திலுள்ள, மஹரிஷி வேத பல்கலைக்கழகம் அளித்து விட்டது.

பின்னர், மஹரிஷி ஸ்ரீ மகேஷ் யோகி அவர்கள், ஸ்தபதியிடம், அவரை ஹாலந்திலேயே தங்கி விடும்படி பணித்தார். அவரது ஆராய்ச்சிக்குத் தேவையான சகல வசதிகளையும், பல்கலைக்கழகம் செய்து கொடுக்கும் என்றும், ஆராய்ச்சி தொடர்பாக உலகத்தின் எந்த மூலைக்கு வேண்டுமானாலும் ஸ்தபதி சென்று வரலாம் என்றும், பல்கலைக் கழகத்திலேயே தங்கி, ஆராய்ச்சியைத் தொடரும்படியும் திரு.கணபதி ஸ்தபதியைக் கேட்டுக் கொண்டார்.

அவரது அன்பிலும், அவருக்கு இந்த விஞ்ஞானத்தைப் பரப்புவதில் இருந்த பெரும் ஆர்வத்தையும் கண்டு மகிழ்ந்த ஸ்தபதி, அதற்காக மனமார்ந்த நன்றியைத் தெரிவித்தார். அவர் சென்னையிலே வாழ்ந்து பழகி விட்டதால், புதிய ஊரில் இருப்பதற்குக் கடினமாக இருக்கும் என்று கூறி மஹரிஷி ஸ்ரீ மகேஷ் யோகி அவர்களின் அன்பான வேண்டுகோளைப் பணிவுடன் மறுத்தார். சென்னையிலேயே தங்கி, அவரது ஆராய்ச்சியைத் தொடரப் போவதாகவும் தெரிவித்தார். அதனை ஏற்ற மஹரிஷி ஸ்ரீ மகேஷ் யோகி அவர்கள், அவரது ஆராய்ச்சிக்குத் தேவையான அனைத்து உதவிகளையும் பல்கலைக்கழகம் செய்யத் தயாராய் இருப்பதாகக் கூறினார். ஸ்தபதியார், அவரது அன்பை எண்ணி வியந்தார். மகிழ்ச்சியுடன் தாயகம் திரும்பினார்.

திரு.கணபதி ஸ்தபதி அவர்கள், பல விருதுகளைப் பெற்றிருந்தாலும், அவர் பெரிதும் மதிக்கும் வாஸ்து விஞ்ஞானத்திற்காகக் கிடைக்கப் பெற்ற இந்த கௌரவ டாக்டர் விருதைப் பெரும் பொக்கிஷமாகக் கருதுகிறார் டாக்டர் வை.கணபதி ஸ்தபதி அவர்கள்!

## அருட்செல்வர் திரு.பொள்ளாச்சி மகாலிங்கம் அவர்களுடன்...

திரு.கணபதி ஸ்தபதி அவர்களுக்கு ஐந்திறம் என்ற நூலைப் பற்றிய தகவல்கள் கிடைக்கப் பெற்றவுடன், அதிலுள்ள அரிய விஷயங்களைக் கண்டு வியந்து, அதைப் புத்தகமாக வெளியிடுவதற்கு, அப்போது தமிழக முதல்வராக இருந்த திரு.எம்.ஜி.ஆர். அவர்களை அணுகினார். எம்.ஜி.ஆர். அவர்கள், திரு.பொள்ளாச்சி மகாலிங்கம் அவர்களிடம், ஸ்தபதி குறிப்பிடும் ஐந்திறம் பற்றி ஆய்வு செய்து, அந்நூல் வெளியிடுவதற்குத் தகுதி படைத்ததுதானா என்று ஆய்வு செய்து கூறும்படி பணித்தார்.

அதன்படி திரு.மகாலிங்கம் அவர்கள் திரு.கணபதி ஸ்தபதியை சந்தித்து, ஐந்திறம் பற்றிய தகவல்களைக் கேட்டறிந்தார். இவ்விடம், திரு.பொள்ளாச்சி மகாலிங்கம் அவர்களைப் பற்றி சிறிது கூற வேண்டும்.

அவருக்குச் சிற்பத் துறை மீது அளவு கடந்த ஈடுபாடு. பொள்ளாச்சியில் மாரியம்மன் கோவிலைக் கட்டுவதற்கு திரு.மாரியப்ப ஸ்தபதி மற்றும் திரு.அமிர்தலிங்க ஸ்தபதி ஆகிய இருவரையும் நியமித்தார். இவ்விருவரும் திரு.கணபதி ஸ்தபதி அவர்களின் உறவினர்களே. அழகுறக் கட்டி முடிக்கப்பட்ட அக்கோவில் இன்றும் பொள்ளாச்சி நகருக்கு அழகு சேர்த்துக் கொண்டிருக்கிறது.

அதன் பின்னர், அவருக்குச் சொந்தமான நாச்சிமுத்து பாலிடெக்னிக் வளாகத்தில் விவேகானந்தருக்கு நினைவு

மண்டபம் ஒன்று கட்டப்பட வேண்டும் என்றும், அம்மண்டபத்தில் கருங்கல்லில் சிற்ப வேலைப்பாடுகள் நிறைந்த கலைப் பொருட்கள் பல இருக்க வேண்டும் என்று விரும்பினார். அதற்காக திரு.அமிர்தலிங்க ஸ்தபதி அவர்களை நியமித்தார். அவர்களின் கைவண்ணத்தில் பாலிடெக்னிக் வளாகத்தில் கல்லால் செய்யப்பட்ட சங்கிலி, அழகிய தூண்கள் போன்றவை உருவாகின. சிற்பத் துறை மீது அவருக்குப் பெரும் ஆர்வம் உண்டு. சிற்பத் துறை மட்டுமன்றி, ஏராளமான துறைகளிலும் அவருக்கு ஈடுபாடு அதிகம். அவரை 'பல்துறைச் செம்மல்' என்றே அழைப்பதுண்டு. இப்படிப்பட்ட பல சிறப்புகள் வாய்ந்த திரு.பொள்ளாச்சி மகாலிங்கம் அவர்கள் 'ஐந்திறம்' நூலைப் பற்றிய தகவல்களைத் தெரிந்து கொள்வதற்காக திரு.கணபதி ஸ்தபதி அவர்களை சந்தித்தார்.

'ஐந்திறம்' என்ற நூல்பற்றி சிற்ப இலக்கண நூல்களிலேயே சொல்லப்பட்டிருப்பதை ஸ்தபதி சுட்டிக் காட்டினார். அவரது விளக்கத்தில் திருப்தியுற்ற திரு.மகாலிங்கம் திரு.எம்.ஜி.ஆர். அவர்களிடம் அந்நூல் வெளியிடுவதற்குப் பரிந்துரைத்தார். 1986ம் ஆண்டு நூலும் வெற்றிகரமாக வெளிவந்தது. இவ்வாறு அந்நூல் வெளிவருவதற்குப் பெரிதும். உதவிய திரு.பொள்ளாச்சி மகாலிங்கம் அவர்களை நன்றியுடன் நினைவு கூர்வார் திரு.கணபதி ஸ்தபதி.

1997 ம் ஆண்டு திருவனந்தபுரத்தில் திரு.கணபதி ஸ்தபதி அவர்கள் வாஸ்து விஞ்ஞானம் பற்றிய மாபெரும் கருத்தரங்கம்

ஒன்றை, அவரது சொந்தச் செலவில் நடத்தினார். அக் கருத்தரங்கத்திற்குத் தொடக்கவுரை (Inaugural address) ஆற்றிட திரு.பொள்ளாச்சி மகாலிங்கம் அவர்களை அணுகினார். முதலில் அன்புடன் மறுத்த அவர், பின்னர் ஸ்தபதியின் அன்பான வற்புறுத்தலின் பேரில் வருவதற்கு ஒப்புதல் அளித்தார். நேரமின்மை காரணமாக, தொடக்கவுரை ஆற்றிய பிறகு பத்து நிமிடங்கள்தான் இருக்க முடியும் என்றும் கூறி வருவதற்கு இசைந்தார். வருவதற்கு இசைந்ததையே அவர் பெற்ற பெரும் பேறாக எண்ணி திரு.கணபதி ஸ்தபதியும் மகிழ்ந்தார்.

அதன்படி கருத்தரங்கு தொடங்கும் தினத்தன்று திருவனந்தபுரம் வந்தார் திரு.பொள்ளாச்சி மகாலிங்கம் அவர்கள். வரவேற்புரை ஆற்றிய திரு.கணபதி ஸ்தபதி, வரவேற்புரை மட்டுமன்றி, அவருக்கே உரிய பாணியில், கருத்தரங்கில் இடம் பெறப் போகும் விஞ்ஞானம் பற்றியும் கோடிட்டுக் காட்டி அழகாக விளக்கினார். பின்னர் திரு.பொள்ளாச்சி மகாலிங்கம் தொடக்கவுரை நிகழ்த்தினார். அதற்குப் பிறகு வெறும் பத்து நிமிடங்கள்தான் அங்கு தங்கப் போவதாகக் கூறிய அவர், அக்கருத்தரங்கில் இரண்டு நாட்கள் முழுவதும் தங்கி, அனைத்து உரைகளையும் கேட்டு, திரு.கணபதி ஸ்தபதியார் செய்திருந்த அனைத்து ஏற்பாடுகளையும் பெரிதும் பாராட்டி விட்டு, மகிழ்ச்சியுடன் சென்றார். அது தனக்குக் கிடைத்த மாபெரும் கௌரவமாகக் கருதுகிறார் திரு.கணபதி ஸ்தபதி அவர்கள்.

பழகுவதற்கு மிகவும் எளிமையானவர். 83 வயதைக் கடந்தவர். ஸ்தபதியாரிடம் சகோதர வாஞ்சையுடன், அன்புடன் பழகுபவர். பல துறைகளிலும் கால் பதித்து, வெற்றிகரமாகத் தொழில் நடத்தி வரும் பெரும் தொழிலதிபர். தனது நெருக்கடியான பணிகளுக்கிடையிலும் பல நூல்கள் எழுதி வெளியிடுபவர். விவசாயிகளுக்காக **Kissan world** என்ற பத்திரிகையை நடத்தி வருபவர். அமெரிக்காவின், கலிபோர்னியா மாகாணத்தில் உள்ள **International Society for Investigation of Ancient Civilisation** என்ற நிறுவனத்தின் தலைவராகப் பதவி வகித்து வருபவர்.

திரு.கணபதி ஸ்தபதி அவர்கள் எழுதிய விண்ஞானக் கோவில்கள் என்ற நூலைப்படித்துப் பெரிதும் பாராட்டினார்.





பிறகு, அவர் ஸ்தபதியிடம் அதே நூலை ஆங்கிலத்தில் மொழி பெயர்த்து வெளியிடும்படியும், அப்படிச் செய்தால்தான் அனைவருக்கும் அந்நூல் சென்றடையும் என்றும் அறிவுரை கூறினார்.



திரு.கணபதி ஸ்தபதி திரு.பொள்ளாச்சி மகாலிங்கம் அவர்களுக்கு, ஸ்தாபத்ய வேதம் நூலை வழங்கிய போது

அவர் கலந்து கொள்ளும் அனைத்து விழாக்களுக்கும் திரு.கணபதி ஸ்தபதியைத் தவறாமல் அழைத்து விடுவார். சமீபத்தில் அவரை அவரது இல்லத்தில் சந்தித்த ஸ்தபதியிடம் காசியில் மீனாட்சி அம்மன் கோவில் ஒன்றைப் பெரிதாகக் கட்டவிருப்பதாகவும், அதைத் திரு.கணபதி ஸ்தபதிதான் கட்டித் தரவேண்டும் என்றும் அன்புடன் வேண்டுகோள் விடுத்தார். ஸ்தபதியும் மகிழ்ச்சியுடன் ஒப்புக் கொண்டார்.

கோவிலைக் கட்டித் தர ஒப்புக் கொண்டவருக்கோ 78 வயது! கோவில் கட்டித்தர வேண்டும் என்று அழைப்பு விடுத்தவருக்கோ 83 வயது! அவர்களது வயதுகளைப் போல் பன்மடங்கு உழைப்பு, ஊக்கம், விடாமுயற்சி உடைய இருவரும் இன்னும் பல்லாண்டு இப்பூவுலகில் வாழ்ந்து, மக்கள் சமுதாயத்திற்குப் பல சேவைகள் புரிய எல்லாம் வல்ல இறைவனை வேண்டுவோம்! இருவருமே தற்கால இளைஞர்களுக்கு ஒரு மாபெரும் வழிகாட்டி!!

## விஸ்வகர்ம பெருமக்களுடன்....

திரு.கணபதி ஸ்தபதி அவர்கள் தோன்றிய விஸ்வகர்ம குலத்தைப் பற்றி சிறிது கூறினால், அதைப் பற்றி வாசகர்கள் அறிந்து கொள்ள ஏதுவாக இருக்கும்.

'விஸ்வகர்மர்கள்' என்பவர்கள் வேத காலத்திற்கு முன்பே வாழ்ந்து, வேதங்களிலும் இடம் பெற்றவர்கள். வேதங்களில் அவர்களின் பெயர்கள் மனு, மய, துவஷ்டா, சில்பி, விஸ்வக்ஞர் என்று ஐந்து வகையாக விளங்கின. தற்போது அவர்களை முறையே கருமார், தச்சர், கன்னார், சிற்பியர் மற்றும் தட்டார் என்று வழங்குகிறோம். அவர்கள் செய்யும் தொழிலைத் தொடர்புறுத்தி இப்பெயர்கள் வழங்கப்படுகின்றன.

இவர்களின் முதல்வனை 'விஸ்வகர்மன்' என்றும், ஐம்முகப் பிரம்மன் என்றும் வழங்கினர். இவர்கள் ஐந்து ரிஷிகளின் தலைமையில் கூட்டங்களாக இருந்து கொண்டு, சமூக மேம்பாட்டுப் பணிகளைச் செய்து வந்தனர் என்று தெரிய வருகிறது. ஐந்து ரிஷிகளின் பெயர்கள் ஸானக, ஸனாதன, அபுவனஸ, பிரத்னஸ, சுபர்னஸ என்று வழங்கப்பட்டு, அவர்கள் பஞ்ச ரிஷிகள் என்றும் வழங்கப்பட்டனர்.

விஸ்வகர்மப் பெருமக்களை தமிழ்நாட்டுக் காவியங்களில் நுண்வினைஞர், கைவினைஞர், கம்மியர், கம்மாளர் என்று வெவ்வேறு பெயர்களில் குறிப்பிடப்பட்டிருந்தது. தற்கால பொறியாளர்கள் (Engineers) செய்யும் பணிகள் அனைத்தும் விஸ்வகர்மர்கள் செய்யும் பணியின் கீழ் வருகின்றது. 'கம்மாளர்' என்று வழங்கப்படும் போது, 'கம்' என்றால் ஆகாயம் என்றும்

'ஆளர்' என்றால் அதை ஆள்பவர் என்றும் பொருள் கொண்டு, ஆகாயத்தத்துவத்தை அறிந்த மேலாளர் **(Astro physicians)** என்றும் பொருள் கொள்ளலாம்.

'மனு' என்போர்கள் [கருமார்] இரும்பு உலோகத்தில் பல படைப்புகளை உருவாக்குபவர்கள். விவசாய மண்வெட்டி, கதவுகளுக்கு தாழ்ப்பாள், பூட்டு போன்றவைகளை இவர்கள் செய்வார்கள். இரும்புத் தாதுவை உருக்குவதிலிருந்து, சிறிய பொருளிலிருந்து பெரிய இயந்திரங்கள் வரை அனைத்தையும் செய்வதில் வல்லவர்கள்.

'மய' என்போர்கள் [தச்சர்] மரத்தில் பல்வேறு பணிகளைச் செய்பவர்கள். கதவு, பெட்டி, அலமாரி, இருக்கைகள் போன்றவைகள் இவர்களால் செய்யப்படும்.

'துவஷ்டா' என்போர்கள் [கன்னார்] உலோகத்தில் பணி புரிபவர்கள். பஞ்ச உலோகத்தில் செய்யப்படும் விளக்குகள், கடவுட் படிமங்கள், பாத்திரங்கள் போன்றவைகள் அவற்றில் அடங்கும்.

'சில்பி' என்போர்கள் [சிற்பியர்] கருங்கல்லில் பணிபுரிபவர்கள். கருங்கல்லில் கவின் மிகு சிலைகள், கடவுட் படிமங்கள், மண்டபங்கள், அழகிய வீடுகள், கட்டிடங்கள் மற்றும் ஆலயங்களைக் கட்டுபவர்கள்.

'விஸ்வக்ஞர்' என்போர்கள் [ தட்டார்] ஆபரணங்கள் செய்பவர்கள். தங்கம் மற்றும் வெள்ளி உலோகங்களில் அழகிய ஆபரணங்களை செய்பவர்கள். மனிதர்கள் அணியும் ஆபரணங்கள்

மற்றும் கடவுளுக்கு அணிவிக்கும் ஆபரணங்கள், வெள்ளியில் பாத்திரங்கள் போன்றவைகளைச் செய்பவர்கள்.

இந்த ஐந்து பிரிவினரும் 'விஸ்வகர்மர்' என்ற ஓர் அடைமொழியின் கீழ் வருபவர்கள்தான். இவர்கள் பஞ்சாப் மாகாணத்தில் 'பாஞ்சாலர்கள்' என்றும், கர்நாடகத்தில் 'ஆச்சாரியர்கள்' என்றும், தமிழ்நாட்டில் 'ஸ்தபதிகள்' என்றும், கேரளாவில் 'தச்சன்' என்றும் வழங்கப்படுகிறார்கள். முன்பு வேதவியாசரால் கூறப்பட்டதாகக் கருதும் நான்கு வர்ணங்களிலிருந்தும் இவர்கள் வேறுபட்டவர்கள். அதாவது, இவர்கள் எந்த வர்ணத்திலும் சேராதவர்கள். நம் அன்றாட வாழ்வில் பயன்படுத்தும் பொருட்களில் பெரும்பான்மையானவைகள் இவர்தம் படைப்புகள்தான்.

இத்தகைய பெருமை வாய்ந்த விஸ்வகர்ம குலத்தில் உதித்த மாமனிதர் திரு.வை.கணபதி ஸ்தபதி அவர்கள். தாம் அந்த குலத்தில் பிறந்தமைக்காக மிகவும் பெருமைப்படுபவர். அந்த குலத்தின் முன்னேற்றத்திற்காக அல்லும் பகலும் பாடுபடுபவர். எப்பொழுதும் அந்த நினைப்பாகவே இருப்பவர். தமிழ்நாடு விஸ்வகர்ம சேவா சங்கத்தின் தலைவராக பதவி வகித்து வருகிறார். டாக்டர் கலைஞர் திரு.கருணாநிதி அவர்கள் முதல்வராக இருந்த சமயத்தில் 2000ம் ஆண்டு கைவினைஞர்கள் நல வாரியம் ஒன்றை ஏற்படுத்தி அதன் விசேட உறுப்பினராக திரு. கணபதி ஸ்தபதி அவர்களை நியமித்து, கைவினைஞர்களுக்குத் தேவையான வசதிகளை செய்து தரும்படி பணித்தார்.

விஸ்வகர்மர்கள் நலத்திற்காக அவர்களுக்குத் தேவையான அடிப்படை வசதிகளை, அரசாங்கத்திற்கு விண்ணப்பங்கள் அனுப்புவதில் சளைக்கவே மாட்டார். முன்னாள் பாரதப் பிரதமர் திரு.வாஜ்பாயிக்கும், திருமதி சோனியா காந்திக்கும் விண்ணப்பங்கள் அனுப்பி, விஸ்வகர்மர்கள் சங்கத்தில் உரையாட எப்பொழுது எங்கு அழைத்தாலும் தயங்காமல் ஒப்புக் கொண்டு, அவர்களுக்குத் தேவையான கருத்துக்களையும், ஆலோசனை களையும் வழங்குவார். சமீபத்தில் புது டெல்லியில் நடைபெற்ற ஒரு பொதுக்கூட்டத்தில் கூட கைவினைஞர்களின் முன்னேற்றத்திற்காக செய்ய வேண்டிய முக்கிய கடமைகளைப் பற்றி விவரித்து விட்டு சென்னை திரும்பினார். இவ்விதம் அல்லும் பகலும் அதே சிந்தனையில் இருப்பவர்.

இந்த அத்தியாயத்தில் திரு.கணபதி ஸ்தபதியுடன் ஆரம்ப நாட்களில் இருந்து தற்சமயம் வரை கூடவே இருந்து உதவி வரும் சில விஸ்வகர்ம பெருமக்களைப் பற்றிப் பார்ப்போம்.

திரு.கணபதி ஸ்தபதி பழனி தேவஸ்தான ஸ்தபதியாக இருந்த போது அவரை வந்தடைந்து இன்று வரை அவரது அன்பிற்கு பாத்திரமாக இருப்பவர் திரு.மாணிக்கம் ஆச்சாரி அவர்கள். இவர் மாமல்லபுரத்தில் வசிப்பவர். சிற்பப் பணிகளில் வல்லவர்.



திரு. மாணிக்கம் ஆச்சாரி திரு.கணபதி ஸ்தபதியுடன்

தமிழக முதல்வர் டாக்டர் கலைஞர் திரு.மு.கருணாநிதி அவர்களின் ஆலோ சனையின் பேரில் பூம்புகாரில் சிற்பக் கலைக்கூடம் அமையப் பெற்ற போது ஆளுயரக் கண்ணகி சிலையை அமைத்தவர். மிகவும் அமைதியானவர். அதிர்ந்து பேசத் தெரியாதவர். திரு.கணபதி ஸ்தபதியிடம் மிகவும் அன்பும், மரியாதையும் உடையவர்.

இப்போதும் ஸ்தபதி செய்து வரும் கோவில் பணிகளுக்கு உரிய சில சிற்பங்களை அவரை செதுக்கச் சொல்லி பணிப்பதுண்டு. தற்சமயம் அவரது மகன் திரு.பழனிச்சாமி ஸ்தபதி என்பவர் மாமல்லபுரம் அரசு சிற்பம் மற்றும் கட்டிடக் கலைக் கல்லூரியில் B.Sc. (Temple Architecture) படித்து விட்டு ஸ்தபதியின் அலுவலகத்தில் மூத்த ஸ்தபதிகளில் ஒருவராகப் பணிபுரிகிறார். கோவில் நிர்மாணப் பணிகளில் பங்கேற்று வருகிறார்.



திரு. பழனிச்சாமி ஸ்தபதி குடும்பத்தினருடன் திரு.கணபதி ஸ்தபதி மற்றும் திருமதி தெக்ஷிணாவதி

அவரைப் போலவே திரு. கணபதி ஸ்தபதி அவர்களுடன் நெடுங் காலமாக [ஏறக்குறைய 35 ஆண்டுகளாக] பழகி, அவரிடம் பயிற்சி பெற்று, அவருடைய மகனைப் போலப் பாசமுடன் பழகி வருபவர் திரு.பெருமாள் ஸ்தபதி அவர்கள். ஓவியமும், சிற்பமும் அவருக்குக் கை வந்த கலையாகும்.



திரு. பெருமாள் ஸ்தபதி
திரு.கணபதி ஸ்தபதியுடன்

மாமல்லபுரத்தில் வசிப்பவர். திரு.கணபதி ஸ்தபதி அவர்கள் கட்டும் அனைத்து கோவில்களின் சிற்ப வேலைகளும் இவரது மேற்பார்வையில்தான் நடைபெறும்.

இவரது சிற்ப வேலைப்பாடுகள் மிகவும் அழகுற விளங்கும். சிற்பப் பணிகளுக்காக, பாரத ஜனாதிபதி டாக்டர் அப்துல் கலாம் அவர்களிடம் 'சில்பக்ஞ' என்ற பட்டம் பெற்றவர். ஸ்தபதியை தந்தைக்கும் மேலான பரிவுடனும், பாசத்துடனும் பாவித்துப் பழகி வருபவர். தற்சமயம் அவரது மகன் திரு.மல்லை ராஜன் என்பவரும் B.Tech. (Temple Architecture) படித்து விட்டு ஸ்தபதியின் அலுவலகத்திலேயே பணி புரிகிறார்.

மற்றொரு மூத்த ஸ்தபதி திரு.சண்முகம் ஸ்தபதி அவர்கள். இவர் திரு.கணபதி ஸ்தபதியாரின் துணைவியாரின் மூத்த சகோதரி மகனாவார். சிறுவயதிலேயே [ஒன்பது வயதில்] ஸ்தபதியிடம் சிற்பக் கலை பயில வந்தவர். குருகுலம் போலப் பயின்று, பிறகு மாமல்லபுரம் சிற்பக் கல்லூரியிலும் பயின்றவர்.



திரு. சண்முகம் ஸ்தபதி
திரு.கணபதி ஸ்தபதியுடன்

ஸ்தபதி கன்னியா குமரியில் 133 அடி உயர திருவள்ளுவர் சிலை அமைக்கும் போது, அங்கு முழுப் பொறுப்பையும் ஏற்று செவ்வனே நடத்தியவர். காரைக்குடியில் தமிழ்த்தாய்க் கோவில், நகரத்தார் கோவில்கள் பலவற்றை வடிவமைத்திருக்கிறார். தற்சமயம் அமெரிக்காவின் ஹவாய் தீவிலுள்ள சன்மார்க இறைவன் திருக்கோவில் பணிகளுக்காக அங்கேயே தங்கி உள்ளார். அதிர்ந்து பேசாத அன்பான மனிதர்.

இவரது மகன் திரு.சந்தான கிருஷ்ணன் என்பவர் **B.Sc. (Temple Architecture), M.A. Sanskrit** படித்துவிட்டு ஸ்தபதியின் அலுவலகத்தில் சிற்பியாகப் பணிபுரிகிறார். ஸ்தபதியாரின் கலைநூல் ஆராய்ச்சி செய்திடும் பணியில் உதவி வருகிறார். ஆராய்ச்சிப் பணிகளில் ஸ்தபதியாருக்கு வலது கரமாகத் திகழ்பவர் இவரே.

திரு.சந்தான கிருஷ்ணனின் மனைவியார் திருமதி கிருத்திகா என்பவர் **B.Arch.** படித்து விட்டு, ஸ்தபதியின்



திரு. சந்தான கிருஷ்ணன், திருமதி கிருத்திகா
திரு.கணபதி ஸ்தபதியுடன்

அலுவலகத்தில் கட்டிடக் கலை வல்லுநராகவும், ஆராய்ச்சி யாளராகவும் பணிபுரிகிறார். ஸ்தபதியார் வாஸ்து முறைப்படி வடிவமைக்கும் வீடுகளுக்குத் தேவையான வரைபடங்களை உருவாக்குவதும், பின்னர் அவ்வீடுகளைக் கவினுற அழகுணர்ச்சியுடன் அலங்கரிப்பதும் இவரது பொறுப்பு. மேலும், ஸ்தபதியார் நடத்தும் பட்டறைகளில் வாஸ்து மரபு தழுவிய கட்டிடக்கலை பற்றிய வகுப்புகள் எடுப்பதும் இவரே. இருவரும் ஸ்தபதியாரின் அன்புக்குப் பாத்திரமானவர்கள்.

திரு.கணபதி ஸ்தபதியாரின் இளைய சகோதரர் திரு. இராமச்சந்திர ஸ்தபதியாரின் மகன்கள் இருவரும் அவரது அலுவலகத்திலேயே பணிபுரிகின்றனர். மூத்தமகன் திரு.செல்வ நாதன் என்பவர் B.Sc. (Temple Architecture) படித்து விட்டு ஸ்தபதியார் வடிவமைக்கும் கோவில்களின் கட்டுமானப் பணிகள் அனைத்தையும் மேற்பார்வையிட்டு வருகிறார். ஸ்தபதியார் அமெரிக்காவில் வடிவமைத்த பெரும்பான்மையான கோவில்கள் இவரது மேற்பார்வை யில் நடைபெற்றவைதான். அமைதியான,



திரு. செல்வநாதன் மற்றும் திருமதி பொன்னி, திரு. கணபதி ஸ்தபதி மற்றும் அவர்தம் துணைவியாருடன்

பண்பான மனிதர். ஸ்தபதியாரிடம் மிகுந்த மதிப்பும், மரியாதையும் வைத்திருப்பவர்.



திரு. சண்முகவேலன் மற்றும் திருமதி காயத்ரி, திரு. கணபதி ஸ்தபதி மற்றும் அவர்தம் துணைவியாருடன்

இளைய மகன் திரு.சண்முக வேலன் என்பவர் **B.E. (Civil Engg.)** படித்து விட்டு ஸ்தபதியார் வாஸ்து முறைப்படி கட்டித் தரும் வீடுகளைக் கட்டும் பணியைத் திறம்படச் செய்வதில் வல்லவர். இந்தியாவில் மட்டுமன்றி, இலங்கை போன்ற அண்டை நாடுகளிலும் இவர் கட்டிடப் பணிகளுக்காகச் சென்று, அங்கும் நமது பாரம்பரியக் கலையான வாஸ்து விஞ்ஞான முறைப்படி கட்டிடங் களைக் கட்டித் தருபவர்.

இவ்வாறு திரு.கணபதி ஸ்தபதியார் அவரது குலமான விஸ்வகர்ம குலத்தின் தொழிலைப் பேணிப் பாதுகாத்து, அத்தொழில் தொடர்பான நவீன படிப்பையும் ஊக்குவித்து, அதன்படி படித்தவர் களுக்கு தனது அலுவலகத்திலேயே பணி ஏற்படுத்திக் கொடுத்து, அனைவரையும் அரவணைத்துச் செல்வதில் வல்லவர். இதன் மூலம் அவர்களது பாரம்பரிமும்

பாதுகாக்கப்படுகிறது. நமது நாட்டிற்குப் பல காலம் நீடு நிலைத்து நிற்கக் கூடிய கலைப் பொக்கிஷங்களும் கிடைக்கின்றன.



வித்வான் திருக்குறள் திரு. சுப்பையா திரு.கணபதி ஸ்தபதியுடன்

இவையல்லாது வெவ்வேறு ஊர்களிலும் உள்ள சில விஸ்வகர்மர்களும் திரு.கணபதி ஸ்தபதியுடன் நெருக்கமாகப் பழகி, அவருடைய அன்பிற்குப் பாத்திரமானவர்கள். நாகர்கோவிலைச் சேர்ந்த வித்வான் திருக்குறள் சுப்பையா என்பவர் அவர்களில் ஒருவர். இவர் விஸ்கர்ம மக்கள் சங்கத்தின் மாநில செயலாளர். 'வி. கே. செய்தி மலர்' என்ற பத்திரிகையை நடத்தி வருபவர்.

இதன் மூலம் விஸ்வகர்ம மக்களின் கருத்துக்களையும், தேவைகளையும் மக்களுக்கு எடுத்துச் சொல்பவர். விஸ்வகர்மப் பெருமக்களை ஒன்று திரட்டி, திரு. ஸ்தபதியாரை அழைத்து, அவரைப் பேச வைத்து, அதன் மூலம் அவர்களது குலத்தின் மகிமையை மக்களுக்கு உணரும்படி செய்பவர்.



திரு. சேகர் திரு.கணபதி ஸ்தபதியுடன்

குறிப்பிட்டுச் சொல்ல வேண்டிய மற்றொருவர் பாரத் ஜோதி திரு. சேகர் என்பவர். இவர் சிதம்பரத்தில் வசிப்பவர். அழகிய நகைகள் செய்வதில் வல்லவர். ஸ்தபதியாரிடம் மிகுந்த அன்பும், மதிப்பும் கொண்டவர். சிதம்பரம் மாவட்ட விஸ்வகர்ம சங்கத் தலைவராக இருப்பவர்.

ஸ்தபதியாரின் துணை கொண்டு, அவரது மேலான ஆலோசனைகளை சிரமேற் கொண்டு, 'விஸ்வகர்மா பாலிடெக்னிக்' என்ற தொழில் நுட்பக் கூடத்தைத் தொடங்கி அங்கு சிற்பம், ஓவியம், சுதை வேலைப்பாடு, தச்சு வேலை, ஆபரணங்கள் செய்தல் போன்றவற்றில் மாணவர்களுப் பயிற்சி அளிக்கும் தனியார் நிறுவனமாக விளங்குவதற்கு வேண்டிய ஏற்பாடுகளை செய்து வருகிறார். அரசு சிற்பக் கல்லூரியைத் தவிர இத் தொழிலைக் கற்பிப்பதற்கு வேறு எந்த நிறுவனமும் இல்லை என்பது குறிப்பிடத்தக்கது. விரைவில் இத்தொழில் நுட்பக் கூடம் தொடங்கப் பெற்றால் அது மக்களுக்குப் பெரிதும் பயன்படும் என்பதில் ஐயமில்லை.

இதற்காகப் பெரும் முயற்சி எடுத்து வரும் சிதம்பரம் திரு.சேகர் அவர்களின் சாதனை போற்றத்தக்கது. இவர் திரு.கணபதி ஸ்தபதி அவர்களை கலந்து கொள்ளாமல் எந்த விழாவையும் வைத்துக் கொள்வதில்லை. திருமணம் போன்ற குடும்ப விழாக்களுக்கு ஸ்தபதி தலைமை தாங்க வேண்டும் என்பதில் மிகவும் உறுதியாய் இருப்பார். அவரது சௌகரியமான தேதிகளைக் கேட்டுக் கொண்டுதான் விழா தேதியையே முடிவு செய்யும் அளவிற்கு அவர் மேல் அதீதமான அன்புடையவர்.

இவர்களைப் போலவே மற்றொரு முக்கியமான விஸ்வகர்மர் சென்னை போரூரைச் சேர்ந்த திரு.அப்பர் இலட்சுமணன் என்பவர். இவர் தச்சு வேலைப்பாட்டில் விற்பன்னர். சென்னையில் மரத் தொழிற்கூடம் ஒன்றை நடத்தி வருகிறார். விஸ்வகர்மா மக்களிடையே விழிப்புணர்வும், சுயமரியாதையும் மட்டுமே தற்போதைய தேவை என்ற எண்ணம் கொண்ட இவர் இதற்காக ஒவ்வொரு ஞாயிற்றுக் கிழமையும் ஒவ்வொரு பகுதியாகச் சென்று கூட்டங்கள் நடத்தி விழிப்புணர்வு ஏற்படுத்தி வருகிறார். இவருடைய செயல்களையும், இவரது துடிப்பையும் கண்ணுற்ற திரு.கணபதி ஸ்தபதி அவர்கள், அவர் கலந்து கொள்ளும் கூட்டங்களில் எல்லாம் திரு.அப்பர் இலட்சுமணனைப் பற்றிப் பெருமையாகப் பேசி வருகிறார். அவருக்குப் 'பெருந்தச்சன்' என்ற பட்டத்தை அளித்தார்.

வாஸ்து மற்றும் ஆயாதி கணிதம் ஆகியவற்றை ஸ்தபதியிடம் கற்றுக் கொள்வதில் பெரும் ஆர்வம் காட்டுபவர். அவர் மட்டுமல்லாமல், அவரது தொழிற்கூடத்தில் பணிபுரியும் அனைவரையும் ஞாயிற்றுக் கிழமைகளில் ஸ்தபதியாரின் இல்லத்திற்கு அழைத்து வந்து, அவர்களுக்கு வகுப்பு எடுக்கும்படி பணிப்பார். ஸ்தபதியாரும், அவர்களுக்காக, ஆங்கிலக் கலப்பு இல்லாத எளிய தமிழில் அழகாக பாடம்



திரு. அப்பர் இலட்சுமணன்
திரு.கணபதி ஸ்தபதியுடன்

நடத்துவார். இதன் மூலம் அனைவருக்கும் இக்கலை பரவுவதில் ஸ்தபதியாருக்குப் பெரும் மகிழ்ச்சி. அதற்குக் காரணமான திரு.அப்பர் இலட்சுமணன் மீது அவருக்குத் தனிப்பட்டதொரு பிரியம்.

"Artisans Federation of India" என்ற அமைப்பு, 24.04.2005 அன்று புது டெல்லியில் நடத்திய மாநாட்டில் திரு.கணபதி ஸ்தபதி அவர்கள் சிறப்பு விருந்தினராக அழைக்கப்பட்டு, கைவினைஞர்கள் பற்றிப் பேச வாய்ப்பு அளித்தனர். அக்கூட்டத்தில் கலந்து கொள்வதற்காக புதுடெல்லி சென்ற ஸ்தபதி, அவருடன் திரு.அப்பர் இலட்சுமணன் அவர்களையும் உடன் அழைத்துச் சென்று, அக்கூட்டத்தில் அவரைப் பெருமையுடன் அறிமுகப் படுத்தினார்.

அதுமட்டுமல்ல, புது டெல்லியில் தங்கியிருந்த போது, ஸ்தபதியார், பாரத ஜனாதிபதி டாக்டர் அப்துல் கலாம் அவர்களைச் சந்தித்துப் பேசி, அவரிடம் சமீபத்தில் ஸ்தபதி எழுதியுள்ள சில புத்தகங்களை அளித்து, அவரைப் படித்துப் பார்க்கும்படி பணித்து விட்டு வந்தார். அப்போது திரு.அப்பர் இலட்சுமணன் அவர்களும் பாரத ஜனாதிபதியைச் சந்திப்பதற்கு ஆவன செய்தார் திரு.கணபதி ஸ்தபதி அவர்கள். திரு.அப்பர் இலட்சுமணன் அவர்கள், அவருக்குக் கிடைத்த அந்த வாய்ப்பினால் மிகுந்த மகிழ்ச்சி அடைந்தார்.

குடியரசுத் தலைவர் டாக்டர் அப்துல் கலாம் அவர்களுடன் திரு.கணபதி ஸ்தபதி அவர்களும், திரு.அப்பர் இலட்சுமணன்

அவர்களும் உரையாடிக் கொண்டிருந்த அந்த இனிமையான மாலைப் பொழுதில் நடந்த உரையாடலின் சுவையான சிறு தொகுப்பு கீழே வழங்கப்பட்டுள்ளது.

குடியரசுத்தலைவர் அவர்கள், ஸ்தபதியிடம், சமீபத்தில் உலகைத்தையே உலுக்கிய 'சுனாமி' என்ற கடற்கோள் நிகழ்வினால், கன்னியாகுமரியில் அமைந்துள்ள, ஸ்தபதி வடிவமைத்த 133 அடி உயர அய்யன் திருவள்ளுவர் சிலை, எந்தவித பாதிப்பும் இன்றி தப்பியது எங்ஙனம் என்று வினவினார்.

தஞ்சையில் உள்ள பிரகதீஸ்வரர் ஆலய விமானம் ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்பு கட்டப்பட்டாலும், இப்போதும் அழகாக நிமிர்ந்து நிற்பதற்குக் காரணம், அது கட்டப்பட்ட தொழில்நுட்ப முறைதான். அவ்விமானத்தைக் கட்டிய குஞ்சரமல்லன் இராஜஇராஜப் பெருந்தச்சன் வழி வந்த திரு.கணபதி ஸ்தபதியாரும் அதே தொழில் நுட்ப முறையைப் பின்பற்றி திருவள்ளுவர் சிலையை நிறுவியதால்தான் அது உறுதியாக, சுனாமியினாலும் பாதிப்பு ஏற்படாத வண்ணம் உள்ளது என்பதையும் திரு.கணபதி ஸ்தபதி அவர்கள் விளக்கிக் கூறினார்.

அதைக் கேட்டு வியந்த குடியரசுத் தலைவர் அவர்கள், ஸ்தபதியிடம், தஞ்சை பிரகதீஸ்வரர் கோவிலை அவர் பார்க்க விரும்புவதாகவும், அதிலுள்ள தொழில் நுட்ப இரகசியங்களை திரு.கணபதி ஸ்தபதியுடன் பகிர்ந்து கொண்டே, அவருடன் அக்கோவிலைப் பார்க்க விரும்புவதாகவும், அதற்குண்டான நாளும், நேரமும் பின்னர் குறிப்பிடப்படும் என்றும், ஸ்தபதியாருக்கு அது சௌகரியப்படுமா என்றும் கேட்டார்.

அதைக் கேட்டு மகிழ்ந்த திரு.கணபதி ஸ்தபதி அவர்கள், அவ்வாறு ஒரு வாய்ப்பு கிடைத்தால், அது அவருக்குக் கிடைத்த பெரும் கொடுப்பினை என்றும், எப்பொழுது வேண்டுமானாலும் தயாராக இருப்பதாகவும் மகிழ்ச்சியுடன் கூறினார்.

இவ்வாறு, நாட்டின் முதல் குடிமகன் மற்றும் நாட்டின் முதன்தையான சிற்பக் கலை வித்தகர் ஆகிய இருவருடனும் அந்த இனிமையான மாலைப் பொழுது கழிந்தது அவர் வாழ்நாளில் பெற்ற பெரும் பேறு என்று திரு.அப்பர் இலட்சுமணன் அவர்கள் கூறினார்.

'தச்சர்களின் கையேடு' என்ற சிறுநூலை அவரே எழுதி வெளியிட்டார் தச்சர்களுக்குப் பயன் அளிக்கும் அந்த நூல் மூன்றே மாதத்தில் 2000 பிரதிகள் விற்றுத் தீர்ந்தன. தச்சர்களை வெளி உலகுக்கு அறிமுகம் செய்விக்கும் பொருட்டு, அவர்களின் விலாசங்கள் அடங்கிய, 'தச்சர்களின் டைரி' என்ற தொகுப்பு நூலை வெளியிட்டுள்ளார்.

வாஸ்து விஞ்ஞான ஆய்வுத்துறையில் பணி செய்திடும் இரண்டு பெண்மணிகளைப் பற்றி

திரு.கணபதி ஸ்தபதி அவர்கள், வாஸ்து விஞ்ஞான ஆராய்ச்சி தொடர்பாக, 'வாஸ்து வேத ஆய்வு நிறுவனம்' என்ற நிறுவனத்தை 1990ம் ஆண்டிலேயே, அவர் மாமல்லபுரத்தில் வசிக்கும் காலத்திலேயே தொடங்கினார். அந்நிறுவனத்திலிருந்து 'வாஸ்து புருஷா' என்ற ஆராய்ச்சி இதழை வருடம் இருமுறை

வெளிவரும் இதழாக வெளியிட்டு வருகிறார். இந்த இதழ் ஆங்கிலத்தில் வெளிவருகிறது.

இந்த இதழை கவனிப்பதற்கும், எழுதிய கட்டுரைகளை சரிபார்ப்பதற்கும், வாஸ்து விஞ்ஞானத் தொடர்பான மேல்நிலை ஆய்வுகளை உலகம் முழுவதும் பரப்புவதற்கும், அவரது தம்பி திரு.இராமசந்திர ஸ்தபதியின் மருமகள் திருமதி. காயத்ரி சண்முகவேலன் அவர்களைப் பணித்துள்ளார். இந்த அம்மையார், **B.Sc.(Agriculture)** படித்தவர். ஆங்கில மொழியில் மிகுந்த புலமை பெற்றவர். ஸ்தபதியார் நடத்திய பட்டறை **(Workshop on Vaastu Science and Technology)** ஒன்றில் அவரை அமரச் செய்து, வாஸ்து விஞ்ஞானம் தொடர்பான பல செய்திகளை அவருக்கும் கற்றுக் கொடுத்திருக்கிறார். ஸ்தபதியாரின் வாஸ்து விஞ்ஞானம் உலகம் முழுவதும் பரவுவதற்கு, திருமதி. காயத்ரி சண்முகவேலன் அவர்கள் ஸ்தபதியாரின் வலது கரமாக விளங்குகிறார் என்றால் அது மிகையல்ல.

இவரது கணவர் திரு.சண்முகவேலன் பொறியியல் படித்து விட்டு, ஸ்தபதியார் வாஸ்து முறைப்படி கட்டும் வீடுகளின் கட்டுமானப் பணிகளைக் கவனித்து வருகிறார் என்பது முன்பே கூறப்பட்டுள்ளது. இத்தம்பதிகளுக்கு இரண்டு மகன்கள். முதல் மகனுக்கு ‘புருஷோத்தமன்’ என்று பெயர். இரண்டாவது மகனுக்கு ‘மானசாரன்’ என்று ஸ்தபதியார் பெயர் சூட்டி மகிழ்ந்தார்.

திரு.கணபதி ஸ்தபதியாரின் சகோதரர் திரு.இராமச்சந்திர ஸ்தபதி அவர்களின் மூத்தமகன் திரு.செல்வநாதன் என்பவரைப் பற்றி முன்பே கூறப்பட்டுள்ளது. இவர் ஸ்தபதியாரின் கோவில் பணிகளில் பொறுப்பேற்று நடத்தி வருகிறார். இவரது மனைவி திருமதி பொன்னி செல்வநாதன் என்பவர், ஸ்தபதியாரது அலுவலகத்தில் பணி புரிந்தாலும், அவரும் வாஸ்து விஞ்ஞானத் துறையில் ஆர்வம் உடையவர். அந்த ஆர்வம் காரணமாக, 'வைசம்பாயனம்' என்ற மயன் வரலாற்று நூலை எழுதுவதில் மிகுந்த ஈடுபாடு காட்டியவர். இவருக்கும் இரண்டு மகன்கள். இருவரையும் மரபு சிற்பக் கலைப் பணியில் ஈடுபட, சம்ஸ்கிருத மொழியைக் கற்றுத் தேற வழி வகை செய்திருக்கிறார் திரு.கணபதி ஸ்தபதி அவர்கள். இரண்டு குடும்பங்களையும் ஒரு சேர சுருக்கிச் சொல்ல வேண்டுமானால், ஆய்வுக் குடும்பமாக விளங்கி வருகிறது எனலாம்.

ஸ்தபதியார், அடிக்கடி, 'கல் தோன்றி மண் தோன்றாக் காலத்து, முன் தோன்றிய மூத்தகுடி நாங்கள்' என்று கூறுவார். அவ்வாறு மிகப் பழமை வாய்ந்த ஒரு குலத்தில் அவர் தோன்றியமைக்காகப் பெருமைப்படும் திரு.கணபதி ஸ்தபதி அவர்கள், விஸ்வகர்ம மக்களின் நலனைக் குறிக்கோளாகக் கொண்டு, அவர்தம் முன்னேற்றத்திற்காக அல்லும், பகலும் சிந்தனை செய்து கொண்டு, முக்கியமானவர்கள் எவரையாவது பார்க்கச் சென்றால், அவர்களிடம் அவரது சமூகத்தை உயர்த்திட ஒரு மனுவைக் கண்டிப்பாகக் கொடுப்பார்.

திரு. வாஜ்பாயி, திரு.முரளி மனோகர் ஜோஷி, திருமதி சோனியா காந்தி, திரு.ஜெயபால் ரெட்டி ஆகியோர்களிடம் இவ்வாறு மனுக்களை அளித்துள்ளார். ஒரு மாபெரும் கலைஞனை, சிற்பத்துறை வித்தகரை, தனது சமுதாயத்திற்காகப் பாடுபடும் ஓர் அற்புதமான மனிதரை அடைந்ததற்காக விஸ்வகர்ம குலம் என்றென்றும், எப்பொழுதும் பெருமைப்பட வேண்டும் அல்லவா? அதை உணர்ந்துதான், அமெரிக்காவின், வாஷிங்டன் DC,ல் வாழும் இந்திய மக்கள் விஸ்வகர்ம ஜகத்குரு என்ற பட்டத்தை அவருக்குப் பெருமையுடன் வழங்கி மகிழ்ந்தார்களோ?

## திருமதி தெக்ஷிணாவதி
## (ஸ்தபதியாரின் வாழ்க்கைத் துணைவி)..

''மனைவி அமைவதெல்லாம் இறைவன் கொடுத்த வரம்'' என்று ஒரு சொல்லடை வழக்கத்தில் உண்டு. அந்த இறைவனையே கண்ணால் காணும் உருவமாய்ப் படைத்திடும் திரு.கணபதி ஸ்தபதிக்கு மனைவியை அளிக்க இறைவன் நல்ல வரமாகக் கொடுப்பதில் தயங்குவானா என்ன?

அவருக்கு இல்வாழ்க்கைத் துணைவியாக 28.04.1952 அன்று அவரது வாழ்க்கையில் அடி எடுத்து வைத்த திருமதி தெக்ஷிணாவதி அம்மையார் அன்றிலிருந்து இன்று வரை, ஏறக்குறைய ஐம்பத்தி மூன்று ஆண்டுகள், அவருடன் மனமொப்பி, வாழ்க்கையின் ஏற்றத்திலும், இறக்கத்திலும் முகங் கோணாமல் பங்கு கொண்டு, நல்ல மனைவியாக விளங்கி வருகிறார். அது மட்டுமல்ல; ஸ்தபதியாரின் அலுவலகத்தில் பணிபுரியும் அனைவருக்கும் அவர் அன்பான, பாசமான ''அம்மா.''

தேவகோட்டை என்னும் ஊரில் நகை செய்யும் திரு.ஆண்டனாச்சாரி என்பவரின் கடைசி மகளாகப் பிறந்த தெக்ஷிணாவதிக்கு அவர் பிறந்து, சிறுமியாக வளர்ந்து, மங்கையாக மலர்ந்து, பருவத்தில் கணபதி என்னும் ஆண்மகனைத் திருமணம் செய்து கொள்ளும் வரையில், தனது கணவன் பின்னாளில் ஒரு புகழ் பெற்ற கலைஞனாக விளங்கப் போகிறார் என்பது தெரியாது. தெரியாத அப்போதும் சரி, எல்லாப் புகழும் தற்போது கணவன் அடைந்து விட்டதைத் தெரிந்து கொண்ட இப்போதும் சரி,

அவ்வம்மையார் சிறிதும் கர்வம் அடையாத, அன்பே உருவான சிறந்த பெண்மணி!

திரு.கணபதி ஸ்தபதியாரின் சகோதரர் மக்களும், அம்மையாரின் மூத்த சகோதரியின் மக்களும், அலுவலகத்தில் பணிபுரியும் அனைத்து மக்களும் ஓர் ஆறுதலைத் தேடி வருவது அந்தத் தாயிடம்தான்! எல்லோரையும் தனது சொந்த மக்களாக பாவித்து, கனிவான வார்த்தைகளால் ஆறதல் கூறுவது அவரது தனிப்பண்பு! இல்லை என்று யார் கேட்டாலும், எதைக் கேட்டாலும் உடனே அதைக் கொடுத்து விடுவது அவரது உயரிய பண்பு.

கல்லூரியில் முதல்வராக திரு.கணபதி ஸ்தபதி அவர்கள் பணியாற்றிய 27 ஆண்டுகளில் இரண்டு மடங்காக உழைத்து, சுமார் 54 ஆண்டு காலப் பணியைச் செய்திருக்கிறார் என்றால், அதற்குப் பெரிதும் ஒத்துழைப்பு கொடுத்தது அவரது மனைவியார்தான் என்பது மறுக்க முடியாத உண்மை. ஸ்தபதியாருக்கு எந்தவித குடும்பப் பொறுப்பு பற்றிய சுமையையும் அளிக்காமல், மொத்த சுமையையும் அவரே ஏற்று, ஸ்தபதியாரை அவரது பணிகளைச் செய்ய அனுமதித்ததே அவரது வெற்றிக்குக் காரணம் எனலாம்.

கல்லூரி முதல்வராக இருந்த பொழுதுதான் இந்த நிலை என்றில்லை. இப்போதும், இன்றைய தினம் வரை, ஸ்தபதியாரின் அலுவலகப் பணி, ஆராய்ச்சிப் பணி என்று மும்முரமாக இருப்பவரை, குடும்பப் பொறுப்பு முழுவதும் திருமதி தெக்ஷிணாவதி அம்மாள் அவர்களுடையதுதான். அதன் விளைவு,

இன்று கூட திரு.கணபதி ஸ்தபதியாருக்கு, லௌகீகமாக எந்த செய்திகளும் தெரியாது, தற்போதைய விலைவாசி பற்றி எதுவும் தெரியாது. இவ்வளவு ஏன், அவரது தேவைகளைப் பற்றி கூட அவருக்குத் தெரியாது. எல்லாவற்றையும் திருமதி தெக்ஷிணாவதி அம்மையார்தான் கவனித்துக் கொள்வார். அதற்காகப் பெருமையும், மகிழ்ச்சியும் அடைவார் அவர்.

கல்லூரிப் பணியிலிருந்து ஓய்வு பெற்றதும், திரு.கணபதி ஸ்தபதி தொடங்கிய 'வாஸ்து வேத ஆய்வு நிறுவனம்' நடத்தும் வாஸ்து விஞ்ஞானத் தொழிற் பட்டறைகளில் கற்க வரும் வெளிநாட்டுப் பெண்மணிகளும் கூட திருமதி தெக்ஷிணாவதி அம்மையாரிடம் பாசத்தைப் பொழிவர். காரணம், அவரது கள்ளங்கபடமற்ற அன்புதான். இந்தியாவிற்கு வரும் போது அவர்கள் நாட்டு கலாச்சாரப்படி உடை அணிந்து வரும் அப்பெண்மணிகள், படித்து முடித்து விட்டு, அவர்கள் நாடு செல்லும் போது முற்றிலும் இந்தியப் பெண்மணியாக, சேலை உடுத்தி, பூ வைத்துக் கொண்டு, அழகாக திரும்புவர். அவர்களுக்கு சேலை வாங்கிக் கொடுப்பது, குங்குமம் வைத்து விடுவது போன்ற அனைத்து பணிகளையும் செய்து, அவர்களை அன்பு மழையில் மூழ்க வைத்து விடுவார் திருமதி தெக்ஷிணாவதி அம்மையார் அவர்கள்.

திரு.கணபதி ஸ்தபதியார் 'அவரது மகள்' என்று அன்புடன் அழைக்கும் பூம்புகார் மாதவிச் சிற்பத்தைச் செய்யும் போது, அல்லும் பகலும் அதே சிந்தனையாக இருப்பார். உணவு உண்ணும் போது கூட என்ன சாப்பிடுகிறோம் என்ற நினைவே இல்லாமல்



திருமதி தெக்ஷிணாவதி திருமதி ஓல்கா என்ற இரஷ்ய நாட்டுப் பெண்ணுக்குப் பட்டுச் சேலை வழங்குகிறார்




திரு. கணபதி ஸ்தபதி மற்றும் திருமதி தெக்ஷிணாவதி திருமதி ஹில்டே லிங் என்ற ஜெர்மனிய நாட்டுப் பெண்ணும் அவரது குடும்பமும்



திரு.கணபதி ஸ்தபதி - திருமதி தெக்ஷிணாவதி (1952)



திரு.கணபதி ஸ்தபதியின் அறுபதாம் பிறந்த நாள் அன்று திருமணக் கோலத்தில்



திரு.கணபதி ஸ்தபதி - திருமதி தெக்ஷிணாவதி (2005)

சிந்தனை வயப்பட்டவராகவே உண்ணுவார். அப்போது, வேடிக்கையாக திருமதி தெக்ஷிணாவதி அம்மையார் கணவரிடம், ''என்ன சாப்பிடுகிறீர்கள் என்று தெரியுமா?'' என்று கேட்பாராம். ஸ்தபதியாரும் சிரித்துக் கொண்டே, ''நீ எதைப் போட்டாலும் நன்றாக இருக்கும், சாப்பிடுவேன் கவலைப்படாதே'' என்று கூறுவாராம். உண்மையிலேயே, அவ்வம்மையாரின் கைப்பக்குவம் மிகவும் அருமையாக இருக்கும்.

சமீபத்தில், டாக்டர் கலைஞர் திரு.கருணாநிதி அவர்கள் திரு.கணபதி ஸ்தபதியாருக்கு முரசொலி விருது வழங்கிய போது, திருமதி தெக்ஷிணாவதி அம்மையாரை மேடைக்கே வரவழைத்துப் பேசினார். அப்போது, அவர் வேடிக்கையாக, ''மாதவிச் சிற்பம் செய்யும் போது ஸ்தபதியாரை எப்படி உணர்ந்தீர்கள்?'' என்று சிரித்துக் கொண்டே கேட்டார்.

'செய்யும் தொழிலே தெய்வம்' என்பார்கள். அந்த தெய்வ உருவத்தையும், அது உறையும் கோவில்களையும் செய்யும் திரு.கணபதி ஸ்தபதியாருக்கு, எப்பொழுதும் செய்யும் தொழிலிலேயே மூழ்கிக் கிடக்கும் அவரைப் போன்றவர்களுக்குத் திருமதி தெக்ஷிணாவதி அம்மையாரைப் போன்ற அன்பே உருவான மனைவி கிடைத்தது, அந்த தெய்வ சங்கல்பம் அன்றி வேறு ஒன்றுமில்லை! இருவரும் பல்லாண்டு நீடுழி வாழ்க என வாழ்த்த் எங்களுக்கு வயதில்லை என்ற போதிலும், இறைவனை வணங்கி வேண்டிக் கொள்கிறோம்.

# நிறைவுரை

திரு.கணபதி ஸ்தபதி அவர்களின் வாழ்க்கை வரலாறு என்றும் கடலில் மூழ்கி எடுத்த முத்துக்களைத் தொகுத்து, மாலையாக வழங்கினேன். கடலில் இன்னும் பல நல்முத்துக்கள் இருந்திருக்கும். நேரமின்மை காரணமாகவும், புத்தகத்தின் கனம் காரணமாகவும், மறந்து போனதன் காரண்மாகவும் அவைகள் விடுபட்டிருக்கலாம். விடுபட்ட அத்தனை முத்துக்களும் தொகுக்கப்பட்டு அடுத்த நூலில் வழங்கப்படும்.

பொறுமையாக இந்த நூலைப் படித்த வாசக அன்பர்களுக்கு மிக்க நன்றி. இரசித்திருப்பீர்கள் என்று நம்புகிறேன். தங்களது மேலான கருத்துக்களை எழுதி அனுப்பினால், தவறுகளைத் திருத்திக் கொள்ள ஏதுவாக இருக்கும். இதில் கூறப்பட்டுள்ள செய்திகள் அனைத்தும், திரு.கணபதி ஸ்தபதி அவர்களின் வாய் மொழியாகவும், அதை ஆமோதித்தோ, மறுத்தோ கூறிய அவரது நெருங்கிய, நெடுநாள் பழகிய நண்பர்களது கூற்று மூலமாகவும் தொகுக்கப்பட்டுள்ளன. ஒவ்வொரு அத்தியாயமும் கணினியில் தட்டச்சு செய்தவுடன், பிரதி எடுக்கப்பட்டு திரு.கணபதி ஸ்தபதி அவர்களே சரிபார்த்து, திருத்தங்கள் செய்து கொடுத்தார்.

எவர் மனத்தையும் புண்படுத்தும் நோக்கத்தில் ஓர் எழுத்து கூட எழுதப்படவில்லை. அவ்வாறு எவரேனும் புண்பட்டிருந் தால் அது அறியாமல் செய்த பிழை என்று மன்னித்து அருள்க!

அவருடைய வரலாற்றை எழுத அனுமதித்த காரணத்திற்காக திரு.கணபதி ஸ்தபதி அவர்களுக்கும், இத்தகைய ஒரு மகத்தான அரிய வாய்ப்புக் கிடைத்தமைக்காக எல்லாம் வல்ல இறைவனுக்கும், மனமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

மீண்டும் சந்திப்போம்.

என்றென்றும் அன்புடன்,

இராஜலஷ்மி இராமநாராயணன்

## நூல் பற்றிய கருத்துரை - பாலமுருகனடிமை, இரத்தினகிரி



பாலமுருகனடிமை
அருள்மிகு பாலமுருகன் திருக்கோவில்
இரத்தினகிரி, கீழ்மின்னல் - 632 517.
வேலூர் மாவட்டம், தமிழ்நாடு.

STD : 04172
திருக்கோவில் : 266350, 267350
அலுவலகம் : 266330
பள்ளி : 266420
மருத்துவமனை : 266320

2.

25 . 5 . 2005.

அன்புடையீர்.

அருளாசி.

தமிழகம் தொன்று தொட்டே சிற்பக் கலையில் தலை சிறந்து வந்துள்ளது. இமயத்தில் கல்லெடுத்துக் கற்புக்கடம் பூண்ட கண்ணகிக்கு அன்றே சிலை எடுத்துச் சிறப்பித்தது தமிழகம்.

திருக்கோவில்களிலும் தன் சிற்பக் கலையைச் சிறந்த முறையில் வளர்த்து வந்தது. மயன் வழிவந்த சிற்பிகள் தமிழகத்தில் சிற்பக் கலைக்கு உயிர் கொடுத்துக் காத்து வளர்த்து வந்தனர். மாமல்லைச் சிற்பங்கள் - நடம், தஞ்சை பெரிய கோவிலுமே அதற்குச் சான்றாக விளங்குகின்றன.

"அறமும் மெய்ம்மையும் வெல்லுதல் விழைவு"

பாலமுருகனடிமை
அருள்மிகு பாலமுருகன் திருக்கோயில்
இரத்தினகிரி, கீழ்மின்னல் - 632 517.
வேலூர் மாவட்டம், தமிழ்நாடு.

STD 04172
திருக்கோயில் 266350 267350
அறநிலை 266330
பள்ளி 266420
மருத்துவமனை 266320

2

இன்றும் அந்தச் சிற்பக்கலையை - கட்டடக் கலையை - வாஸ்து சாஸ்திரத்தைப் பின் பற்றித் தொழில் புரிந்து காத்து வரும் சிற்பிகள் சமூகத்தின் பெருமையை உலக அளவில் உயர்த்தி வருகின்றனர்.

அவர்களுள் தலை சிறந்தவரே, பழைய சிற்பக்கலைக்கு புதுமெருகூட்டி வருபவரே, நம் பாரத நாடெங்கும் பல சிற்பங்களையும், திருக் கோவில்களையும், மண்டபங்களையும் கட்டடங்களையும் எழுப்பியதோடு உலகின் பல பாகங்களிலும் அக்கலையைச் சிறந்த முறையில் பரப்பிய பெருமையுந் தாம் பெற்றதோடு நம் நாட்டுக்கும் பெற்றுத் தந்தவர் - ஒருவர் சிற்பிகளின்



பாலமுருகனடிமை
அருள்மிகு பாலமுருகன் திருக்கோவில்
இரத்தினகிரி, கீழ்மின்னல் - 632 517.
வேலூர் மாவட்டம், தமிழ்நாடு.

STD : 04172
திருக்கோவில் : 266350, 267350
அலுவலகம் : 266330
பள்ளி : 266420
மருத்துவமனை : 266320

3

கண்டெடுத்த பின் தந்தை திரு. வை. கணபதி ஸ்தபதி அவர்கள்.

அவரின் தந்தையே ஒரு சிறந்த சிற்பக் கலை வல்லுனர். தென்மொழியும், வட மொழியும் கற்றுத் தேர்ந்தவர். அவர் தம் மகனை,

"தந்தை மகற்கு ஆற்றும் நன்றி அவையத்து
முந்தி இருப்பச் செயல்"
(குறள் - 67)

என்பதற்கேற்றபடி உருவாக்கினார்.

திரு. வை. கணபதி அவர்களும்

"மகன் தந்தைக்கு ஆற்றும் உதவி இவன்தந்தை
என்நோற்றான் கொல் எனும் சொல்"
(குறள் - 70)

என்பதற்கிணங்கப் பெரும்புகழ் ஈட்டித் தன் தந்தையின் நினைவுகளுக்குக் காணிக்கை யாக்கி வருகிறார்.

பாலமுருகனடிமை
அருள்மிகு பாலமுருகன் திருக்கோவில்
இரத்தினகிரி, கீழ்மின்னல் - 632 517.
வேலூர் மாவட்டம், தமிழ்நாடு.

STD 04172
திருக்கோவில் : 266350, 267350
அலுவலகம் : 266330
பள்ளி : 266420
மருத்துவமனை : 266320

4

இந்த எளிமையையும் இனிமையையும்
இரு கண்களாகப் போற்றி வருபவர்.
அவரின் உள்ளம் எவ்வளவு மென்மையோ
அவ்வளவு வன்மையும் உடையது.
எதை ஒன்றையும் ஆழ சிந்திப்பார் -
ஆகம விதிகளோடு ஒப்பிட்டுப்
பார்ப்பார். சரி என்று ஒரு முடிவுக்கு
வந்துவிட்டால் அதில் உறுதியாக
நிற்பார்.
தன் அன்பான கருத்துக்கு மறுப்புத்
தெரிவிப்பவர்களை உறவு முறையில்
அணுக்கமானவராக, தன் தந்தையை
விட மூத்தவராக இருந்தாலும்,
அரசியல் செல்வாக்குப் பெற்ற உயர்ந்த



பாலமுருகனடிமை
அருள்மிகு பாலமுருகன் திருக்கோவில்
இரத்தினகிரி, கீழ்மின்னல் - 632 517.
வேலூர் மாவட்டம், தமிழ்நாடு.

STD 04172
திருக்கோவில் : 266350, 267350
அலுவலகம் : 266330
பள்ளி : 266420
மருத்துவமனை : 266320

5

அலுவலர்களாக இருந்தாலும், அமைச்சராக இருந்தாலும் உண்மையை நிலை நிறுத்துவதில் உறுதியாக இருப்பார்.

அவர் எடுத்து வைக்கும் வாதங்கள் மறுப்பவர்களை வாயடைக்க வைக்கும். உண்மை என்று ஏற்றுக் கொள்ள வைக்கும்.

இந்தத் தொழில் தன் வாழ்க்கைக்கு உதவும் தொழில் என்றும், வருவாய் தரும் தொழில் என்றும் வருவாயையே முன்னிலைப் படுத்தி பணியைக் காலம் கடத்தாதவர்.

உரிய காலத்தை விட - ஒதுக்கிய திட்ட மதிப்பீட்டிற்குள் குறைவான செலவிலேயே எந்த வகையிலும் பணியில்



பாலமுருகனடிமை
அருள்மிகு பாலமுருகன் திருக்கோவில்
இரத்தினகிரி, கீழ்மின்னல் - 632 517.
வேலூர் மாவட்டம், தமிழ்நாடு.

STD : 04172
திருக்கோவில் : 266350, 267350
அலுவலகம் : 266330
பள்ளி : 266420
மருத்துவமனை : 266320

6

குறைகாணாத அவர்க்கு - பணியை
ஒப்படைத்தவர்கள் - எதிர் பார்ப்புக்கும்
மேலாக நிறைவாக செய்துக் கொடுப்பதில்
கண்ணும் கருத்துமாக இருப்பவர்.
இவர் ஒரு சமயத்தவராக இருந்தாலும் -
அச்சமயத்தில் பற்றுக் கொண்டவராக
இருந்தாலும் பிற சமயங்களையும் மதித்துப்
போற்றும் பெருந்தகை.
எச்சமயத்தவர் வந்து கேட்டாலும் அச்சமய
மரபுப்படி சிற்பம் செய்து கொடுத்து அவர்கள்
மனம் மகிழச் செய்வதில் முன்நிற்பவர்.
பணத்தை முன்னிறுத்திப் பணிசெய்து
இருந்தால் பாரதத்தின் செல்வச்சீமான்-
கள் பட்டியலில் இடம் பிடித்திருப்பார்.
ஆனால் கலையை முன்னிறுத்தியே பணி



பாலமுருகனடிமை
அருள்மிகு பாலமுருகன் திருக்கோவில்
இரத்தினகிரி, கீழ்மின்னல் - 632 517.
வேலூர் மாவட்டம், தமிழ்நாடு.

STD : 04172
திருக்கோவில் : 266350, 267350
அலுவலகம் : 266330
பள்ளி : 266420
மருத்துவமனை : 266320

7

செய்து வந்ததால் தமிழர்கள் மனத்திலும்
இடம் பிடித்திருக்கிறார்.
ஜப்பான் நிறுவனமொன்று இரண்டு
பெரிய புத்தர் சிலைகளைச் செய்து ஒன்றை
சாரநாத்திலும், மற்றொன்றை இலங்கை
யிலும் நிறுத்த முடிவு எடுத்தது. சிலைகளைச்
செய்ய இந்தியர்கள் தான் தகுதியானவர்
கள் என்று இந்திய அரசை அணுகியது.
அப்போதைய பாரதப் பிரதமர் இந்திரா
காந்தி அம்மையார் அவர்கள் இந்தியர்
-கள் - அதிலும் தமிழர்கள் தான் தகு-
தியானவர்கள் எனத் தமிழகத்தை
அணுகினார்.
தமிழகம் திரு. ம. வை. கணபதி ஸ்தபதியார்
தான் தகுதியானவர் என்று அவரை



பாலமுருகனடிமை
ஸ்ரீ
அருள்மிகு பாலமுருகன் திருக்கோவில்
இரத்தினகிரி, கீழ்மின்னல் - 632 517.
வேலூர் மாவட்டம், தமிழ்நாடு.

STD : 04172
திருக்கோவில் : 266350, 267350
அலுவலகம் : 266330
பள்ளி : 266420
மருத்துவமனை : 266320

அறிவியல் என்றால் சிற்பியின் பெருமையை-
திறமையை எவரால் எடைபோட முடியும்?!

பன்மொழிப் புலமையும் சிற்பக்கலையில்
அகரத்தில் னகரம் வரை அறிந்தவருமான
சிற்பியின் வரலாறு அவர் வடித்த, நிலை-
பெற்ற அற்புதச் சிற்பங்களைப் போன்று
அற்புதமானது. பலர் பயன்பெற்ற பாடம்
நிறைந்தது. கற்றுத் தேர்ந்து கடைப்
பிடிக்கத் தகுந்தது.

"சிற்பியே சிற்பமாகிறேன் கவிஞனே
கவிதையாகிறேன்" என்பது நம்
சிற்பியாரின் பொன்மொழி. அதற்கிணங்க
அவர் வடித்த ஒவ்வொரு சிற்பத்திலும்
அவரே வெளிப்படுகிறார்.

"அறமும் மெய்ம்மையும் வெல்லுதல் விழைவு"



பாலமுருகனடிமை
அருள்மிகு பாலமுருகன் திருக்கோவில்
இரத்தினகிரி, கீழ்மின்னல் - 632 517.
வேலூர் மாவட்டம், தமிழ்நாடு.

STD 04172
திருக்கோயில் : 266350, 267350
அலுவலகம் : 266330
பள்ளி : 266420
மருத்துவமனை : 266320

9

அவரால் உருவாக்கப்பட்ட எதைப் பார்த்தாலும் இது கணபதி ஸ்தபதியாரின் கைவண்ணம் என்ற நினைவு வராமல் இருக்காது.

திரு. வை. கணபதி ஸ்தபதியார் அவர்களின் வரலாற்றை திருமதி இராதாலட்சுமி இராம நாராயணன் அவர்கள் எழுதியுள்ளார். வழக்கம் போன்ற வரலாற்று நூல்களைப் போலல்லாமல் புதுமையான அமைப்புகள் எழுதியிருப்பது படிப்பவர்க்கு மகிழ்ச்சியைத் தரும்.

இறையோடு தொடர்பு கொண்டவர்கள் — இறை தொடர்பு கொண்ட சான்றோர்கள் பற்றி விளக்கிக் கொண்டுவரும் நியமமேயே வரலாற்றை ஒருமைப்



பாலமுருகனடிமை
அருள்மிகு பாலமுருகன் திருக்கோவில்
இரத்தினகிரி, கீழ்மின்னல் - 632 517.
வேலூர் மாவட்டம், தமிழ்நாடு.

STD : 04172
திருக்கோவில் : 266350, 267350
அலுவலகம் : 266330
பள்ளி : 266420
மருத்துவமனை : 266320

10

பக்தியுள்ள உத்தி போற்றத்தக்கது.
எல்லோருக்கும் புரியும் நடையில்
ஹாஸ்யபாக நல் நடைபோடுகிறது
இறைவனை இனிமையாக அறிய
இந்நூல் உதவும் என்பதில் ஐயமில்லை.
தமிழ்கூறும் நல்லுலகம் இதை
ஓதிக் கற்றுப் பயனடைய வேண்டும்
என வாழ்த்தும்

பாலமுருகனடிமை

"அறமும் மெய்ம்மையும் வெல்லுதல் விழைவு"



ஸ்ரீ இரெட்டியப்பட்டி ஸ்வாமிகள்
கருங்கல் திருக்கோயில் திருப்பணி கமிட்டி

இரெட்டியப்பட்டி அஞ்சல், நாகலாபுரம் வழி, தூத்துக்குடி மாவட்டம் - 628904
போன் : (04638) 242379

திரு.K.S. கிருஷ்ண மூர்த்தி

**(Proprietor, Ratna Fan House, T.Nagar, Chennai]**

பெரும் மதிப்பிற்குரிய கணபதி ஸ்தபதியார் என்ற பெயரைப் பிரித்து, 'கணபதி ஸ்தபதி – யார்?' என்று விளங்க வைக்கிற நூல் இது. நடை அழகு, கலை அழகு, சொல் அழகு, கருத்து அழகு அனைத்தும் கொண்ட காவியமாக நூல் ஆசிரியர் வடித்திருக்கிறார். அதற்காக, எவ்வளவு முறை பாராட்டினாலும் தகும். இந்த நூலை யார் எடுத்து படிக்க ஆரம்பித்தாலும் முழுவதும் படித்து விட்டுதான் மறுவேலை பார்ப்பார்கள். தொடர்கதை மற்றும் தொலைக்காட்சி தொடர் **(Episode)** பார்ப்பவர்கள், 'அடுத்த தொடர் எப்படி இருக்கும்?' என்று கற்பனை செய்வார்களே அப்படி இருக்கிறது.

''எனக்கு எதை எடுத்தாலும் வெற்றிதான் தோல்வியே கிடையாது. அதற்குக் காரணம் ஸ்ரீ இரெட்டியப்பட்டி ஸ்வாமிகள்தான்'' என்று திரு.கணபதி ஸ்தபதியார் கண்கலங்கி சொல்லும் போது மற்றவர்களும் கண்கலங்கி ஆனந்தப்படுவார்கள். அதுதான், வழிகாட்டும் வான் பொருளாகத்திகழும் ஸ்ரீ இரெட்டியப்பட்டி சுவாமிகளின் பெருமை.

இந்நூலில் எவ்வளவோ கருத்துக்கள் இருந்தாலும், குறிப்பாக என்னைக் கவர்ந்த இடத்தைப் பற்றி சொல்கிறேன். திரு.இராஜாஜி பற்றிய அத்தியாயத்தில் 'தோடா' பற்றிய குறிப்பில் 'தோடா – இதோ பாருடா உன் பரிசை' என்று சொல்வது போல் உள்ளது திரு.இராஜாஜி அவர்கள் அளித்த பரிசு.

'என் சக்தி முழுவதும் உனக்குத்தான்' என்பது போல் திரு.கணபதி ஸ்தபதியாரின் தந்தையார் 'ஸ்பரிச தீட்சை' அமைந்தது பெரும் பாக்கியம்.

உயர்ந்த இலட்சியம், உண்மை விரும்பும் உள்ளம், நிமிர்ந்த நன்னடை, தீட்சண்யமான பார்வை, ஆழ்ந்த அன்பு, அமைதியான கருத்தாழமிக்க பேச்சு, இன்னும் சிறிது நேரம் இவர் பேச்சைக் கேட்க மாட்டோமா, பிரிய மனமில்லையே என் று யாவரும் எண்ணும் இயல்பு கொண்ட திரு.கணபதி ஸ்தபதியார் ஒரு நடமாடும் தெய்வமாகக் காட்சி அளிக்கிறார் என்றால் அதற்குக் காரணம் அவர் உள்ளத்தில் குடி கொண்டு, அவரை ஆட்கொண்ட ஸ்ரீ இரட்டியப்பட்டி சுவாமிகள் என்றால் அது மிகையாகாது.

இந்நூல் சொல்வது அனைத்தும் வாய்மை, அதைப் படிப்பவர்க்கு வளமை, எடுத்துரைப்பவர்க்குப் பெருமை, அதை உணர்ந்தவர்க்குத் திண்மை, அதுதான் இந்நூலின் அருமை!!

இங்ஙனம்,

K.S. கிருஷ்ண மூர்த்தி,

ஸ்ரீ இரெட்டியப்பட்டி சுவாமிகளின்

சீடர்களில் ஒருவர்.

## திரு. கணபதி ஸ்தபதி நடத்தி வரும் நிறுவனங்கள்

## VAASTU VEDIC TRUST (Regd,)

Under which the following Institutions are being run
right from their inception

All the Institutions mentioned underneath are Headed &
Led by Dr.V.Ganapati Sthapati

Details of the Members are furnished separately for
each Institution

### Research, Development & Propagation

V.Ganapati Sthapati & Associates (Proprietorship)

V.Ganapati Sthapati & Associates (Firm) (Regd.)

International Institute of Mayonic Science & Technology

Vaastu Vedic Research Foundation

Vaastu Purusha - A Research Journal

Dakshinaa Publishing House

Vaastu Vedic Designers & Builders

சங்ககாலச் சிற்பச் சித்தன் மாமுனி மயன் விண்ஞானக்
கலைக்கூடம் (Mayan Memorial)

வை. கணபதி ஸ்தபதியின் கட்டிடக்கலை மற்றும்
சிற்பக்கலை தொழிற்பட்டறை
(வடகடும்பாடி மாமல்லை)

மயசபை

வேதமாக்கலை நூலகம் ஆய்வகம் தொழிலகம்

